# செம்மல் நபியைக் காணச் செல்வோம்!

صلى الله عليه وسلم


ஃபழீலத்துஷ் ஷெய்கு
அஸ்ஸெய்யிது அப்துல் அஸீஸ் மௌலானா
குஷ்ஹாலி தவ்வலல்லாஹு ஹயாதஹு


من روائع التراث بجزيرة سرنديب





صلى الله عليه وسلم


بقلم: شمس العارفين وعلم الاولياء وريحان الرسول
السيد عبد العزيز الموشجاري والرفاعي والحضرمي
دامت بركاتهم القدسية








# செம்மல் நபியைக் காணச் செல்வோம்!


ஆசிரியர் :

ஃபழீலத்துஷ் ஷெய்கு அஸ்ஸெய்யிது

அப்துல் அஸீஸ் மௌலானா குஷ்ஹாலி

தவ்வலல்லாஹு ஹயாதஹு





**JAMIYATU-ISA-ATHI-AHLIS-SUNNA**

No.105, Second Cross Street,

Colombo - 11. Sri Lanka.

Tel : 466113 Fax : 449055




இந்நூல்
அன்பளிப்புக்குரியது
விற்பனைக்கு அல்ல





நூலின் பெயர் : **செம்மல் நபியைக் காணச் செல்வோம்!**

நூல் ஆசிரியர் : ஃபழீலத்துஷ் ஷெய்கு அஸ்ஸெய்யிது அப்துல் அஸீஸ் மௌலானா குஷ்ஹாலி தவ்வலல்லாஹு ஹயாதஹு

பக்கம் : 144

தொடர் இலக்கம் : 23

முதற் பதிப்பு : *மார்ச் 2003*
*1424 முஹர்ரம்*

வெளியீடு : ஜம்இய்யது இஷாஅதி அஹ்லிஸ் ஸுன்னா
105, 2-ம் குறுக்குத் தெரு,
கொழும்பு-11. போன் : 01466113
E-Mail: seyedina@hotmail.com

அச்சிட்டோர் : ரப்பானியா பிரிண்டிங் பிரஸ்
12/25, காந்தி தெரு, ஜீவா நகர், திருச்சி-8.
இந்தியா. போன் : 91-431-2701685
E-Mail: rabbaniapress@yahoo.com

## Following are the Addresses where the Book is Available (Free of cost)

**INDIA**

KHANKQA - HE _ KHUSHALIYA
Chillagah Shariff Bihar Gad, Mourna Post
Dist. Muzafar Nagar, U.P. India

MUASKAR WOMEN'S ARABIC COLLEGE
Cholukkar Street,
KAYALPATNAM - 628 204. S. India

RABBANIA PRINTING PRESS
No.12/25, Gandhi Street, Jeeva Nagar,
TRICHY-620 008. S.India

**SRI LANKA**

JAMEEATU-ISHA-ATHI AHLIS SUNNAH
105, Second Cross Street, Colombo-11
Sri Lanka. Phone : 466113, Fax : 449055

**U.S.A.**

JAMEEATU-ISHA-ATHI AHLIS SUNNAH
436, Broad Street, Bristol Canaticut-06010
U.S.A.

**CANADA**

M. YUSUF VHQRA
15, Windsomg Court Markham, Ontario
Canada. L3r-8n7, 1-905-479-9483

**SOUTH AFRICA**

DARUL ULOOM PRETORIA
P.o. Box : 14296, Laudim-0037, Pretoria
Tel : (27-12-3741721



## சமர்ப்பணம்

الى الحقيقة الفردية روح الوجود وسر كل موجود سيد الثقلين وإمام
الحضرتين سيدنا محمد صلى الله عليه وآله وسلم
الى كل ولي وولية لله تعالى في مشارق الأرض ومغاربها حيث ما حلوا وحلت
أرواحهم في سر علم الله القديم
الى الذين تحيا الأرض بجاههم الى أحباب رسول الله صلى الله عليه وآله وسلم
الى الأقطاب والأفراد والأوتاد والأبدال والأطراز والأنجاب
والأغواث والأخيار والعرفاء والنقباء الى هؤلاء جميعا

## எமது வெளியீடுகளில் சில :

1. பாங்கில் திருநபியின் திருநாமம் கேட்டு விரல்களை முத்த வேண்டுமா?
2. கப்ருகளின் மீது கட்டிடம் கட்டலாமா?
3. இறைநேசர்களின் கப்ருகளை முத்தமிடலாமா?
4. ஸியாரத்தை நோக்கிப் பயணம்
5. வஸீலா
6. தராவீஹ் தொழுகையின் எண்ணிக்கை
7. அண்ணலாரின் அகமியம்
8. உத்தமர் உதயம்
9. மௌலிது ஓதுவோம் வாருங்கள்
10. முத்தமிடல்
11. சுந்தர நபியின் சுவனத்துப் பெற்றோர்
12. ஷியாக்களும் அவர்தம் கொள்கையும்?
13. எத்தி வைப்போம் வாரீர்
14. இன்னல்களை நீக்கிடும் இனிய திருநாமம்
15. தப்ஸீர் ஆயத் அந்நூர்



**JAMIYATU-ISA-ATHI-AHLIS-SUNNA**

No.105, Second Cross Street, Colombo - 11. Sri Lanka.

Tel : 466113 Fax : 449055





அல்ஜாமிஅத்துல் அஸீஸிய்யா அரபிக் கல்லூரி பேராசிரியர்
மௌலானா மௌலவி அல்ஹாஜ் ஹாபிழ்
**S.E.M.ஷெய்கப்துல் காதிர் மிஸ்பாஹி** தவ்வலல்லாஹு ஹயாதஹு
அவர்கள் மனமுவந்தளித்த

## மதிப்புரை

புகழனைத்தும் இறைவனுக்கே. சுகந்த ஸலாமும் சுந்தர ஸலவாத்தும் சுவனத்துப் பேரரசர் பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மீதும், அவர்கள் தம் பாதக்கமலத்தை கல்பில் பொத்தி கண்களில் முத்தி, முக்தி பெற்ற முஹிப்பீன்கள் அனைவர் மீதும் சுவனம் உள்ளளவும் உண்டாவதாக.

பூமான் நபியவர்களின் புனித ரௌழாவை நோக்கிப் புறப்படும் பயணத்தின் பலன்கள் பற்றி இந்நூல் மிகத் தெளிவான விளக்கங்களை உள்ளடக்கியுள்ளது.

பொதுவாக இவ்வுயர்வும் உன்னதமுமிக்க பயணத்தை மேற்கொள்வோருக்கு விண்ணகமும் மண்ணகமும் முகமன் கூறிட, சுவனத்து மகரந்தப் பொடிகளை அவர்கள் செல்லும் பாதைகளிலெல்லாம் தூவி வாழ்த்தி வழியனுப்ப இயற்கையும் துணைநின்று தென்றலை தூதுவிட்டு மகிழ்கிறது எனக்கூறின் அது மிகையன்று. ஏனெனில் கண்மணி நாயகத்தை சந்திக்க முனைபவர்கள் பாக்கியம் மிக்கவர்கள். தவிரவும் பாக்கியம் மிகப் பெற்றவர்களுக்குத் தான் இதன்பால் அவாவும் ஆர்வமும் உதயமாகும். அங்கே சென்று வந்தவர்கள் தன் ஆன்மாக்களை வென்று வந்தவர்களாவர். தன் பாவப் புழுதிகளை அந்த ஹுப்புர்ரஸூல் என்னும் பொங்குமா வெண்கடலில் கரைத்து புனித மிக்கவர்களாக திரும்பி வருகின்றனர். பூமான் நபியின் புனித ரவ்ழா ஷரீபில் நின்று அன்றலர்ந்த மலர்களாக மணம் வீச, இதயம் கமழ திரும்பி வருகின்றனர். இப்பாக்கியம் எல்லோருக்கும் கிட்டுவதில்லை.

வித்ரிய்யா தந்த வித்தகர் அபூபக்கருல் பக்தாதி அவர்களுடன் மாதிஹுர் ரஸூல் சதகதுல்லாஹில் காஹிரி அவர்கள், *"பாவத்தை சுமந்தவர்களே! பயகம்பர் அவர்களின் புனித பட்டணமாம் மதீனாவிற்கு உங்கள் பயணத்தை மேற்கொள்ளுங்கள். அங்கு தான் பாவங்கள் யாவும் போக்கப்படுகின்றன"* என தம் கவியில் கோடிட்டுக் காட்டுகின்றார்கள்.

அண்ணலார் நபிகள் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்களை நோக்கிப் புறப்பட்ட மரங்கள் வேரோடும் வேரடி மண்ணோடும் பெருமானாரின் முன் வந்து சஜ்தா செய்த நிகழ்வு எல்லோருக்கும் தெரிந்த ஒன்று. அதுபோன்றே நீரோடையின் அக்கரையில் கிடந்த பாறாங்கல் ஒன்று பயகம்பர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை நோக்கிப் புறப்பட்டு அவர்கள் முன்னே வந்தடைந்து கலிமா கூறியதும் சரித்திரம் கூறும் உண்மை. இதுபோன்ற நிகழ்ச்சிகள் மூலம் பெருமானார் அவர்களை நோக்கி மேற்கொள்ளப்படும் பயணத்திற்கு இயற்கையும் தன் நிலைமாறி துணை செய்கின்றது என்ற ரகசியம் தெரிய வருகிறது. ஆம்! நெடிய மரம் வேரோடு அசைந்து வர அதனைச் சூழ்ந்துள்ள திடமான மண் தன்னை நீராக மாற்றி அதற்கு வழி விடுகிறது. திடப் பொருளான பாறாங்கல் பெருமானாரை நோக்கி அது நீரில் புறப்பட, திரவப் பொருளான நீர் அக்கல்லை மூழ்கடிக்காமல் தானும் திடப் பொருளாக மாறி தனது முதுகில் சுமந்து சுவர்க்கத்து நபியவர்களிடம் அழைத்து வந்து சேர்க்கிறது.

எனவே ஏந்தல் நபிகள் அவர்களை நோக்கி எடுத்து வைக்கப்படும் ஒவ்வொரு அடியிலும் பாதம் பதிந்த மண் யாவும் ''மர்ஹபா'' எனக் கூறி வாழ்த்தி வழியனுப்புகிறது என்பது திண்ணம்.

மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு பயணம் மேற்கொள்ளக் கூடாது என தவறாக பொருள் புரிந்தால், ஹதீதுக்களையே இவ்வுலகில் தோன்றியிருக்காது. குறிப்பிட்ட அந்த ஹதீது உள்ளிட்ட ஏனைய ஹதீதுகள் யாவும் அதனைத் தேடிப் புறப்பட்ட பயணத்தின் விழைவால் கிடைத்ததன்றோ. பல ஆயிரம் மைல் தூரத்தை ஒரே ஒரு ஹதீதிற்காக பயணம் மேற்கொண்டோர் பலருண்டு. ''ஹதீதைத் தேடிப் பயணம்'' என அல் கதீப் பக்தாதி அவர்கள் ஒரு நூலையும் எழுதியுள்ளார்கள்.

''மூன்று பள்ளிகளைத் தவிர பயணம் மேற்கொள்ள வேண்டாம்'' என்ற ஹதீதிற்கு இந்நூலில் தரப்பட்டிருக்கும் விளக்கங்கள் சாலச் சிறந்தவை. "இம்மூன்று பள்ளிகளைத் தவிர வேறு பள்ளிகளுக்கெனப் பயணத்தை மேற்கொள்ள வேண்டாம்" என்பது தான் பொருள் என குறைந்த பட்சம் அரபு இலக்கண ஞானம் உள்ளவர்கள் விளங்கிக் கொள்வர்.

அண்ணல் கண்மணி நாயகம் அவர்களது புனித ரவ்ழாவை தரிசித்து தன்னைத் தூய்மைப்படுத்திட முனைவோருக்கு இந்நூல் ஓர் வரப் பிரசாதம். அப்பயணம் பற்றிய உண்மையான விளக்கங்களைப் பெற ஆசையுள்ளோருக்கு இந்நூல் ஓர் கலங்கரை விளக்கு.

கருணையுள்ள நாயன், சங்கைமிகு ரைஹானுர் ரசூல், ஷம்ஸுல் ஆரிபீன், அபுல் கைராத், நகீபுல் அஷ்ராப், அஸ்ஸெய்யித் அஷ்ஷெய்கு அப்துல் அஸீஸ் மௌலானா குஷ்ஹாலி அவர்களுக்கு இதுபோன்ற பல பயன்மிக்க நூல்களை தந்திட துணை நிற்பானாக. ஆமீன்.





# என்னுரை

الحمد لله الذي من علينا برسوله، وهدانا به إلى سواء سبيله ، وأمرنا بتعظيمه وتكريمه وتبجيله ، وفرض على كل مؤمن أن يكون أحب إليه من نفسه وأبويه وخليله ، وجعل اتباعه سبباً لمحبة الله وتفضيله ، ونصب طاعته عاصمة من كيد الشيطان وتضليله ، ويغنى عن جملة القول وتفصيله رفع ذكره وما أثنى عليه في محكم الكتاب وتنزيله ، صلى الله عليه وسلم صلاة دائمة بدوام طلوع النجم وأفوله.

சென்ற வருடம் ஏப்ரல் மாதம் 27-4-2001 அன்று தினகரன் பத்திரிக்கையில் இஸ்லாமிய சுடர் என்னும் பகுதியில் மௌலவி அல்ஹாஜ் எம்.ஆர்.எம்.ஸில்மி நூரி அஸ்ஹரி அவர்கள் மூலம் ஹாஜிகள் ரௌழா ஷரீபை தரிசித்தல் என்னும் தலைப்பில் கட்டுரையொன்று பிரசுரமாயிற்று. இதில் அவரது கட்டுரை முழுவதும் கருத்துக்களை திருடிய பின்னரே பிரசுரிக்கப்பட்டது என்பது ஒரு புறமிருக்க,..

அதே பத்திரிக்கையின் 11-5-2001ம் தேதியன்று அதே பகுதியில் ஜனாப் என்.பி.ஜுனைத் என்பவரால் மேற்படி கட்டுரைக்கு மறுப்புக்

கட்டுரையொன்று பிரசுரமாயிற்று. அதற்கு பதிலளிக்க மௌலவி ஸில்மி பல்வேறு முயற்சிகளை மேற்கொண்டார். அரசியல்வாதிகள் பலர் மூலமாகவும் முயற்சிகள் பல செய்தும் கடைசிவரை பதிலளிக்க முடியாது போயிற்று. அத்துடன் அவரது எழுத்துச் சுதந்திரமும் பறிபோனது.

எனவே அன்று அவர் தடுக்கப்பட்டதால் தான் இன்று ஜுனைத் அவர்களின் கட்டுரைக்கு மறுப்புத் தெரிவித்து தெளிவானதொரு விளக்கமளிக்க சந்தர்ப்பமளித்த அல்லாஹ்வை நான் மனமாற உளமாறப் புகழ்கிறேன்.

மேலும் ஸியாரத்திற்கென்று பிரயாணம் செய்வதும், பாராளும் பயகம்பர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் செய்த பாவத்திற்காக பரிகாரம் தேடுவதும், நபியவர்கள் நமது அப்பாவத் திற்காக இறைவனிடம் ஷபாஅத்துச் செய்வார்கள் என்று நம்பு வதும் சாத்தியமானதே என்பதற்கு மூஸா பின் ஹிலால், மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனீ, உத்பீ போன்றோரால் அறிவிக்கப்படும் ஹதீஸ்களை உலகிலுள்ள அனைத்து சுன்னத் வல் ஜமாஅத்தினரும் எடுத்துக் காட்டுகின்றனர். இதைத்தான் மௌலவி ஸில்மியும் எடுத்துக் காட்டினார்.

இனி ஸியாரத்திற்காக பிரயாணம் செய்யலாமென்று சொல்லப் பட்ட ஹதீஸ்களில் மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹ்னியால் அறிவிக்கப்பட்ட ஹதீஸும் ஒன்றாகும். இவரை இமாம் அபூ தாவூத் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் உறுதியானவரல்ல என்பதாக சொல்லியிருப்பதாலும், இவர் ஒரு பலவீனமானவர் என்பதாலும், ஸிஹாஹ் ஸித்தாவின் ஆசிரியர்கள் மட்டுமின்றி இமாம் அஹ்மத் போன்ற நம்பிக்கைக்குரியவர்கள் யாருமே இவரால் அறிவிக்கப் படும் ஹதீஸை தமது நூல்களில் பதிவுசெய்யவில்லையாதலால் நாங்கள் ஏற்றுக்கொள்ள மாட்டோமென்று சொல்லியிருந்தால் இது நியாயமான ஒன்றுதானென நாமும் ஒரு வாதத்திற்காக ஏற்றுக் கொண்டிருப்போம். ஆனால் அவரால் அறிவிக்கப்படும் ஹதீஸில் காணப்படும் விஷயத்தையே மறுத்தாக வேண்டுமென்று சொன்ன தற்குரிய காரணம் தான் என்னவென்று இதுவரை நமக்கு புரியாத புதிராக உள்ளது. ஆதலால் அதற்குரிய காரணத்தை விளக்கித் தருமாறு ஜனாப் ஜுனைதுக்கு இதனை மனுவாக அனுப்புகிறோம்.

இன்னும் ஒரு அறிவிப்பாளரை பெரியார்களிலுள்ள எவரேனும் ஒருவர் (ஜர்ஹ்) குறைகூறி விட்டால் அதை மட்டும் ஆதாரமாக



வைத்து அவரது அறிவிப்பு ஏற்கத்தக்க ஒன்றல்ல எனத் தீர்ப்பு வழங்கி விடுவது அறிஞர்களது பண்பல்ல.

மேலும் ஹதீஸுக் கலையின் ஓர் அங்கமான அறிவிப்பாளர்கள் பற்றிய ஆய்வுக்குரிய முன்னோடிகளான யஹ்யா பின் முயீன், அலீ பின் முத்னீ, அம்ர் பின் அலீ, உஸ்மானுப்னு ஸயீத், தாரமி, இப்னு அம்மார், நஸயீ போன்றோரால் குறை காணப்பட்ட ஒருவ ரின் அறிவிப்பை இமாம் முஸ்லிம் அவர்கள் அறிவித்திருப்பதை இவர்கள் பார்க்கவில்லையா? இன்னும் இமாம் முஸ்லிமின் பார்வை யில் அவர் நம்பிக்கைக்கு உரியவராகத்தானே இருந்திருக்கிறார்? அத்துடன் இவரை குறைகண்டவர்கள் குறைந்த பட்சம் அதற்குரிய சரியான காரணத்தையாவது சொல்லியிருக்க வேண்டுமா வேண்டாமா?

இந்நிலையில் மஸ்லமாவையோ அல்லது மூஸாவையோ சிலர் குறைகூறும் அதேநேரம் வேறுசிலர் அவர்களை நம்பிக்கைக்குரிய வர்களென்று கூறியிருப்பதும் இவர்களுக்கு தெரியத்தானே செய் யும்? இன்னும் அவர்களது அறிவிப்பில் காணப்படும் விஷயம் பொய்யானது என்றால் அதைத் தெளிவுபடுத்துவதை விட்டு விட்டு அறிவிப்பாளர்களை குறைகூறி இவர்கள் தமது நேரத்தை எதற்காக வீணாக்குகிறார்கள்?

அடுத்து உத்பியுடைய அறிவிப்பில் காணப்படும் சம்பவ மாகும். இதே போன்றதொரு சம்பவத்திற்குரிய நிகழ்ச்சி தப்ஸீர் குர்துபியிலும் பதிவு செய்யப்பட்டுள்ளது. இதில் இரு சம்பவங் களும் வெவ்வேறாயினும் இரண்டிலுமுள்ள விஷயத்தின் கருத்து ஒன்றுதான். இவ்வாறே உத்பியின் அறிவிப்பில் காணப்படும் சம்பவத்தில் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கனவில் காட்சி தந்தது பற்றி சொல்லப்படுவதைப் போல, நபியவர்களின் ரௌழா ஷரீபிலிருந்து நீர் மன்னிக்கப்பட்டு விட்டீர் என்னும் அசரீரி கேட்டதாக தப்ஸீர் குர்துபியில் காணப்படும் சம்பவத்திலும் பதிவாகியுள்ளது.

இவ்விரு சம்பவங்களில் உத்பியுடைய சம்பவத்தை இமாம் இப்னு கஸீர் ரஹிமஹுல்லாஹ்வும், தப்ஸீர் குர்துபியிலுள்ள சம்பவத்தை இமாம் குர்துபி, இமாம் சுயூத்தி ரஹிமஹுமல்லாஹ் போன்றோர் குறிப்பிடுகின்றனர். இம்மூவரும் திருக்குர்ஆனின் விரிவுரையாளர்களாகும். இனி உத்பியால் அறிவிக்கப்படும் சம்பவத்திற்கு அறிவிப்பாளர்கள் இல்லையாதலால் அதை ஏற்க

முடியாதென்பதாக இவர்களிடம் ஹதீஸ்கலை அறிஞரான அப்துல் ஹாதி என்பவர் சொன்னதாகவும், இவ்வாறே பூரணமான அறிவிப் பாளர்களைக் கொண்ட ஒரு சம்பவத்தில் இடம்பெறும் ஒருவரைப் பற்றி பல பெரியார்கள் அவரை பொய்யர், ஹதீஸ்களை இட்டுக் கட்டுபவர் எனக் கடுமையாக குறைகூறியிருந்ததால் அவரையும் ஏற்றுக்கொள்ள முடியாதென்று இவர்களிலுள்ள ஹதீஸ் மற்றும் பிக்ஹுக் கலையின் அறிஞரென்று பேசப்படும் பஷீர் ஸஹ்சுவானி என்பவரும் கூறுகிருர்களாம்.

மேலும் சரியான அறிவிப்பாளர்கள் இல்லையாதலால் இந்த ஹதீஸை ஏற்றுக்கொள்ள முடியாதென்று அப்துல்ஹாதி சொன்ன தாகக் கூறிய ஜுனைத், பின்னும் இஸ்னத் என்னும் அறிவிப்பாளரது வரிசை என்பது இஸ்லாமிய சட்டத்துறையின் பிரதானமான கிளைகளில் ஒன்றெனப் பேசப்படுவதால் அது ஹதீஸுக்கலையின் அன்னையாகும். ஆதலால் இஸ்னத் என்பது இல்லையெனில் ஒவ்வொருவனும் தான் விரும்பியதையெல்லாம் சொல்லுவான் என்பதை இமாம் இப்னு முபாரக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் சொன்னதாக முஸ்லிம் ஷரீபின் முன்னுரையிலிருந்து எடுத்துக் காட்டியவர்,...

அதேநூலின் அதேபகுதியில் நிச்சயமாக கல்வியும் தீன் (மார்க்கம்) தான். ஆகையால் உங்களது தீனை யாரிடமிருந்து நீங்கள் பெறுகி நீர்கள் என்பதை கவனித்துக் கொள்ளுங்கள். (உண்மையாளர்க ளிடமிருந்தும், மார்க்கப் பேணுதலுடையவர்களிடமிருந்தும் நீங்கள் உங்களுடைய தீனை கற்றுக் கொள்ளுங்கள்.) என்னும் இப்னு ஸீரீனுடைய கருத்தை இவர்கள் கவனிக்கவில்லை போலும். அல்லது இவர்களது உள்ளத்தை அல்லாஹ் சத்தியத்தை உணர்ந்துகொள்ள முடியாத அளவுக்கு அதில் திரையிட்டு விட்டான் போலும்.

அடுத்து இஸ்னத் என்பது மிக மிக முக்கியமான ஒன்றுதானு யினும் அதேநேரம் அந்த இஸ்னத் ஏன் முக்கியமாக்கப்பட்டதென் பதையும் இதே இப்னு ஸீரீன் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறு வதைப் பாருங்கள்.

قال: لم يكونوا يسألون عن الإسناد فلما وقعت الفتنة قالوا سموا لنا رجالكم فينظروا إلى أهل السنة فيأخذ حديثهم وينظر إلى اهل البدع فلا يأخذ حديثهم

**"ஆரம்ப காலங்களில் மக்கள் ஹதீஸ்களை பயான் செய்யும் போது**



**ஸனதுகளை பற்றியெல்லாம் கேட்க மாட்டார்கள். ஆனால் ராபிழிய் யாக்கள், காரிஜிய்யாக்கள், முர்ஜிய்யாக்கள், கத்ரிய்யாக்கள் போன்ற பித்அத்வாதிகளின் குழப்பம் தோன்றியதற்குப் பின்னல் மக்கள்: நீங்கள் கூறும் ஹதீஸ்களுக்குரிய அறிவிப்பாளர்களைச் சொல்லுங்கள் என்று கேட்கலாயினர். அதன்பின் அவர்கள் சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவர் தானு என்பதும் ஆராயப்பட்டு அதன் பின்னரே அவர்களால் அறிவிக்கப்படும் ஹதீஸ் ஏற்கப்பட்டது. அவ்வாறு இல்லையேல் ஏற்கப்படுவதில்லை"** என்பதாக முஸ்லிம் ஷரீபின் முகவுரையில் கூறப்பட்டுள்ளது.

எனவே தற்போது நம்மிடையே உள்ள நபிமொழிக் கிரந்தங்கள், குர்ஆனின் விரிவுரைகள், வரலாற்று நூல்கள் போன்றவை அனைத் தும் சுன்னத் வல் ஜமாஅத்தினரால் உருவாக்கப்பட்டது என்பது இதன்மூலம் தெளிவாகி விட்டதென்பதோடு அவர்கள் எதனை தமது நூல்களில் பதிவு செய்துள்ளார்களோ அவையனைத்தும் நிச்சயமாக நம்பத் தகுந்தவைகளே என்பதையும் நாம் புரிந்து கொள்கிருேம்.

மேலும் சுன்னத் வல் ஜமாஅத்தினர் தான் நல்லடியார்கள் என்பது இமாம் முஸ்லிமுடைய கொள்கையாகவும் இருந்துள்ளது. அத்துடன் அன்று ஒரு ஹதீஸைச் சொல்பவர் சுன்னத் வல் ஜமா அத்தைச் சார்ந்தவரா என்பதைப் பார்த்தனர். அவ்வாறு இல்லை யேல் அவரை விட்டு விட்டனர். ஆதலால் இப்போது நம்மால் எடுத்துக் காட்டப்படும் விஷயங்கள் அனைத்தும் சுன்னத் வல் ஜமா அத்தினரால் சொல்லப்பட்டவை தானு என்பதை நாம் உன்னிப் பாக கவனிக்கக் கடமைப்பட்டுள்ளோம். இன்னும் அன்று ஒரு ஹதீஸைச் சொல்பவர் சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவர் தானு என்பதை வைத்துத்தான் ஏற்றுக் கொண்டார்களென்று நாம் சொல்லவில்லை. மாருக இமாம் முஸ்லிம் அவர்கள் தமது நூலின் முகவுரையில் இதனை உள்ளங்கை நெல்லிக்கனி போல குறிப்பிடு கிருர்கள். இதுபோன்றே ஹதீஸை அறிவிப்பவர் தமது முன்னேர் களை அவமானப்படுத்தாதவராயும் இருக்க வேண்டும். இதுவும் ராவிகளிடம் பேணப்பட்ட ஒரு முக்கியமான நிபந்தனையாகும். இதுபற்றி அல்லாமா இப்னு முபாரக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள்,...

دعوا حديث عمرو بن ثابت فإنه كان يسب السلف.

**"அம்ருப்னு ஸாபித்திடமிருந்து பரிந்துரை செய்யப்பட்ட ஹதீஸை விட்டு விடுங்கள். ஏனெனில் அவர் தமது முன்னேர்களை**

**பழிப்பவராக இருக்கிறார் என்பதாக மக்கள் திரண்டிருந்த கூட்டத்தில் சொன்னார்கள்."**

எனவே ஹதீஸை அறிவிப்பவர் பித்அத்தியாக மட்டுமல்ல. தமது முன்னோர்களை அவமதிக்காதவராயும் இருக்க வேண்டும். இதன் அடிப்படையில் தமது முன்னோர்களை அவமதிப்பவராயும் பித்அத்தியாகவும் இருக்கின்ற இப்னு தைமிய்யா மற்றும் அப்துல் ஹாதி போன்றோரின் கருத்துக்களை நாம் ஒருபோதும் நம்பக் கூடாது என்பது நமக்கு சூரியனைப் போன்று பிரகாசமாயிற்று.

ஆதலால் நாம் ஆதாரமாக எடுத்துக்காட்டும் நூல்களும் அதன் ஆசிரியர்களும் சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவர்கள் தானென்பதும் அவர்கள் தமது நூல்களில் எடுத்துக்காட்டும் விஷயங்களனைத்தும் நம்பிக்கைக்குரியவைகளே. இவ்வாறே இவர்கள் ஆதாரமாக எடுத்துக் காட்டும் நூல்களும் அதன் ஆசிரியர்களும் பித்அத்திகளும் ஸலபுகளான முன்னோரைப் பழிப்பவர்களுமாகும். எனவே இவர்களது கருத்துக்களனைத்தும் வடிகட்டிய பொய்யும் அல்லாஹ் ரஸூல் மற்றும் நல்லோர் அனைவரின் சாபத்திற்கும் உரியதாகும்.

அடுத்து இவர்கள் ஸியாரத்திற்காகப் பிரயாணம் செய்வது பாவமான காரியமென்று வாதிப்பார்களாயின் இவர்கள் தமது தலைக்கு மேல் வைத்து வணங்கிக் கொண்டிருக்கும் முஜஸ்ஸமியா (இறைவனுக்கு உருவம் அமைத்தவரா)ன இப்னு தைமிய்யாவுடைய சிஷ்யர்களில் ஒருவரான தஹபி என்பார் அச்செயலை வணக்கங்களில் சிறந்ததென்றும், மற்றோர் சிஷ்யரான இப்னு கஸீர் என்பவர் உத்பியுடைய சம்பவத்தை ஆதாரமாக எடுத்துக் காட்டுவதும், ஷைகுல் இஸ்லாம் இமாம் பைரூஸாபாதி என்பவர் அது நன்மையான காரியமென்றும், மூன்று பள்ளிகள் பற்றிய ஹதீஸை வைத்து ஸியாரத்திற்காக பிரயாணம் செய்வதை ஹராம் என்பதற்கு ஆதாரப்படுத்துவோர் எதை எதற்கு ஆதாரமாக்க முடியும் என்பதற்குரிய விளக்கமோ இஸ்த்தின்பாத்திற்கான ஆற்றலோ இல்லாதவர்களென்றும், அவர்கள் அல்லாஹ்வுக்கும் ரஸூலுக்கும் பகிரங்கமாக துரோகம் இழைப்பவர்களென்றும், இமாம் இப்னு அஸாகிர் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் ஸியாரத்தால் நமது பாவங்கள் அழிக்கப்படும் என்று கூறுவதற்கும் இவர்கள் என்ன பதில் சொல்லப் போகிறார்கள்?

ஸியாரத்திற்காக பிரயாணம் செய்யும் விஷயத்தில் இப்னு



தைமிய்யாவும், அப்துல் ஹாதியும் தமது முன்னோர்களுக்கு மட்டுமல்ல. குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் கூட தமது சுயவிருப்பப்படி விளக்கம் தருவதுடன் அதற்கு முற்றிலும் மாறான கருத்துக்களையே கூறுகின்றனர் என்பதாக அவர்களது காலத்திலிருந்தவர்களிலிருந்து இன்றுவரையுள்ள இஸ்லாமிய அறிஞர்களனைவரும் கூறுவதால் உங்களைப் போன்ற ஒருசிலரே அவர்களை தலையில் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடுகிறீர்கள் எனில் இது நீங்கள் உலக ஆதாயத்திற்காக மார்க்கத்தை விற்கும் வியாபாரிகள் என உங்களை சொன்னால் அது மிகையல்ல என்றுதான் சொல்ல வேண்டும்.

8-4-2001ல் வெளியான தினகரன் பத்திரிக்கையில் மௌலவி சில்மியின் கருத்துக்கு எதிர்கருத்துத் தெரிவித்த அதேநபர் முதலாம் இலக்கமிட்ட ஹதீதை ஃபுழாலா இப்னு ஸஃத் என்பாரை காரணம் காட்டி அந்த ஹதீதை ஏற்க முடியாதென்பதற்கு வபாவுல் வபாஃபீ அக்பாரி தாரில் முஸ்தபா என்னும் அல்லாமா சம்ஹூதியின் நூலை ஆதாரமாகக் காட்டியிருந்தார். ஆனால் அந்நூலின் பக்கம் 1349-1387ம் பக்கம் வரையான கருத்துக்களை எல்லாம் அவர் ஏன் விட்டு விட்டார்? பின்னும் ஃபுழாலா தொடர்பாக இமாம் உகைலியின் கருத்தை எடுத்துக் காட்டியவர் அதன் கடைசி வரியான "வஹாதா யுர்வா பிஙைரி ஹாதல் இஸ்னாதி மின் தரீக்கின் ஐழன் ஃபீஹிலீனுன்" இவரால் எடுத்துக் காட்டப்பட்ட தகவல் வேறு வகையான அறிவிப்பாளர்களாலும் அறிவிக்கப்பட்டுள்ளது. அதிலும் "லீன்" என்னும் மெல்லினத்திற்குரிய பதம் இருக்கின்றதென்பதை இவர் ஏன் கூறவில்லை?

அடுத்து இரண்டாம் இலக்கமிடப்பட்ட ஹதீதை பொய்யாக்குவதற்காகவே ஹஃப்ஸ் இப்னு அபீதாவூத் என்பாரை காரணங் காட்டி அவரைக் குறித்த குறைபாடுகளுக்குரிய குற்றச்சாட்டுக்களை மட்டும் நூற்களின் பக்கம், பாகம் போன்றவற்றைக்கூறி அடுக்கியிருக்கிறார். ஆனால் நாம் அவருக்கு தஹ்தீபுல் கமால் என்னும் நூலின் 2வது பாகம், 221ம் பக்கத்தை எடுத்துப் பார்த்து விளக்கம் தருமாறும், இவ்வாறே இமாம் பைஹகீ ரஹிமஹுல்லாஹ் அவர்களின் அஸ்ஸுனனுல் குப்ராவை ஆதாரமாகக்காட்டியவர் அந்த ஹதீத் பதிவாகியுள்ள பாடத்தின் முதல் மூன்று ஹதீதுகளுக்கும் என்ன விளக்கம் தரப்போகிறார்?

மேலும் இமாம் புகாரி, முஸ்லிம், பைஹகீ, இப்னு ஹஜர் அஸ்கலானி, அஹ்மத் பின் ஹன்பல், நஸாயி, இப்னு ஹிப்பான், தாரகுத்னீ போன்றோரை ஹதீத் கலையின் மேதையெனக் கூறும்

ஜனாப் ஜுனைத் அவர்கள், மேற்கண்ட இமாம்களில் ஒருவராவது ஸியாரத்திற்காக பிரயாணம் செய்வதை பாவமான காரியமென்றும், அப்பயணத்தில் தொழுகையை சுருக்கித் தொழ முடியாதென்றும் கூறியதற்குரிய தெளிவான ஒரேயொரு ஆதாரத்தையாவது அவரால் காட்ட முடியுமா?

அடுத்து மூன்றும் இலக்கமிடப்பட்ட ஹதீதுக்கு பதிலளிப்பதற்காக கஷ்ஃபுல் கிஃபாவை ஆதாரமாக எடுத்தவர் "வமஅஹாஸா ஃபலா யன்பஙில் ஹுக்மு அலைஹி பில் வழ்யி ஃபததப்பர்" "இந்த ஹதீத் இட்டுக்கட்டப்பட்டது, பலவீனமானது என ஹதீத் கலை அறிஞர்கள் கூறினாலும் இந்த ஹதீதை இட்டுக்கட்டப்பட்டதெனத் தீர்ப்பளிக்கப்பட மாட்டாது. ஏனெனில் அதை நீயாக சிந்தித்துக்கொள்" என்னும் வாக்கியத்தை சொல்லாமல் விட்டுவிட்டது ஏன்? இவைகளுக்கெல்லாம் தக்க பதில் தருவதோடு இந்நூலில் சொல்லப்பட்டுள்ள "ஜர்ஹ் மற்றும் தஃதீல்" சம்பந்தமான பகுதிக்கும் பதில் தருமாறு ஜனாப் ஜுனைதிடம் வினயமாகக் கேட்டுக் கொள்கிறோம்.

சகோதரர்களே! நபிகள் நாயகம் முஹம்மத் முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரௌழாவை ஸியாரத்துச் செய்வதானது ஹஜ்ஜுக்குரிய கடமைகளில் ஒன்றல்ல தான். இருப்பினும் வாழ்க்கையில் ஒரு முறையேனும் ஹஜ்ஜுச் செய்வதற்குரிய பாக்கியத்தை பெற்றவன் நபியவர்களின் புனிதமிகு ரௌழாவை தரிசிக்காமல் திரும்பி வருவதானது அவனுடைய ஈமானின் பூரணத்துவத்தை எடுத்துக்காட்டுவதாக அமையாது. மேலும் இந்நூலைகொண்டு உங்களோடு நாம் உரையாடுவதற்குரிய காரணம் என்னவெனில் நபியவர்களின் புனிதமிகு ரௌழாஷரீபை தரிசிப்பதற்காக பிரயாணம் செய்யலாம் என்பதை ஆதாரப்படுத்துவதற்காகத்தான். அதையே ஒரு சம்பாஷணையாக நாம் கையாண்டிருப்பது இங்கே குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

யா அல்லாஹ்! உனது ஹபீபுடைய மகிமையை எடுத்துச் சொல்ல கையாண்ட இம்முயற்சியை அவ்வுத்தமத் தூதரின் பொருட்டால் ஏற்றுக் கொள்வாயாக. மேலும் அந்த ஜோதியின் புனிதமிகு ரௌழா ஷரீபை தரிசிக்கும் நல்வாய்ப்பையும் நல்குவாயாக. யா அல்லாஹ்! இந்நூலின் பொருட்டால் எங்களது பெற்றோர்களது கப்ருகளை சுவர்க்கப் பூங்காவாக்குவாயாக. இன்னும் உனது ஹபீபின் திருவதனத்தை எங்களது நாதாக்களில் காணும் உயர் பாக்கியத்தையும் அருள் புரிவாயாக. ஆமீன்.



# ஸியாரத் செய்வதன் முக்கியம்

அண்ணலெங் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் குடும்பத்தினரோடு இணைந்து வாழுவதை மிகவும் வலியுறுத்துகின்றனர்.

لايدخل الجنة قاطع الرحم.

***"குடும்ப உறவை துண்டிப்பவன் சுவர்க்கம் நுழைய மாட்டான் என்றார்கள் ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்.***

குடும்ப உறவு என்பது மாநபியவர்களால் மிகக் கடுமையாக வலியுறுத்தப்பட்டு வந்த ஓர் விஷயமாகும். இதில் குடும்பம் எனச் சொல்லப்படும் போது அக்குடும்பத்திலுள்ளோர் அனைவரும் ஒன்றாக ஒரே ஊரில் வாழுவதுமுண்டு. அல்லது ஒவ்வொருவரும் வெவ்வேறு ஊர்களிலும், ஏன்! வெவ்வேறு நாடுகளில் கூட வாழுவதுண்டு. எது எப்படி இருந்தாலும் அவர்களது உறவை துண்டித்துக் கொள்வதென்பது கண்டிக்கத்தக்க ஒரு விஷயமாகும் என்பதில் சந்தேகம் எதுவுமில்லை. இன்னும் இயன்ற வரை அவர்களோடு தொடர்பு வைத்துக் கொள்வதுதான் கடமையும் கூட.

மேலும் நமது உறவினர்களோடு நாம் கடிதங்கள் வாயிலாகவும் தொலைபேசி மூலமாகவும் அவ்வப்போது தொடர்பு கொள்வதையும் பார்க்கிறோம். சமயங்கள் வாய்க்கும்போது அல்லது விசேஷமான நாட்களில் அவர்கள் வசிக்கும் இடங்களுக்குச் சென்று அவர்களை சந்தித்தும் கொள்கிறோம். ஏன் தெரியுமா?

زرغبا تزدد حبا.

**"விட்டு விட்டு சந்தித்துக் கொள்ளுங்கள். அதனல் பாசம் அதிகரிக்கும் என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்.**

அவ்வாறுயின் தொலைதூர நாடுகளில் வசிக்கும் சகோதரர்களை, உற்றுர் உறவினரை சந்திக்க வேண்டுமானல் பிரயாணம் செய்ய வேண்டிய அவசியம் நேருகிறதல்லவா! இதற்காக பிரயாணம் செய்யலாமா எனக் கேட்கப்பட்டால், உமக்கென்ன பைத்தியமா? இதை கூடாதென்று யார் சொல்வார்கள்? அதுவும் உடன்பிறந்த சகோதரனையும் உற்றுர் உறவினரையும் சந்திப்பதற்காக பிரயாணம் செய்வது ஒரு வணக்கத்திற்குரிய செயலல்லவா! என்று நீங்கள் பதில் தருவீர்களேயானல், அதற்கு நாம்,...

"**மூன்று மஸ்ஜிதுகளை தவிர வேறு எங்கும் பிரயாணம் செய்யக் கூடாது**" என்பதாக நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியிருப்பது உங்களுக்கு தெரியாதா என்று நாம் திருப்பிச் சொன்னல்.,,,

அதற்கு நீங்கள், தெரியும். தெரியும். நபியவர்களது இப்பொன் மொழியும் தெரியும். அதற்குரிய விளக்கமும் தெரியும். அதுசரி. இந்த ஹதீஸை நீங்கள் பார்க்கவில்லையா?

حدثنى عبد الاعلى بن حماد حدثنا حماد بن سلمة عن ثابت عن ابى رافع عن ابى هريرة رضي الله عنه عن النبى صلى الله عليه وآله وسلم أن رجلا زار أخا له فى قرية أخرى فارصد الله له على مدرجته ملكا فلما أتى عليه قال:أين تريد؟ قال:أريد أخا لي فى هذه القرية قال:هل لك عليه من نعمة تربها؟ قال:لاغير أني أحببته فى الله عز وجل قال:فإني رسول الله إليك بأن الله قد أحبك كما أحببته فيه.

**"ஒரு மனிதர் பக்கத்து ஊரிலிருந்த தமது சகோதரரை சந்திப்பதற்காக பயணமானர். அவர் போய்க் கொண்டிருக்கும் போது வழியில் அவரை இடைமறித்த ஒருவர், எங்கே போகிறீர் என்று கேட்க, அதற்கவர்; எனது சகோதரரை சந்திப்பதற்காக போகிறேனென்று சொல்ல, உமக்கு அவரிடம் வேறு தேவைகள் ஏதேனுமி**



**ருக்கிறதா என்றவர் மீண்டும் திருப்பிக் கேட்க, இல்லை. அவரை நான் அல்லாஹ்வுக்காக விரும்புகிறேன் எனக்கூற, அதற்கந்த மனிதர்; நான் அல்லாஹ்வின் வானவர். நீர் உமது சகோதரரை அல்லாஹ்வுக்காக விரும்புகின்ற ஒரே காரணத்திற்காக அல்லாஹ் உம்மை விரும்புகிருன் என்று அந்த வானவர் சொன்னர்.**" இந்த ஹதீஸ் ஸஹீஹானதா? எங்கே வருகிறதென்று கேட்டார்.

ஒரு விஷயம் தெரியுமா? விவசாயம் செய்பவனும், தேங்காய் விற்பவனெல்லாம் நீர் சொல்லும் ஹதீஸ் ஸஹீஹானதா? புகாரி முஸ்லிமில் இருக்கிறதா என்று கேட்கும் நிலைக்கு நாம் தள்ளப்பட்டு போய்விட்டோமே. பிறகு படித்தவனுக்கு என்ன மவுசு இருக்கிறது என்று முணுமுணுத்தவராக இப்படிப்பட்ட கேள்விகளெல்லாம் வருமென்று தெரிந்துதான் நான் கூறிய ஹதீஸுக்குரிய ஸனதையும் சேர்த்தே கூறினேன். அந்த ஹதீஸ் முஸ்லிம் ஷரீப் என்னும் நூலில், கிதாபுல் பிர்ரி வஸ்ஸிலத்தி, பாபு ஃபீ பழ்லில் ஹுப்பி ஃபில்லாஹ் விலும், மேலும் ஹதீஸைப் படித்திருந்தால் மட்டும் போதாது. தெரிந்திருந்தால் மட்டும் போதாது. அதற்குரிய சட்டமென்ன? அந்த ஹதீஸுக்கு முன்னேர்கள் தந்த விளக்கமென்ன என்பதையும் தெரிந்து வைத்திருக்க வேண்டும் என்று சொல்ல, அதற்கவர்; நாங்கள் குர்ஆன் ஹதீஸை மட்டும் தான் பின்பற்றுவோமே தவிர முன்னேர்களை அல்ல என்றுர்.

சரி. முன்னேர்களை பின்பற்ற மாட்டீர்களென்றுல் விட்டுவிடுங்கள். அதேநேரம் "**மூன்று மஸ்ஜிதுகளை தவிர வேறு எங்கும் பிரயாணம் செய்யக்கூடாது**" என்னும் ஸஹீஹான ஹதீஸுக்கு நேர்மாறுக "**உறவினர்களை சந்திக்கச் செல்வது வணக்கமாகும்**" என்னும் ஸஹீஹான ஹதீஸ் முரண்பாடுடையதாக இருப்பதை நீர் பார்க்கத்தானே செய்கிறீர்? இப்படி ஒவ்வொருவரும் தத்தம் தமது கருத்தை வலியுறுத்துவதற்குரிய ஹதீஸை மக்கள் முன்வைத்து விளக்கம் சொல்ல முற்பட்டால் சமுதாயம் என்னவாகும் எனக் கேட்ட போது.,

அதற்கவர்; உறவினர்களையும் நண்பர்களையும் சந்திப்பதற்காக பயணம் செய்யக் கூடாதென யாரும் சொன்னதில்லை. மாறுக கப்ருகளை தரிசிப்பதற்காகப் பயணம் செய்யக் கூடாதென்று தான் கூறுகிறேம் என்றுர். அப்படியானல் இவ்வுலகில் உயிரோடு இருப்பவர்களையும், மரணமென்னும் பானத்தை பருகி ஆலமுல் பர்ஸகென்னும் கப்ரில் வாழ்ந்து கொண்டிருப்பவர்களையும் ஏன் பிரித்துப் பார்க்கிறீர்கள்? கப்ரை தரிசிப்பதென்றுல் அங்கே காணப்படும் மண் குவியலை தரிசிப்பதென்று எண்ணிக் கொண்டிருக்கிறீர்கள்?

ஒன்று தெரியுமா உங்களுக்கு? நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கப்ராளிகளை அதிகமாக தரிசித்ததோடு தமது உம்மத்தினரையும் கப்ராளிகளை ஸியாரத்துச் செய்யுமாறு கட்டளை யும் இட்டிருக்கிறார்கள். அது மட்டுமா? கப்ராளிகளை சந்திக்கச் சென்றால் அவர்களுக்கு எப்படி ஸலாம் சொல்ல வேண்டும். அத்துடன் நாம் நமது வீட்டுக்குள் நுழையும்போது எவ்வாறு காலணியை கழற்றி விட்டுச் செல்கிறோமோ அவ்வாறே கப்ரஸ்தா னுக்குள் நுழையும் போதும் காலணியை கழற்றி விட்டுச் செல்லு மாறு கட்டளை பிறப்பித்திருப்பது உங்களுக்குத் தெரியாதா என்ன? எனவே உயிரோடிருப்போரை தரிசிக்க பிரயாணம் செய்வதற்கும் கப்ராளிகளை தரிசிக்க பிரயாணம் செய்வதற்கும் எந்த வேறுபாடும் கிடையாது. உதாரணத்திற்கு கீழ்கண்ட ஹதீஸைப் பாருங்கள்.

حدثنا ابوبكر محمد بن إسحاق الفقيه انبأ أبو المثنى معاذ بن المثنى ثنا محمد بن المنهال الضرير ثنا يزيد بن زريع ثنا بسطام بن مسلم عن أبى التياح يزيد بن حميد عن عبد الله بن أبى مليكة عن عائشة رضى الله عنها أقبلت ذات يوم من المقابر فقلت لها يا أم المؤمنين من أين أقبلت؟ قالت: من قبر أخي عبد الرحمن بن أبى بكر فقلت لها أليس كان رسول الله صلى الله عليه وآله وسلم نهى عن زيارة القبور؟ قالت: نعم كان نهى ثم أمر بزيارتها.

*"அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் கப்ரஸ் தானிலிருந்து திரும்பிக் கொண்டிருப்பதை கண்ட அப்துல்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், உம்முல் மு∴மினீனே! எங்கி ருந்து வருகிறீர்கள்? எனக்கேட்க, அதற்கவர்கள்; எனது சகோதரர் அப்துர் ரஹ்மான் ரழியல்லாஹு அன்ஹுவின் கப்ருக்குச் சென்று வருகிறேன் என்று சொல்ல, ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்கள் கப்ருகளை தரிசிக்கக் கூடாதெனத் தடை செய்துள்ளார்களே என்றவர் திருப்பிக் கேட்க, அன்னையவர்கள்; ஆம். துவக்கத்தில் தடை செய்திருந்தார்கள். பின்னர் தரிசிக்குமாறு உத்திரவிட் டார்கள் என்பதாக அன்னையவர்கள் கூறினார்கள்."* இதோர் ஸஹீஹான ஹதீஸென்பதாக இமாம் தஹபி கூறுகிறார்.



நூல்: முஸ்தத்ரக், பாகம்: 1, பக்கம்: 532. உம்தத்துல் காரி, பாகம்: 8, பக்கம்: 69. ஸுனன் பைஹக்கீ, பாகம்: 4, பக்கம்: 78.

அவ்வாறாயின் பெண்களும் ஸியாரத்துச் செய்யலாமா? பெண்கள் ஸியாரத்துச் செய்யக் கூடாதென்றல்லவா சொல்லிக் கொண்டிருக் கிறோம் என்றார். எப்போது ஸியாரத்துச் செய்யக் கூடாதென்னும் சட்டம் ஸியாரத்துச் செய்யுங்கள் என்பதைக் கொண்டு திருத்திய மைக்கப்பட்டு விட்டதோ அப்போதே அதில் ஆண், பெண் இருவரும் உள்ளடக்கப்பட்டு விட்டனர். அத்துடன் இந்த நபி மொழி ஒரே ஊரில் நிகழ்ந்தது தானாகையால் இதில் உயிரோடிருப் பவர் மரணமானவர் என ஏன் பிரித்துப் பார்க்கிறீர் என்று கேட்டு விட்டு,...

حدثنا حماد بن أسامة قال: أخبرنا هشام عن أبيه عن عائشة رضي الله عنهاقالت: كنت أدخل بيتي الذى فيه رسول الله صلى الله عليه وآله وسلم وأبي فأضع ثوبي فأقول: إنما هوزوجي وأبي فلما دفن عمر معهم فوالله ما دخلته إلا وأنا مشدودة عليّ ثيابي حياء من عمر رضي الله عنه.

*"நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் எனது தந்தையும் இருந்து கொண்டிருந்த எனது வீட்டுக்குள் நான் நுழை யும்போது இங்கே எனது தந்தையும் கணவரும் தானே இருக்கி றார்களென்று எண்ணி பர்தா (ஹிஜாப்) இல்லாமல் நுழைவேன். ஆனால் உமர் அவ்வீட்டுக்குள் நுழைந்தபின் உமர் என்னைப் பார்த்து விடுவார் என்பதை எண்ணி வெட்கப்பட்டவளாக பர்தா இல்லாமல் நுழைந்ததில்லை என்று கூறுகிறார்கள் உம்முல் மு∴மினீன் அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள்."*

நூல்: முஸ்னத் அஹ்மத், பாகம்: 8, பக்கம்: 389. மஜ்மவுஸ் ஸவாயித், பாகம்:8, பக்கம்: 26.

இதை அறிவிப்போர் அனைவரும் ஸஹீஹானவர்கள் என ஹாபிழ் ஹைதமியும், இமாம்களாகிய புகாரி, முஸ்லிம் ஆகியோரது நிபந்தனைப்படி ஸஹீஹான ஹதீஸென இமாம் ஹாக்கிம் அவர் களும் கூறுகின்றனர். இன்னும் இமாம் தஹபி இதுபற்றி ஏதும் சொல்லாமல் மௌனம் சாதித்ததே இதோர் ஸஹீஹான ஹதீஸ் என்பதை தெளிவாக்குகிறது.

அடுத்து கப்ரில் இருப்போர் உயிருடன் தான் உள்ளனர் என்ப
தற்கு இன்னும் வேறு என்ன ஆதாரம் வேண்டும்? என்றவர்,
இதுமட்டுமா! இன்னும் பார் என்று சொல்லிவிட்டு.,,,

حدثنا ابوالنعمان حدثنا سعيد بن زيد حدثنا عمرو بن مالك النكرى حدثنا ابوالجوزاء اوس بن عبد الله قال:قحط أهل المدينة قحطا شديدا فشكوا إلى عائشة رضي الله عنها فقالت أنظروا قبر النبي صلى الله عليه وآله وسلم فاجعلوا منه كوا إلى السماء حتى لايكون بينه وبين السماء سقف قال ففعلوا فمطرنا حتى نبت العشب وسمنت الإبل حتى تفتقت من الشحم فسمي عام الفتق.

**"ஒருமுறை மதீனவாசிகள் கடுமையான பஞ்சத்தால் பாதிப்ப டைந்த போது, அவர்கள் அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹாவிடம் வந்து முறையிடவே, அதற்கு அன்னையவர்கள்; நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபுக்குச் சென்று வானத்திற்கும் ரௌழாவுக்கும் திரையில்லாத அளவுக்கு ஒரு வழியை (துளையை) ஏற்படுத்துங்கள் என்று சொன் ஞர்கள். அவர்களும் அவ்வாறே செய்ய, அவர்களின் தேவைக் கேற்ற மழை பொழிந்தது. இதனல் அவ்வருடத்திற்கு ஆமுல் ஃபத்க் என்றும் பெயரிடப்பட்டது."**

நூல்: ஸுனன் தாரமீ, பாகம்: 1, பக்கம்: 43.

பார்த்தீர்களா! கப்ரில் வாழ்ந்து கொண்டிருக்கும் வள்ளல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களின் பொருட்டால் உதவி தேடுமாறு அன்னையவர்களே உத்திரவிட்டிருக்கிறுர்கள் என்று சொல்ல, அதற்கவர்; இது ஸஹீஹான ஹதீஸா என்ருர். அதற்கவர்; இந்த ஹதீஸைப் பதிவு செய்துள்ள இமாமவர்களின் தகவலை இமாம் புகாரி, இமாம் முஸ்லிம், இமாம் அபூதாவூத், இமாம் திர்மிதி, இமாம் பஸ்ஸார், இமாம் தஹபி, இமாம் அபூ ஸுர்ஆ, இமாம் அபூ ஹாத்திம், இமாம் அஹ்மத் பின் ஹன்பல் போன் ருேரும் அறிவித்துள்ளனர். இன்னும் இவர் இமாம் தஹபி, இமாம் இப்னு ஹஜர், இமாம் சுயூத்தி, இமாம் முல்லா அலி காரி போன்ருே ராலும் புகழப்பட்டவராகும். எனவே இவரால் இவரது நூலில் பதிவு செய்யப்பட்டுள்ள ஹதீஸ் நம்பிக்கைக்குரிய ஒன்றுதான்



என்பதற்கு இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்? அத்துடன் இதோர் நம்பிக்கைக்குரிய ஹதீஸ் இல்லையெனில் ஆமுல் ஃபத்க் என அவ்வருடத்திற்கு பெயர் சூட்டப்பட்டதற்குரிய காரணத்தை சொல்லுங்களென்று கேட்க.,,,

அதற்கவர்; இது ஒரு ஸஹாபிப் பெண்மணியால் சொல்லப் பட்ட விஷயமாகுமாதலால் இதனை ஆதாரமாக எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியுமென்று கேட்கவும், ஒரு விஷயம் நிரூபிக்கப் பட்டால் அதனை ஏற்றுக் கொள்ளாமல் கேள்விமேல் கேள்வி கேட்டு விஷயத்தை திசைதிருப்புவது தான் உங்களுக்கு கைவந்த கலையாயிற்றே. பின்னும் ஒரு ஸஹாபியின் செயல் ஆதாரமாக முடியாதெனில் அப்போது அன்னையவர்கள் இவ்வாறு செய்யுங்கள் என்று சொன்னதையும் அல்லது முறையிட்டவர்கள் அவ்வாறு செய்ததையும் அன்றிருந்த நபித் தோழர்களில் எவரேனும் தடுத் தார்கள் என்பதை நிரூபிக்க முடியுமா? அவ்வாறு இல்லையெனில் அன்னையவர்களும் ஒரு ஷிர்க்கான காரியத்தை செய்தார்கள் என்பதையாவது தெளிவுபடுத்துங்கள். ஒன்று தெரியுமா? நாங்கள் நபித்தோழர்களை மதிப்பவர்கள். ஆதலால் அவர்களது ஒவ்வொரு செயலையும் நாங்கள் ஆதாரமாகவே ஏற்றுக் கொள்வோம். இன்னும் பாருங்கள்.

أصاب الناس قحط فى زمن عمر رضي الله عنه فجاء رجل إلى قبر النبي صلى الله عليه وآله وسلم فقال:يارسول الله صلى الله عليه وآله وسلم استسق لأمتك فإنهم قد هلكوا.

***"ஹழ்ரத் ஸெய்யிதுனு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர் களின் காலத்தில் ஒருமுறை பஞ்சம் ஏற்பட்டது. அப்போது (பிலால் பின் ஹாரித் அல்முஸ்னி என்னும்) தோழர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தர்பாரில் ஆஜராகி, யா ரஸூலல் லாஹ்! உங்களின் உம்மத்துக்கள் பாதிப்புக்குள்ளாகிக் கொண்டுள் ளனர். ஆதலால் அவர்களுக்கு மழையைத் தாருங்களென்று முறையிட்டார்."***

5-11-2001ம் தேதிய தினகரன் பத்திரிக்கையில் ஸியாரத்துத் தொடர்பான ஹதீதுகளை இப்னு அப்துல்ஹாதி நம்பிக்கைக்குரிய தல்ல எனக் கூறியதாகக் குறிப்பிட்ட பின், இந்த அப்துல்ஹாதியை ஹாபிழ் இப்னு ஹஜர் அஸ்க்கலானியும் ஹாபிழ் தஹபியும் புகழ்ந்து பேசுகிருர்களென்று அதை பெருமையாக நினைத்து

குறிப்பிட்டிருந்தார். அதாவது அவர் ஹாபிழ் இப்னு ஹஜர் மற்றும் ஹாபிழ் தஹபியுடைய வார்த்தைக்கு முன்னுரிமை கொடுத்து பேசுகிறார். அப்படியானால் இந்த இரு ஹாபிழ்களும் மழை வேண்டி பிரார்த்தனை செய்ததாகக் கூறப்படும் ஹதீதை ஸஹீஹானதென்று சொல்கிறார்களே. அதையும் பொய்யாக்க பல்வேறு காரணங்களையல்லவா சொல்கிறீர்கள். இன்னும் இந்த ஹதீதைக் குறித்த தெளிவான விளக்கம் வேண்டுமாயின் "ரஃப்வுல் மினாரா" பக்கம்-262 முதல் 278 வரை பாருங்கள் என்றார்.

மேலும் கப்ராளிகள் உயிரோடு தான் இருக்கிறார்கள் என்பதாலேயே நபித்தோழர்கள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபுக்குச் சென்று உதவி தேடினர். இவ்வாறு உதவி தேடுதல் ஷிர்க்கான வழிகேட்டுக்குரிய காரியம் என்றிருந்தால் அதுபற்றிய ஹதீதுகளை நம்பிக்கைக்குரியவை எனச்சொன்ன ஹாபிழ் இப்னு ஹஜர் மற்றும் ஹாபிழ் தஹபியின் வார்த்தைகளை எதற்காக ஆதாரமாகக் கொள்கிறீர்கள்? அவர்கள் தான் முஷ்ரிக்குகளாயிற்றே! வழிகேடர்களாயிற்றே!

மண்ணறைகளை தரிசித்தல் உன்னதமான வணக்கம் எனப் படித்துப் படித்து சொன்னதற்குப் பிறகும் அதற்காகப் பிரயாணம் செய்யலாமா என்று கேள்விமேல் கேள்வி கேட்கிறீர்கள். அது மட்டுமா! கப்ரை தரிசித்தலும் இபாதத் வணக்கம்தான் என்று சொல்லப்படுவதை கொச்சைப்படுத்தும் வகையில் ஸியாரத்துச் செய்வோரை பார்த்து கப்ரு வணங்கிகள் என்றும் பெயர் சூட்டுகிறீர்கள். அப்படியானால் அடுத்து வரும் ஹதீதைப் பாரும் என்றார்.

حدثنا مغيرة حدثنا صفوان حدثني ابو زياد يحي بن عبيد الغسانى عن يزيد بن قطيب عن معاذ رضى الله عنه أنه كان يقول: بعثني رسول الله صلى الله عليه وآله وسلم إلى اليمن فقال: لعلك أن تمر بقبري ومسجدي.

*"ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் என்னை (முஆத்) எமன் தேசத்திற்கு அனுப்பிவைத்த போது, எனது ரௌழாவையும் எனது மஸ்ஜிதையும் தரிசிப்பது உம்மீது கடமையாகும் எனக் கூறியதாக ஹழ்ரத் ஸெய்யிதுனா முஆத் இப்னு ஜபல் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் கூறுகின்றனர்."*

நூல்: முஸ்னத் அஹ்மத், பாகம்-7, பக்கம்-359. முஃஜிமுல்



கபீர், பாகம்-20, பக்கம்-89. மஜ்மவுஸ் ஸவாயித், பாகம்-10, பக்கம்-55. ஸுனன் பைஹகீ, பாகம்-9, பக்கம்-20.

இனி முஸ்னத் அஹ்மத், தப்ரானி ஆகிய இருவரது அறிவிப்பாளர்களில் யஸீத் பின் குதைப் அல்லது யஸீத் பின் குத்பு என்பவரைத் தவிர மற்றவர் அனைவரும் நம்பிக்கைக்குரியவர்கள் என்றும், மேலும் யஸீத் என்பவர் "மக்பூல் - ஏற்றுக்கொள்ளப் படக்கூடியவரே" என்பதாகவும் ஹாபிழ் இப்னு ஹஜர் அஸ்க்கலானி ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர்.

இந்த ஹதீதில் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தனது மஸ்ஜிதைத் தரிசிப்பதோடு தனது ரௌழாவையும் தரிசிக்க வேண்டுமென எமன் நாட்டுக்கு செல்பவரை நோக்கி உபதேசம் செய்கின்றனர். இன்னும் மூன்று மஸ்ஜிதை தவிர வேறு எங்கேயும் பிரயாணம் செய்யக் கூடாதெனச் சொன்ன நபியவர்களே தனது ரௌழாவை தரிசிக்க பயணம் மேற்கொள்ள வேண்டுமென்றும் கட்டளையிடுகின்றனர் எனில் இதன்மூலம் மூன்று மஸ்ஜிதுகள் சம்பந்தமான ஹதீதுக்கும் ரௌழாக்களை தரிசிப்பதற்காக பயணம் செய்வதற்கும் அறவே சம்பந்தமில்லை என்பதை நபியவர்களே தெளிவுபடுத்திய பின்பும் மூன்று மஸ்ஜித் சம்பந்தமான ஹதீதை ஆதாரமாகக் காட்டி பயணம் செய்வதைத் தடுப்பதற்கு உமக்கென்ன அதிகாரம் இருக்கிறது? அத்துடன் கப்ருகளை தரிசிப்போரை கப்ரு வணங்கிகள் என்றும் சொல்கிறீரே! அவ்வாறாயின் கப்ருகளை தரிசிக்குமாறு கட்டளையிட்ட நபியவர்கள் யார்? யார் முஷ்ரிக்குகள்? யார் மூஃமின்கள்?

அதெல்லாம் சரி. ஸெய்யிதுனா முஆத் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எமனிலிருந்து மதீனாவுக்கு திரும்பி வந்தபின் அவர்கள் நபியவர்களின் ரௌழாவை தரிசித்தார்கள் என்பதற்கு என்ன ஆதாரம்? எனக் கேட்க, அதற்கவர்; கப்ராளிகளை மட்டுமல்ல. திங்களெங்கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபை தரிசிப்பதற்காக பயணம் செய்யலாமா எனக் கேட்டதற்கு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களே தோழர் ஒருவரை எமன் தேசத்திற்கு வழியனுப்பிவைத்தபோது சொன்ன ஹதீதைச் சொன்னதும் ஹழ்ரத் முஆத் ஸியாரத்துச் செய்தாரா என இன்னொரு கேள்வியைக் கேட்கிறீர். இதுதான் உங்கள் தொழில் போலும் என்றவர் கீழ்காணும் ஹதீதை வாசிக்கத் துவங்கினார். அதாவது.,,,

حدثنا ابو العباس محمد بن يعقوب ثنا الربيع بن سليمان ثنا عبد

الله بن وهب أخبرني الليث بن سعد عن عياش بن عباس القتابى عن زيد بن أسلم عن أبيه أن عمر رضي الله عنه خرج إلى المساجد يوما فوجد معاذ بن جبل رِضي الله عنه عند قبر النبى صلى الله عليه وآله وسلم يبكى.الخ

**ஸெய்யிதுனா ஹழ்ரத் உமர் பாரூக் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மஸ்ஜிதுக்குச் சென்றபோது அங்கே ஹழ்ரத் முஆத் பின் ஜபல் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ரஸூலுல்லாஹி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபில் அழுது கொண்டிருக்கக் கண்டதாக கூறுகின்றனர்.**

நூல் : முஸ்தத்ரக், பாகம்-1, பக்கம்-44. இதனை ஸஹீஹான ஹதீதென்று இமாம் ஹாக்கிம் மட்டுமல்ல. ஹாபிழ் தஹபியும் கூறுகிறார்.

எனவே ஸியாரத்துக்குரிய ஸ்தலங்களை தரிசிக்க, அதுவும் திங்களெங் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர் களின் முபாரக்கான ரௌழாவைத் தரிசிப்பதற்காக பிரயாணம் செய்வதையும், மூன்று மஸ்ஜிதுகளைக் குறித்து சொல்லப்பட்ட ஹதீதையும் தொடர்புபடுத்தாதீர்கள். ஏனெனில் இரண்டு ஹதீதுகளும் இருதுருவங்களைப் போன்றதாகும் என்றவர் அடுத்து வரும் தகவல்களை வரிசைப்படுத்தி சொல்லத் துவங்கினார். அதாவது.,,,

حدثنا يعقوب بن ابراهيم حدثنا ابن علية أخبرنا أيوب عن نافع أن إبن عمر رضى الله عنهما فإنه كان يأتيه كل سبت فإذا دخل المسجد كره أن يخرج منه حتى يصلى فيه.

*"ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஒவ்வொரு சனிக்கிழமையும் மஸ்ஜிதெ குபாவுக்குச் சென்று தொழாமல் அங்கிருந்து வெளியாக மாட்டார்களாம்."*

நூல் : புகாரி ஷரீப், கிதாபு-பழ்லிஸ் ஸலாத்தி ஃபீ மஸ்ஜிதி மக்கா வல் மதீனா, பாகம்-1, பக்கம்-505.

ஏன் ஸெய்யிதுனா இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர் கள் மஸ்ஜிதெ குபாவுக்கு தொழச் சென்றார்கள் தெரியுமா?



حدثنا مسدد حدثنا يحى بن سعيد عن عبيد الله قال: حدثنى نافع عن ابن عمر رضى الله عنهما قال: كان النبى صلي الله عليه وآله وسلم يأتى مسجد قباء راكبا وماشيا وفى رواية يصلى فيه ركعتين.

*"ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மஸ்ஜிதெ குபாவுக்கு நடந்தும் செல்வார்களாம். வாகனத்தின் மூலமாகவும் செல்வார்களாம். மற்றோர் ஹதீதின்படி இரண்டு ரக்அத்துகள் தொழுதும் கொள்வார்களாம்."*

நூல் : புகாரி ஷரீப், பாகம்-1, பக்கம்-505.

மஸ்ஜிதெ குபாவுக்கு செல்லும் ஹதீதை மூன்று மஸ்ஜித் சம்பந்தமான ஹதீதோடு சம்பந்தப்படுத்தாதீர்கள். மஸ்ஜிதெ குபாவுக்கு நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நடந்து சென்றிருக்கிறார்கள் என நான் சொல்லவில்லை. மாறாக அல்லாமா பத்ருத்தீன் ஐனி ரஹிமஹுல்லாஹ் அவர்களால் உம்தத் துல் காரியில் பதிவு செய்யப்பட்டிருப்பதை இந்த வஹ்ஹாபிகள் மிக மிக அழுத்தமாக எடுத்துக் காட்டுகின்றனர். இச்செய்தி உம்தத் துல் காரி, பாகம்-7, பக்கம்-260ல் கூறப்பட்டுள்ளது.

இப்னு அபிஸ் ஸைப் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் நல்லடியார் களின் கப்ருகளை முத்தமிடலாம் எனக் கூறியிருப்பதை ஒரு ஆதாரமாக எடுத்துக் காட்டியபோது, அதற்கு அப்துல் அஸீஸ் பின் பாஸ் என்பவர், தனிப்பட்ட ஒருவரின் கருத்து ஆதாரமாகாது என்று சொன்னதை மறந்து விட்டாரோ என்னவோ! "மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு எங்கும் பயணம் செய்யக்கூடாது" என்பதை ஆதாரப்படுத்த அவர் முயன்றபோது, இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் பின் எப்படி மஸ்ஜிதெ குபாவுக்கு சென்றார்கள் எனக் கேட்கப்பட்ட போது, அதே அல்லாமா ஐனியின் கருத்தை பாஸ் ஆதாரமாகக் காட்டுகிறார். சரி. மஸ்ஜிதெ குபாவுக்கும் பிரயாணத்திற்கும் சம்பந்தமில்லை. ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் இதேநூலின் இதே பாகம் இதே பக்கத்தில் பதினான்கு வரிகளையடுத்து, மஃஜிதெ குபாவில் இரண்டு ரக்அத்துக்கள் தொழுவதானது மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கு இருமுறை செல்வதை விட எனக்கு மிகவும் விருப்பமானது. மஸ்ஜிதெ குபாவின் சிறப் புக்களை அறிந்தவர் அதற்காக பிரயாணம் செய்தேனும் அங்கே தொழுது கொள்வார் என்பதாக ஸஹீஹான அறிவிப்பாளர்களைக்

கொண்டு அறிவிக்கப்பட்டதெனக் கூறப்படும் ஹதீதை ஏன் விட்டு விட்டனர்?

அடுத்து ஹதீதுகளை ஸஹீஹ் என்றும் ழயீப் என்றும் பிரித்துக் காட்ட அல்லாமா இப்னு ஹஜர் அஸ்க்கலானியின் நூல்களையே பெரிதும் உபயோகப்படுத்துவதுண்டு. இதில் அத்துரருல் காமினு, தஹ்தீபுத் தஹ்தீப், தக்ரீபுத் தஹ்தீப் போன்ற நூல்கள் எதிர் தரப்பாராலும் பயன்படுத்தப்படுபவைகளாகும். இவர்கள் நூறுக்கும் அதிகமான கிரந்தங்களைத் தொகுத்துள்ளார்கள். அதில் ஃபத்ஹுல் பாரி என்பதும் ஒன்றாகும். இது பல பாகங்களைக் கொண்ட புகாரி ஷரீபின் விரிவுரையாகும். இந்நூலின் பாகம்-3, பக்கம்-84ல் மூன்று மஸ்ஜிதுகளல்லாத ஏனைய மஸ்ஜிதுகளுக்கு பயணம் செய்யக் கூடாதெனச் சொல்லப்பட்ட ஹதீத் ஹராம் என்பதை உணர்த்தாது எனக் கூறியிருப்பதை விட்டு விட்டு அல்லாமா ஐனியின் கருத்தை ஆதாரமாக எடுப்பதுடன் ஹாபிழ் இப்னு ஹஜரின் கருத்துக்கு விளக்கம் வேறு சொல்கிறார் இந்த பாஸ்.

عن عائشة بنت سعد بن ابى وقاص قالت: سمعت أبي يقول: لأن أصلي فى مسجد قباء ركعتين أحب إليّ من أن آتى بيت المقدس مرتين ولويعلمون مافى قباء لضربوا اليه اكباد الإبل.

***"மஸ்ஜிதெ குபாவில் இரு ரக்அத்துக்கள் தொழுவதானது பைத்துல் முகத்தஸ் பள்ளிக்கு இருமுறை செல்வதைவிட மிக விருப்பமானதாகும். இன்னும் குபா பள்ளியின் சிறப்பை அறிந்தவர்கள் பெரும் சிரமத்திற்கிடையே பிரயாணம் செய்ய நேரிட்டாலும் சென்று வருவர் என்பதாக ஹழ்ரத் ஸஃத் இப்னு அபீ வக்காஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் சொல்லக் கேட்டதாக அவர்களின் புதல்வி கூறுகின்றனர்."***

இதுதான் ஹாபிழ் இப்னு ஹஜர் அஸ்க்கலானி அவர்களால் இந்த ஹதீதைச் சொன்ன அனைவரும் ஸஹீஹானவர்கள் என எடுத்துக் காட்டப்பட்ட ஹதீதாகும். நூல் : உம்தத்துல் காரி, பாகம்-7, பக்கம்-260.

عن عمر بن الخطاب رضى الله عنه أنه قال: لو كان مسجد قباء فى أفق من الآفاق ضربنا إليه أكباد الإبل.

***"குபா பள்ளிவாசல் அடிவானத்தில் இருந்தாலும் அங்கு சென்று***



***வருவதற்காகவே பிரயாணம் செய்திருப்போம் எனக் கூறுகின்றனர் அமீருல் முஃமினீன் ஹழ்ரத் உமர் பின் கத்தாப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள்."***

இந்த ஹதீதை அறிவிப்பவர்களில் யஃகூப் பின் மஜ்மஃ என்பவர் இப்னு ஹிப்பான் அவர்களால் நம்பத்தகுந்தவர் எனக் குறிப்பிடப்படுகிறார். அத்துடன் இமாம் தௌரி போன்றவர்களும் இந்த ஹதீதை பதிவு செய்துள்ளனர். இன்னும் இந்த அறிவிப்பாளர் இமாம் தஹபியால் கூட நம்பிக்கைக்குரியவர் எனச் சொல்லப்பட்டவராகும். எல்லாவற்றுக்கும் மேலாக இமாம் புகாரி ரஹிமஹுல்லாஹ் அவர்களால் அத்தாரீகுல் கபீர் என்னும் நூலில் பாகம்-1, பக்கம்-402லும் இவரால் அறிவிக்கப்பட்ட அந்த ஹதீதை பதிவு செய்துள்ளார்கள்.

மேலும் குர்ஆனுக்கு அடுத்து உலக முஸ்லிம்களால் அங்கீகரிக்கப்பட்ட ஒருநூல்தான் புகாரி ஷரீப். அதன் ஆசிரியரால் சொல்லப்பட்ட அனைத்து ஹதீதுகளையும் முஸ்லிம்கள் ஏற்றுக் கொண்டுள்ளனர். ஆனால் இந்த வஹாபிகள் அவைகளை ஏற்றுக் கொள்ளாதிருப்பதோடு அதற்கு புதியதோர் விளக்கமும் கூறுகின்றனர். இமாம் புகாரி அவர்கள் ஸஹீஹானவர்கள். ஆதலால் ழயீபான ஒருவரால் அறிவிக்கப்படும் ஹதீதைச் சொன்னாலும் அது ஸஹீஹானது தான். ஆனால் இன்று குர்ஆன் ஹதீத் மட்டும் போதும் எனக்கூறும் இவர்கள் இட்டுக்கட்டி பேசுபவர்களும் "உதுல்லிம் பஃத தாலிக ஸனீம்" என்னும் வசனத்திற்கு உட்பட்டவர்களாகுமாதலால் இவர்கள் ஸஹீஹான ஒருவரின் ஹதீதைச் சொன்னாலும் அது உன்னிப்பாக கவனிக்கப்பட வேண்டியது அவசியமாகும்.

இன்னும் ஸெய்யிதுனா உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஷாம் தேசத்திற்கு சென்றபோது அங்குள்ளோருடன் சமாதான உடன்படிக்கை ஒன்றை செய்தனர். அப்போது கஃபுல் அஹ்பார் என்பார் கலீபா அவர்களது கரத்தை பற்றி இஸ்லாத்தை தழுவினார். அதன்பின் கலீபா அவர்கள் அவரிடம் என்ன கேட்டார்கள் தெரியுமா?

هل لك أن تسير معى إلى المدينة وتزور قبر النبى صلى الله عليه وآله وسلم وتتمتع برؤيته؟ فقال نعم.

***"உம்மால் மதீனாவுக்கு என்னோடு வரமுடியுமா? அங்கே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபைக் கண்டு தரிசித்து மகிழ்ச்சியுற விரும்புகிறீரா எனக் கேட்க, அதற்க***

**வர்; ஆம் என்று கூறினர்.''** நூல்: ஷிபாவுஸ் ஸகாம், பக்கம்-59., அல் ஃபஜ்ருஸ் ஸாதிக், பக்கம்-67. இனி ஸியாரத்திற்கென்று பிரயாணம் செய்தல் பாவமான காரியமென்பது கலீபா உமரவர்களுக்குமா தெரியாமல் போயிற்று? அல்லது,...

وكان عمر بن عبد العزيز رحمه الله يبعث بالرسول قاصدا من الشام إلى المدينة ليقرئ النبى صلى الله عليه وآله وسلم السلام ثم يرجع.

**''ஹழ்ரத் உமர் பின் அப்துல் அஸீஸ் அவர்கள் தமது ஸலாமை எத்தி வைப்பதற்காக என்றே ஒருதூதரை ஷாம் தேசத்திலிருந்து மதீனா முனவ்வராவுக்கு அனுப்பக் கூடியவராக இருந்தார்கள்?''** நூல்: ஷிபாவுஸ் ஸகாம், பக்கம்-58. இவர்களுக்கெல்லாம் அந்த நபிமொழியின் அர்த்தம் புரியவில்லை என்று சொல்லலாமா?

حدثنا يعقوب قال: حدثنا أبي عن أبي إسحاق قال: حدثني يزيد بن لبي حبيب عن مرثد بن عبد الله اليزنى عن أبى بصرة الغفاري قال: لقيت ابا هريرة رضى الله عنه وهو يسير الى مسجد الطور ليصلي فيه قال: فقلت له لو أدركتك قبل أن ترتحل ماإرتحلت قال: فقال: ولم؟قال: إنى سمعت رسول الله صلي الله عليه وآله وسلم يقول: لاتشد الرحال. الحديث.

**''ஹழ்ரத் ஸெய்யிதுனா அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மஸ்ஜிதுத்தூர் பள்ளிவாசலில் தொழுவதற்காக எண்ணம் கொண்டு பயணம் செய்து கொண்டிருக்கும் போது வழியில் எதிர்பட்ட ஹழ்ரத் அபூ பஸரா அல்ஃகப்பாரி ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நீங்கள் பயணப்படு முன் என்னைக் கண்டிருந்தால் வெளிப்பட்டிருக்க மாட்டீர்கள் எனச்சொல்ல, அதற்கவர்; ஏனென்று கேட்க, மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு மஸ்ஜிதுகளுக்கு பயணம் செய்யக்கூடாதென்னும் ஹதீதை சொல்லிக் காட்டினார்.''**

நூல் : முஸ்னத் அஹ்மத், பாகம்-8, பக்கம்-798. பத்ஹுல் பாரி, பாகம்-3, பக்கம்-78.

நபிமொழிகளை அறிவிப்போரில் ஹழ்ரத் அபூ ஹுரைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் முதலிடத்தை வகிக்கின்றனர். அப்படிப்



பட்ட தோழருக்கு வழியில் எதிர்பட்ட தோழரால் சொல்லிக் காட்டப்பட்ட நபிமொழி தெரியாமலா போயிற்று? ஆம் எனில் அவர்கள் உடனே தமது பயணத்தை ரத்து செய்யாதது ஏன்? பின்னும் மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு மஸ்ஜிதுகளுக்கு தொழுவதற்காகவேனும் பயணம் செய்வது ஹராம் என்றிருந்தால் திரும்பிச் செல்லுமாறு ஏன் உத்திரவிடவில்லை? அப்படியானால் அந்த ஹதீதின் விளக்கம் வேறு என்பதை அவர்கள் தெரிந்து வைத்திருந்தார்கள் என்பதுதானே அர்த்தம்?

மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு எந்த மஸ்ஜிதுக்கும் பயணம் செய்யக்கூடாது எனக் கூறப்பட்ட ஹதீதுக்கும் மஸ்ஜிதுத் தூர் மற்றும் மஸ்ஜிதெ குபாவுக்கு பயணம் செய்வதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதால் தானே ஹழ்ரத் உமர், ஹழ்ரத் அபூ ஹுரைரா, ஹழ்ரத் அபூ சயீதுல் குத்ரி ரழியல்லாஹு அன்ஹும் போன்ற பிரபலமான நபித் தோழர்களெல்லாம் பயணம் செய்துள்ளார்கள். பயணம் செய்தது மட்டுமா? அங்கே தொழவுமல்லவா செய்தார்கள். ஆகையால் மூன்று மஸ்ஜிதுகள் தொடர்பான ஹதீதை ஆதாரமாக காட்டி நபிமார், வலிமார் போன்றோரின் தர்காக்களுக்குக் கூட பிரயாணம் செய்யக் கூடாதெனச் சொல்வது அறியாமையா? அல்லது நயவஞ்சகமா?

அடுத்து ஹாபிழுல் கபீர் எனப் போற்றப்படும் வலியுல்லாஹ் இராக்கி அவர்கள் ஹாபிழ் இப்னு ரஜபுடன் நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாமவர்களது ஊர் பக்கமாக பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். ஊரை சமீபித்த போது ஸியாரத்திற்காக பயணம் செய்வதை தடுக்கும் இப்னு தைமிய்யாவின் கருத்துக்கு நான் அகப்பட்டு விடக் கூடாதென்று எண்ணி ''நவைத்து ஸியாரத்த கப்ரில் கலீலி அலைஹிஸ்ஸலாம்'' நான் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாமவர்களின் கப்ரை தரிசிக்க நிய்யத்துச் செய்து கொண்டேன் என்று சொல்ல.,,,

பக்கத்திலிருந்த ஹாபிழ் ரஜப் அவர்கள் ''மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு பயணம் செய்யலாகாது'' என்னும் நபிமொழிக்கு மாற்றம் செய்து நான்காவதான பள்ளிக்கு பயணம் செய்கிறீர்களே எனக் கேட்க, அதற்கு ஹாபிழ் இராக்கி அவர்கள்; நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கப்ருகளை ஸியாரத்துச் செய்யுமாறு உத்திரவிட்டுள்ளனர். இதில் நபிமார்களின் கப்ருகளைத் தவிர எனக் கூறவில்லையாதலால், நான் நபியவர்களைத்தான் பின்பற்றுகிறேன் எனச்சொல்ல, கேள்வி கேட்டவர் மௌனியாகி விட்டார்.

இது தரஹுத் தஹ்தீப், பாகம்-6, பக்கம்-43ல் கூறப்பட்டுள்ளது.

இது எதிர்தரப்பாராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஹாபிழ் அபூ ஸுஊர்ஆவுக்கு சொந்தமான நூலாகும்.

மூன்று பள்ளிகளுக்கும் பயணம் செய்யலாம். அதன்றி வேறு எங்கும் பயணம் செய்யக்கூடாதென்றும், ஸியாரத்தின் எண்ணத்தில் பயணம் செய்வது ஹராமாகும் என்றும் பிரச்சாரம் செய்பவர்கள் உண்மையில் அகத்தின் ஒளி அழிக்கப்பட்டு உள்ளத்தில் இருள் படர்ந்து போய் விட்டவர்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. ஏனெனில் அடுத்துவரும் ஹதீதைக் கவனியுங்கள்.

أخبرني أبوالطيب محمد بن أحمد الحيرى ثنا محمد بن عبد الوهاب ثنا يعلى بن عبيد ثنا محمد بن إسحاق عن سعيد بن أبى سعيد المقبري عن عطاء مولي أم حبيبة قال:سمعت أبا هريرة رضي الله عنه يقول:قال رسول الله صلي الله عليه وآله وسلم ليهبطنّ عيسى بن مريم حكما عدلا وإماما مقسطا فليسلكن فجا حاجا أومعتمرا أوبنيتهما وليأتينّ قبري حتى يسلم عليّ ولأردنّ عليه.

*“மெய்யாகவே மர்யமுடைய புதல்வரான ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் நீதியை நிலைநாட்டும் நீதிபதியாகவும், தீர்ப்பளிக்கும் அரசராகவும் இறங்குவார். இன்னுமவர் ஹஜ்ஜுடைய எண்ணத்தில் அல்லது உம்ராவுடைய எண்ணத்தில் அல்லது இரண்டுடைய எண்ணத்திலும் புனிதமிக்க மக்கமா நகரம் வருவார். இன்னும் எனது கப்ருக்கும் வருகைதந்து எனக்கு ஸலாமும் உரைப்பார். திடனுக அவருக்கு நான் பதிலளிப்பேன் என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவிலுகின்றனர்.*

நூல் : முஸ்தத்ரக், பாகம்-2, பக்கம்-651.

இதோர் ஸஹீஹான இஸ்னைதைக் கொண்ட ஹதீதாகும். அதே நேரம் இதே அமைப்பில் இந்த ஹதீத் புகாரி மற்றும் முஸ்லிமில் பதிவாகவில்லையென இமாம் ஹாக்கிமும், இமாம் தஹபியும் கூறிய போதிலும் இந்த ஹதீதை அவர்கள் ஸஹீஹான ஒன்றென ஏற்றுக் கொள்கின்றனர். இத்தனைக்குப் பின்னரும் ஜனுப் அல்பானி இதை ழயீப் என்கிறுர் எனில் இவர் இச்சமுதாயத்தின் மிக மோசமான வழிகெட்டவரும் வழிகெடுப்பவருமாகும்.



எனவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய புனிதமிக்க பூமியை, அவர்களது ரௌழாவை தரிசிப்பதற்காக பயணம் செய்வதானது நற்கருமமாகும் என்பதற்கு இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்?

மேற்கண்ட ஹதீதை கொடியவரான அல்பானி ழயீப் என்று சொன்னதற்காக இப்போது நீயும் அதை ழயீப் என்று சொல்வாயாயின் ஸியாரத்துத் தொடர்பான எல்லா ஹதீதுகளையும் அலசி ஆராய்ந்து அவையனைத்தும் பொய்யானவை எனச்சொன்ன உமது ஆசான் ஜனுப் இப்னு அப்துல் ஹாதி இந்த ஹதீதை தமது நூலில் குறிப்பிடாமல் விட்டது ஏன்?

ஸியாரத்துச் செய்வதும், அதற்காக பிரயாணம் செய்வதும் மார்க்கத்தில் ஆகுமாக்கப்பட்ட ஒருகாரியம் தான் என்பதை உறுதிப்படுத்த இந்த ஒரு ஹதீதே தக்க ஆதாரமாக அமைந்திருப்பதை இப்னு அப்துல்ஹாதி கண்கூடாகக் கண்டதாலும் அதே நேரம் அது ஸஹீஹான ஹதீதென்பதையும் தெரிந்து கொண்டதால் தான் அந்த ஹதீதையே மறந்து போய் விட்டார்.

இந்நூலில் ஒரேயொரு நபிமொழியை முன்வைத்து அதன் அறிவிப்பாளர் தொடர்பாக ஆய்வுக்கு எடுக்கப்பட்டுள்ளதால் முதலில் ஜர்ஹ் தஃதீல் என்று அழைக்கப்படும் அக்கலை பற்றிய சுருக்கமான விளக்கங்களை இப்போது பார்ப்போம்.

## ஜர்ஹ் தஃதீல் - குறைவும் நிறைவும்

உலக சம்பந்தமான விஷயமாயினும் அல்லது மார்க்க சம்பந்தமான விஷயமாயினும் அவை ஒவ்வொன்றுக்கும் பிரத்தியேகமான அடிப்படை சட்டங்களும் யாப்புக்களும் இருக்கத்தான் செய்கின்றன.

இதில் நமது தாய்மொழியான தமிழுக்கென்று அடிப்படை சட்டங்கள் இருப்பதைப்போல அரபி, ஆங்கிலம், சிங்களம், உர்து, பார்ஸி, பிரெஞ்சு, மலையாளம், கன்னடம் என ஒவ்வொரு மொழிக்கும் உரிய அடிப்படை சட்டங்களும் உள்ளன. இதே போல ஒவ்வொரு நாட்டுக்கும் என தனித்தனி சட்டங்களும் இருக்கின்றன.

இதே வகையில் படிக்கின்ற மாணவனுக்கென ஒரு சட்டமிருப்பதுபோலபடித்துக்கொடுப்பவனுக்கும்இன்னொருசட்டமுள்ளது. பாதசாரிகளுக்கென்று ஒரு சட்டம் இருப்பதைப்போல வாகன

ஒட்டுனர்களுக்ென்றும் ஒரு சட்டம் இருப்பது நாம் அறிந்ததே. இதில் எல்லா வகையான சட்டங்களையும் எல்லோராலும் படித்து அறிந்துகொள்ள முடியாததைபோல எல்லோரும் ஒரே வர்க்கத்தை சேர்ந்தவர்களாகவும் இருக்க முடியாது. அத்துடன் யார் எந்தத் துறையில் பாண்டித்தியம் பெற்றுள்ளாரோ அவரே அதைப்பற்றி சொல்வதற்கும் செய்வதற்கும் தகுதியுடையவராக இருப்பார்.

இந்த அடிப்படையில் நிரந்தரமான மார்க்கமாகிய இஸ்லாம் அனைத்து சட்டங்களையும் தனக்குள் உள்ளடக்கிக் கொண்டுள்ள தென்று சொன்னால் மிகையாகாது. உதாரணமாக குர்ஆனை ஓது பவர், ஓதிக் கொடுப்பவர், அதற்கு விளக்கம் தருபவர் ஆகிய ஒவ் வொருவருக்கும் ஒவ்வொரு வகையான தனித்தனி சட்டங்களும் கோட்பாடுகளும் இருக்கின்றன.

இதில் குர்ஆனுக்கு விளக்கம் தருபவருக்கு இருக்க வேண்டிய அடிப்படை தகுதி மற்றும் அதற்குரிய சட்டங்களை தெரியாதவர் விளக்கம் சொல்ல முனைவாராயின் அதை நியாயமான ஓர் செய லென்று எப்படிச் சொல்ல முடியும்? இதேபோல ஹதீதுக்கென்றும் சில பிரத்யேகமான சட்டங்களும் கோட்பாடுகளும் இருக்கின்றன.

அதாவது ஹதீதை அறிவிப்பவர், ஹதீதை தொகுப்பவர், ஹதீதுக்கு வியாக்யானம் செய்பவர், ஹதீதை அறிவித்தவர் பற்றி ஆய்வு செய்பவர் என ஒவ்வொருவருக்கும் தனித்தனி சட்டங் களும் விதிமுறைகளும் உள்ளன. பின்னும் ஹதீதுக்கலையின் மிக முக்கியமான பிரிவுகளில் ஹதீதைஅறிவிப்பவர்கள் பற்றிய ஆய்வும் ஒன்றாகும். இதைத்தான் ஜர்ஹ் - தஃதீல் எனக் கூறப்படுகின்றது.

நாம் இந்த நூலில் ஸியாரத்துத் தொடர்பான நபிமொழி ஒன்றை முன்வைத்து அதை அறிவித்தவரான மூஸா பின் ஹிலால் என்பாரை பற்றிய கருத்துக்களை எடுத்துக்காட்டியதை நீங்கள் பார்க்கலாம். ஆதலால் அறிவிப்பாளர்களை குறித்து பேசப்படும் ஹதீதுக் கலையின் பிரிவுபற்றிய ஏகோபிக்கப்பட்ட முடிவை இங்கே சுருக்க மாக உங்களின் பார்வைக்கு தருவதை மிக முக்கியமான ஒன்றெனக் கருதுகிறேன்.

ஒரு ஹதீதை அறிவித்தவரை ஒரு பெரியார் குறைகூறி விட்டால், உதாரணமாக மூஸா பின் ஹிலால் அவர்களை அபூஹாத்திம் அவர்கள் "மஜ்ஹூல்" (அறியப்படாதவர்) என்று சொன்னதை ஜர்ஹ் (குறைவு) என்றும், இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரழியல் லாஹு அன்ஹு அவர்கள் மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்



பட்ட ஹதீதை தமது நூலில் பதிவு செய்துள்ளதால் அவர் அறியப் படாதவரல்ல என்று சொன்னதை தஃதீல் (நிறைவு) என்றும் அரபியில் சொல்லப்படும்.

ஆதலால் ஹதீதுக்கலையின் பிரிவுகளில் மிக முக்கியமானதோர் பிரிவாக பேசப்படும் ஜர்ஹ் - தஃதீல் குறித்து பேசப்படும் போதெல் லாம் உன்னிப்பாக கவனிக்க வேண்டிய அக்கலையின் அடிப்படை சட்டங்கள் என்னவென்பதை இப்போது பார்ப்போம்.

ஒரு அறிவிப்பாளரை குறித்து ஜர்ஹ் - தஃதீல் செய்யப்படு மாயின் அதில் நான்கு விஷயங்கள் கவனிக்கப்பட வேண்டும்.

1. ஜர்ஹும் தஃதீலும் தெளிவின்றி இருத்தல்.

2. ஜர்ஹ் தெளிவின்றியும் தஃதீல் தெளிவாகவும் இருத்தல்.

3. ஜர்ஹ் தெளிவாகவும் தஃதீல் தெளிவின்றியும் இருத்தல்.

4. ஜர்ஹும் தஃதீலும் தெளிவாக இருத்தல்

இனி இதுபற்றி அறிஞர் பெருமக்களின் கூற்றுக்களை இப்போது பாருங்கள்.

ان مذهب الأئمة من حفاظ الحديث ونقاده مثل البخارى ومسلم أن الجرح لا يثبت إلاإذا فسر سببه.

**"இமாம்களான புகாரி மற்றும் முஸ்லிம் போன்ற ஹதீதுக்கலை பெரியார்களின் தீர்ப்பாகிறது, ஜர்ஹ் (குறைவு) செய்யப்பட்டதற் குரிய காரணம் தெளிவாக இல்லாதிருப்பின் அந்தக் குறைவை ஆதாரமாகக் கொள்ள முடியாது."**

நூல்: அல்கிபாயா, பக்கம்-108, 109.

أكثر الحفاظ على قبول التعديل بلا سبب وعدم القبول الجرح إلابذكر السبب.

**"தெளிவில்லாத தஃதீலை ஏற்றுக் கொள்ளலாம் என்பதும், சரியான காரணம் சொல்லப்படாமல் எடுத்துக் காட்டப்படும் ஜர்ஹை ஏற்க முடியாது என்பதும்தான் பெரும்பாலோரின் முடிவாகும்."**

நூல்: இம்ஆனுன் நழ்ர் பிஷரஹி ஷரஹி நுக்பதில் பிக்ர், அர்ரப்வு வத்தக்மீல், பக்கம்-97.

التجريح لايقبل مالم يبين وجهه بخلاف التعديل فإنه يكفى فيه أن يقول: عدل أوثقة.

"எந்தக் காரணத்திற்காக அறிவிப்பாளர் ஜர்ஹ் செய்யப்பட்டாரோ அதற்கான காரணம் தெளிவாக சொல்லப்படவில்லையாயின் அந்த ஜர்ஹை ஏற்க முடியாது. ஆனால் ஒருவரை குறித்து நீதமானவர், உறுதியானவர் என்னும் வாக்கியங்கள் உபயோகிக்கப்பட்டு த'தீல் செய்யப்பட்டிருப்பதோடு அதற்குரிய காரணம் தெளிவில்லாமல் இருந்தால் அதை ஏற்றுக் கொள்ளலாம்."

முல்லா அலிகாரி, நூல்: அர்ரப்வு வத்தக்மீல், பக்கம்-97.

ومقتضى قوائد الأصول عند أهله أن لا يقبل الجرح إلا مفسرا.

"தெளிவில்லாத ஜர்ஹை ஏற்றுக்கொள்ள முடியாது என்பதே அக்கலையை சார்ந்தோரால் ஏற்படுத்தப்பட்ட அடிப்படை சட்டத்தின் இறுதியான முடிவாகும்."

இப்னு தகீக் அல்ஈத், நூல்: ஷரஹ் அல் இல்மாம் பி அஹாதீதில் அஹ்காம்.

لايقبل الجرح إلا مفسرا مبين السبب.

"ஜர்ஹ் செய்யப்பட்டதற்கான காரணம் தெளிவாக்கப்படவில்லையாயின் அதை ஏற்றுக்கொள்ள முடியாது."

இமாம் நவவி, நூல்: ஷரஹ் ஸஹீஹ் முஸ்லிம்.

اما الطعن من أئمة الحديث فلا يقبل مجملا اي مبهما بان يقول: هذاالحديث غيرثابت أومنكر أوفلان متروك الحديث أو ذاهب الحديث أومجروح أو ليس بعدل من غير أن يذكر سبب الطعن وهو مذهب عامة الفقهاء والمحدثين.

"ஹாதல் ஹதீது கைரு தாபித்தின், முன்கருன், புலானுன் மத்ரூக்குல் ஹதீது, ராவீஹு மத்ரூக்குல் ஹதீது, ராவீஹு மஜ்ரூஹுன், லைஸ பி அத்லின் கைரு அத்லின், தாஹிபுல் ஹதீது, மஜ்ரூஹுன், லைஸ பி அத்லின் என்னும் வாக்கியங்களை கொண்டு ஜர்ஹ் செய்யப்பட்டிருப்பதோடு எதற்காக இவ்வாக்கியங்கள் பயன்படுத்தப்பட்டது என்பதற்கான காரணம் சொல்லப்படாது தெளிவின்றி இருப்பின் இத்தகைய ஜர்ஹ் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது."



அப்துல் அஸீஸ் இப்னு அஹ்மத் இப்னு முஹம்மத் அல் புகாரி, நூல்: கஷ்புல் அஸ்ரார் ஷரஹு உஸூலில் பஸ்தவீ, அர்ரப்வு வத்தக்மீல், பக்கம் - 99, 100, 103. அஸ்பாபு இக்திலாஃபில் முஹத்திதீன், பக்கம்-525. மிர்ஆத்துல் உஸூல் ஷரஹ் மிர்காத்தில் உஸூல்.

أكثر الفقهاء والمحدثين على أنه لايقبل الجرح إلامبينا لا التعديل.

"தெளிவான காரணம் சொல்லப்பட்ட ஜர்ஹையே ஏற்றுக் கொள்ளப்படும். அன்றி தெளிவில்லாத ஜர்ஹ் ஏற்றுக்கொள்ளப் படா விட்டாலும் த'தீலுக்கு தெளிவான காரணம் சொல்லப்படா விட்டாலும் அதை ஏற்றுக் கொள்ளப்படும் என்பதே சட்டக்கலை மற்றும் முஹத்திதீன்களில் பெரும்பான்மையோரின் தீர்ப்பாகும்."

இப்னுல் ஹுமாம், நூல்: தஹ்ரீருல் உஸூல்.

الجرح المبهم غير مقبول عند الحذاق من الأصوليين.

"அடிப்படை சட்டவாதிகளாகிய அறிஞர் பெருமக்களிடம் மூடலான ஜர்ஹ் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது."

நூல்: அல் பினாயா ஷரஹ் அல் ஹிதாயா.

الجرح المبهم غير معتبر.

"மூடலான ஜர்ஹை கருத்தில் கொள்ளப்பட மாட்டாது."

நூல்: தஜ்ரீதுல் குதூரி.

இதுவரை மேற்கண்ட அறிஞர்களின் தீர்ப்புக்களிலிருந்து நாம் விளங்கிக்கொள்ள வேண்டிய விஷயம் என்னவென்றால், ஹதீதை அறிவித்த ராவி எனப் பேசப்படும் அறிவிப்பாளரை இன்னொரு அறிஞர் பொய்யர் என குறைகூறி என்ன காரணத்திற்காக அவ்வாறு சொன்னார் என்பது தெளிவாக சொல்லப்படாத வரை அவருடைய தகவல் மறுக்கப்பட மாட்டாது. ஆனால் ஒரு அறிவிப்பாளரை இன்னொரு பெரியார் உறுதியானவர் என்னும் வாக்கியத்தை கொண்டு தஃதீல் செய்வாராயின் அதுவே போதுமாகி விடும். அத்துடன் அதற்கான காரணம் சொல்லப்பட வேண்டும் என்பதும் அவசியமல்ல. இந்த விளக்கமாகிறது ஒருவரால் தஃதீலும் இன்னொருவரால் ஜர்ஹும் செய்யப்பட்ட அறிவிப்பாளரின் விஷயத்திலாகும். ஆனால் வெறுமனே ஜர்ஹை மட்டும் கொண்ட அறிவிப்பாளர்

விஷயத்திலல்ல. இத்தகையோரின் ஜர்ஹுக்கு தெளிவு அவசியமில்லை.

ஆனால் ஒரு அறிவிப்பாளரின் விஷயத்தில் ஜர்ஹ் செய்யப்படுவது போல தஃதீலும் செய்யப்பட்டிருக்குமாயின் ஜர்ஹுக்கே முன்னுரிமை அளிக்க வேண்டும். என்றபோதிலும் அப்போது தான் ஜர்ஹ் தெளிவாகஇருக்கிறதா? அல்லது தெளிவற்று இருக்கிறதா என்பது கவனிக்கப்பட வேண்டும். தெளிவாக இருக்கிறதென்று சொன்னாலும் அல்லது தெளிவற்றிருக்கிறது என்று சொன்னாலும் அதைச் சொன்னவர் அக்கலையில் தேர்ச்சி பெற்றவர் எனில், ஜர்ஹ் செய்யும் அந்த அறிஞர் அக்கலைக்குரிய அறிஞர்களால் பொடுபோக்கானவர், கடுமையானவர், பிடிவாதக்காரர், என வகைப்படுத்தப்பட்ட இப்னு ஹஸ்ம், உகைலி, ஹாபிழ் இப்னு அப்துல் பர்ரு, ஹாபிழ் இப்னு ஹிப்பான், ஹாபிழ் இப்னு அபீ ஹாத்தம், யஹ்யா இப்னு ஸயீதுல் கித்தான், ஜௌஸ்ஜானி போன்றோரால் ஜர்ஹ் செய்யப்பட்டுள்ளாரா என்பதை கவனிக்க வேண்டும். இத்தகையோரால் குற்றம் சாட்டப்படும் அறிவிப்பாளரது விஷயத்தில் ஜனுப் ஜுனைத் போன்ற தொலைநோக்குச் சிந்தனையற்ற பின்னும் காசுக்கும் பணத்திற்கும் பதவிக்கும் மார்க்கத்தை விலைபேசும் வியாபாரிகள் தீர்ப்பளிக்க ஒருபோதும் முனையக்கூடாதென அவர்களை எச்சரிக்கிறோம்.

இல்ம் உஸூலில் ஜர்ஹ் வத்தஃதீல் என்னும் நூலின் 217ம் பக்கத்தில் ஹதீதுக்கலையின் மிக முக்கியப் பிரிவான ஜர்ஹ் மற்றும் தஃதீலுக்குரிய கலையில் பிரச்சித்திப்பெற்ற அறிஞர்கள் என்னும் தலைப்பில் சுமார் 109 அறிஞர்களின் பெயர்கள் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதில் ஹாபிழ் தப்ரானி, இமாம் ஹாக்கிம், இமாம் தாரமி, இமாம் தாரகுத்னீ, இமாம் கல்லால், ஹாபிழ் இஸ்பஹானி, இமாம் இப்னு அபீஷைபா, இமாம் அபீ யஃலால் மௌஸிலி, இமாம் பஸ்ஸார் போன்றோர்களும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

மேற்கண்ட அறிஞர்களெல்லாம் தத்தமது நூல்களில் பதிவு செய்துள்ள தகவல்கள் அனைத்தையும் நன்கு அலசி ஆராய்ந்த பின்னரே பதிவு செய்திருப்பர் என்பது நமக்குப் புரிகிறது. ஆதலால் தற்போது அறிவிப்பாளர்களை ஆராய வேண்டிய அவசியம் நமக்கு இல்லை. அதைப் பதிவு செய்துள்ள நூலாசிரியர் மட்டுமே நமக்குப் போதுமாகும். இன்னும் ஒருஹதீதை ஒருவர் ஸஹீஹானது எனக் கூறிய பிறகும் இன்னொரு பெரியார் அதை ழயீப் எனக்கூறுவதை கண்டு நாம் அலட்டிக் கொள்ள தேவையில்லை. இது விஷயத்தில்



ஒவ்வொரு பெரியாரிடமும் தனித்தனி விதிமுறைகள் இருப்பதால் அவரவர் நிபந்தனைக்கேற்ப அவைகள் அமையும்.

இதில் இன்னொரு முக்கியமான விஷயம் என்னவெனில் ஒரு ஹதீதை அறிவித்தவர்களில் ஒருவர், அல்லது பலர் அதிகபட்சம் பாரதூரமான ஜர்ஹை கொண்டவராக இருக்கிறார். ஆனால் அவர்களால் அறிவிக்கப்பட்ட செய்தி குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் அல்லது அகீதாவுக்கும் மாற்றமில்லாததாக இருக்குமாயின் அதை அறிவித்தவர்கள் குறையுள்ளவர்களாக இருப்பதற்காக அவர்களின் தகவலை புறக்கணிக்க முடியாது என்பதையும் நாம் மறந்து விடக்கூடாது.

# ஸியாரத்தும் நபிமொழியும்

இத்தலைப்பில் தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களின் புனிதமிக்க ரௌழாவை தரிசித்தல் பற்றி எடுத்துக் காட்டப் படும் ஒரேயொரு நபிமொழி பற்றி ஆராயப்படுகிறது.

من زار قبري وجبت له شفاعتي.

*"எனது கப்ரை யார் தரிசித்தாரோ அவருக்கு என் ஷபாஅத் கட்டாய"*மாகி விட்டதெனச் சொல்லப்பட்ட நபிமொழி தான் அது.

இந்த ஹதீதை இருவகையான அறிவிப்பாளர்களைக் கொண்டு பதிவு செய்யப்பட்டுள்ளதை நாம் பார்க்கலாம். அவ்விரு வகை அறிவிப்பும் ஹழ்ரத் மூஸா பின் ஹிலால் என்பாரைக் கொண்டே அறிவிக்கப்பட்டிருந்தாலும் அவர் இதனை ஹழ்ரத் உபைதுல்லாஹ் பின் உமர், ஹழ்ரத் நாபிஃ, ஹழ்ரத் இப்னு உமர் போன்றோரிடமிருந்து கிடைக்கப் பெற்றதாகவும், ஹழ்ரத் அப்துல்லாஹ் பின் உமர், ஹழ்ரத் நாபிஃ, ஹழ்ரத் இப்னு உமர் ஆகியோரிடமிருந்து கிடைக்கப் பெற்றதாக வேறொரு இடத்தில் சொல்வதை காணலாம். அதாவது உபைதுல்லாஹ் பின் உமர், அப்துல்லாஹ் பின் உமர் ஆகிய இரு சகோதரர்கள் சொன்னதாகக் கூறுகிறார்.

இதில் உபைத் பின் முஹம்மத் அல் உர்ராக், ஜஃபர் பின் முஹம்மத் அல் பஸரி, முஹம்மத் பின் இஸ்மாயீல் பின் சமுரா அல் அஹ்மஸி, ஃபழ்ல் பின் ஸஹ்ல், முஹம்மத் பின் அப்துர்ரஸ்ஸாக் ஆகிய ஐவரும் மூஸா பின் ஹிலால் அவர்கள் ஹழ்ரத் உபைதுல்லாஹ் பின் உமர் வாயிலாக சொல்லப்பட்டதென அறிவிக்கின்றனர்.



இந்த ஐவர் மூலமாகவும் அறிவிக்கப்பட்ட ஹதீத் சுனன் தாரகுத்னீ, பாகம்-2, பக்கம்-244. ஷுஃபுல் ஈமான், பாகம்-3, பக்கம் - 490. அழ்ழுஅபாஃ, பாகம் - 4, பக்கம் - 170 போன்ற நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

இனி சற்று விரிவாக நாம் இந்த ஹதீதை அறிவிக்கும் மூஸா பின் ஹிலால் மற்றும் ஹழ்ரத் உபைதுல்லாஹ் பின் உமர் போன்றோரின் அறிவிப்பு எந்த வகையில் சாத்தியமாகும் என்பதை பற்றி இப்போது பார்ப்போம்.

## மூஸா பின் ஹிலால்

இவரை அபூ ஹாத்திம் அவர்கள், "மஜ்ஹூல்" ஆனவர் என்றும், உகைலி அவர்கள், "லா யஸிஹ்ஹு ஹதீதுஹு வலா யுதாபஃ அலைஹி" என்றும், இப்னு அத்தி அவர்கள், "அர்ஜூ அன்னஹு லா பஃஸ பிஹி" என்றும், தஹபி, "ஸாலிஹுல் ஹதீத்" என்றும் கூறுகின்றனர். இவை இவரது சுருக்கமான நிலையாகும். பின்னும் ஒருநபரை குறித்து ஒரே கலையில் பிரபலமான நான்குபேர் நான்கு விதமான கருத்தை கூறுகின்றனர். இது அவரவர் நிபந்தனைகளுக்கு ஏற்ப சொல்லப்பட்ட கருத்துக்களாகும். ஆனால் ஒருவரது விஷயத்தில் கடுமையான வார்த்தைகள் ஏதும் பிரயோகிக்கப் படாத நிலையில், இன்னும் பெரும்பான்மையோரால் குற்றம் சாட்டப்பட்ட ஒருவருடைய அறிவிப்பை தான் நாம் கவனத்தில் கொள்ள வேண்டுமேயன்றி ஒருவரால் குற்றஞ் சாட்டப்படுபவர் இன்னொருவரால் ஆதாரப்படுத்தப்படுவாராயின் அவரது அறிவிப்பை கண்டிப்பாக ஆதாரமாகக் கொள்ளலாம். இது இவ்விஷயத்திற் குரிய சுருக்கமான தீர்ப்பாகும். ஆதலால் மேற்கூறப்பட்ட ஒவ்வொரு கருத்தையும் இனி நாம் தீர்க்கமாக ஆராய்வோம் இன்ஷாஅல்லாஹ்.

(1) அபூ ஹாத்திம் அவர்கள் மூஸா பின் ஹிலாலை மஜ்ஹூலானவர் எனக் கூறுகிறார்களல்லவா! இதில் மஜ்ஹூல் என்னும் அரபிப்பதம் மஃரூப் என்னும் பதத்திற்கு எதிர் சொல்லாகும். அதாவது அறியப்படாதவர் என்பது இதற்குரிய அர்த்தமாகும். உதாரணமாக...,

ஜம்யிய்யத்து இஷாஅத்தி அஹ்லிஸ் ஸுன்னா என்பது இலங்கையிலுள்ள ஒரு தனியார் நிறுவனமாகும். இப்போது இந்நிறுவனம் பற்றி இலங்கையிலுள்ள எந்தவொரு நிறுவனத் திற்கும் தெரியாமல் போகுமாயின் அதனை மஜ்ஹூல் - அறியப்

படாத நிறுவனம் எனக் கூறப்படும். அப்போது அந்நிறுவனத்தின் பெயரால் ஒரு தகவல் சொல்லப்படுமாயின் அதனை ஏற்க முடியாது. அதேநேரம் இன்னொரு நிறுவனம் அந்நிறுவனத்தைப் பற்றி ஒரு தகவலை சொல்லுமாயின் அல்லது அந்நாட்டின் முக்கியப் பிரமுகர்களில் ஒருவரும் நிறுவனங்கள் தொடர்பான தகவல்களை திரட்டுகின்ற ஒருவரும் ஒரு தகவலை சொல்வாராயின் முதலில் சொல்லப்பட்ட தகவலின் தீர்ப்பானது பதிவுப் புத்தகத்தில் பதியப்பட்டிருந்தாலும் அது இயற்கையாகவே செயலிழந்து போய்விடும் என்பதை உங்களில் மறுப்போர் எவரேனுமுண்டா? ஆதலால் இந்த உதாரணத்தை நன்கு மனதில் பதிய வைத்துக்கொண்டு அடுத்து சொல்லப்போகும் விஷயத்தை ஆழமாக சிந்திக்க வேண்டுகிறேன்.

மூஸா பின் ஹிலாலை அபூ ஹாத்திம் ராஸி என்பவர் "அல் ஜூர்ஹ்" என்னும் நூலில் பாகம்-8, பக்கம்-166ல் மஜ்ஹூலானவர் எனக் கூறுகிறார். இவ்வாறே தாரகுத்னியும் "அஸ்யிலத்துல் புர்கானி" என்னும் நூலில் இவரது விஷயத்தில் இதே வார்த்தையை கூறியிருப்பதையும் காணலாம். அத்துடன் இந்நூல்களும் இதன் ஆசிரியர்களும் பிரபலமானவர்கள் என்பதோடு நம்பிக்கைக்குரியவர்கள் என்பதிலும் சந்தேகமில்லை. இருப்பினும் இவர்களது கருத்தை ஆதாரமாகக் கொண்டு செயல்படுமுன் இவரைக் குறித்து இன்னும் சிலர் என்ன கூறுகிறார்கள் என்பதையும் நாம் கவனிக்கக் கடமைப்பட்டுள்ளோம். அதன் பின்னரே இவர் சம்பந்தமாக நாம் ஒரு தீர்க்கமான முடிவுக்கு வர வேண்டும்.

பாருங்கள். இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரழியல்லாஹூ அன்ஹூ அவர்களும் பிரபலமான அறிஞர்களில் ஒருவராகும். அத்துடன் இவர்கள் ஹன்பலி மத்ஹபை தோற்றுவித்தவர்களும் ஹதீதுக்கலை ஆசிரியருமாகும். முஸ்னத் அஹ்மத் என்பது இவர்களது பிரபலமான நூலாகும். இதில் இவரைக் கொண்டு 28199 ஹதீதுகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அதில் 12054வது ஹதீதை மூஸா பின் ஹிலால் அவர்கள் அறிவித்ததாக பதிவு செய்துள்ளார்கள். இதன்றி மூஸா பின் ஹிலால் இமாம் ஹன்பலியின் மஷாயிகீன்களில் ஒருவருமாகும். மூஸா பின் ஹிலாலை ஹாபிழ் அபூ ஹாத்திம் அவர்கள் அறியப்படாதவர் எனக் கூறியதற்காக அவரால் அறிவிக்கப்பட்ட ஹதீதை ஒதுக்க முனைவோமாயின் அதே மூஸா பின் ஹிலாலைக் கொண்டு அறிவிக்கும் அபூ ஹாத்திமை விட பலமடங்கு அறிவாற்றலைக் கொண்ட உலகம் போற்றும் பேரறிஞரான இமாம் ஹன்பலின் கருத்துக்கு நாம் என்ன பதில் சொல்வோம்?



மேலும் அஹ்மத் பின் கலீல், முஹம்மத் பின் இஸ்மாயீலுல் அஹ்மஸி, அபூ உமைய்யா முஹம்மத் பின் இப்ருஹீம் அத்தர்தூஸி, உபைத் பின் முஹம்மத் அல் உர்ராக், ஃபழ்ல் பின் ஸஹ்ல், ஜஃபர் பின் முஹம்மத் அல் பரூஸி, முஹம்மத் பின் ஸன்ஜவைஹ் அல் அசீரி, அலீ பின் மஃபத் பின் நூஹ், அப்பாஸ் பின் ஃபழ்ல், ஹாரூன் பின் சுப்யான், முஹம்மத் பின் ஜாபிர் அல் முஹாரிபி, அஹ்மத் பின் அல் கர்ஸா, அபூ முஹம்மத் அப்துல் மலிக் பின் இப்ருஹீம், முஹம்மத் பின் அப்துர் ரஸ்ஸாக் போன்றோரும் மூஸா பின் ஹிலாலின் அறிவிப்பை தங்களின் நூல்களில் பதிவு செய்துள்ளனர்.

இன்னும் யஃகூப் பின் சுப்யானுல் ஃபஸ்வி என்பாரும் மூஸா பின் ஹிலாலை பிரபலமானவர் என்று நம்பிக்கை தெரிவிக்கிறார். பார்க்க : அல்மஃரிபா வத்தாரீக், பாகம்-1, பக்கம்-122, 127, 128.

இன்னும் எந்தக் கலையில் அபூ ஹாத்திம் பிரபலமானவரோ அதே கலையில் பிரபலமானவர்கள் தான் இப்னு அத்தி என்பாரும் தஹபி என்பாருமாகும். இனி அபூ ஹாத்திமால் மஜ்ஹூல் எனக் குற்றஞ் சாட்டப்பட்டவர் இப்னு அத்தியால் "அர்ஜூ அன்னஹூ லா பஃஸ பிஹி" என்னைப் பொறுத்தவரை அவர் பிரச்னைக்குரியவரல்ல என்றும், தஹபியால் "ஸஹீஹூல் ஹதீத்" ஸஹீஹான ஹதீதைச் சொல்லக் கூடியவர் என்றும் பரிசுத்தப்படுத்தப் படுகின்ற மூஸா பின் ஹிலால் அறியப்படாத ஒருவரா என்ன? என்பதை நீங்களே முடிவு செய்யுங்கள்.

மேலும் ஒரு மனிதருக்குள் நல்ல பழக்கம் தீய பழக்கம் என இருவகை குணாதிசயங்கள் காணப்படுவது இயற்கையாகும். அதற்காக அவரை இழிவுபடுத்த கங்கனம் கட்டிக்கொண்டு அவரது தகவல்களைப் பொய்யாக்க வேண்டுமென்றே திட்டம் தீட்டிக்கொண்டு அவரில் காணப்பட்ட நல்ல பண்புகளை எல்லாம் மறைத்து விட்டு தீய பண்புகளை மட்டும் பிரபலப்படுத்துவது என்பது நல்ல பண்புடையோரின் செயலல்லவே. இதேபோல ஹதீதுகளை அறிவித்தவர்களில் "ஜூர்ஹ்" என்றும் "தஃதீல்" என்றும் இருவகை பண்புகள் உள்ளன.

இதில் ஜூர்ஹ் மற்றும் தஃதீல் உடைய படித்தரங்கள் என்ன? அவற்றுக்கு பயன்படுத்தப்படும் வார்த்தைகள் என்ன? அவைகளில் முதல் தரம், நடுத்தரம், மட்டம் எனப் பல வகைகளுள்ளன. இதனை விளக்க வேண்டிய அவசியம் நேரும் பட்சத்தில் நாதாக்களின் நல்லாசியால் விளக்குவோம் இன்ஷாஅல்லாஹ்.

எனவே அந்த ஹதீதைச்சொன்னவரின் ஜுர்ஹ் எந்த வகையை சார்ந்தது? அவரது தஃதீல் எந்த வகையைச் சார்ந்தது? என்பது பற்றிய இரு நிலைகளையும் தீர விசாரித்த பின்னரே அவரால் அறிவிக்கப்பட்ட ஹதீத் எப்படிப்பட்ட அந்தஸ்த்தை கொண்டதென்று சொல்ல முடியும். இது ஹதீதுக் கலையின் அடிப்படைச் சட்டங்களுக்குரிய தீர்ப்பாகும். ஆனால் இவர்கள் அறிவிப்பாளர்களுடைய ஜுர்ஹை மட்டும் எடுத்துக் காட்டகின்றனரே அன்றி தஃதீலை அல்ல. இது இவர்கள் இஸ்லாத்திற்கு செய்யும் பகிரங்கமான துரோகமாகும்.

ஆதலால் மூஸா பின் ஹிலால் மஜ்ஹுலானவரல்ல. அவரால் எடுத்துக் காட்டப்படும் ஹதீதுகள் ஏற்கத்தக்கவை தானென்பதற்கு இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரஹிமஹுல்லாஹ் ஒருவரே போதுமாகும் எனச்சொல்ல, இதில் குறுக்கிடும் இப்னு அப்துல் ஹாதி தமது "அஸ்ஸாரிமுல் முன்கீ" என்னும் நூலின் 40-41வது பக்கங்களில் பின்வருமாறு கூறுகிறார்.

رواية أحمد عن الثقات هو الغالب من فعله والأكثر من عمله كما هو المعروف من طريقة شعبة ومالك وعبد الرحمن ابن مهدى ويحى بن سعيد القطان وغيرهم.وقد يروى الامام أحمد قليلا فى بعض الاحيان عن جماعة نسبوا الى الضعف وقلة الضبط وذلك على وجه الإعتبار والإستشهاد لا على طريق الإجتهاد والإعتماد مثل رواية عن عامر بن صالح الزبيرى ومحمد بن القاسم الاسد وعمر بن هارون البلخى وعلي بن عاصم الواسطى وابراهيم بن أبى الليث صاحب الأشجعى ويحى بن يزيد بن عبد الملك النوفلى ونصر بن باب وتليد بن سليمان الكوفى وحسين بن الأشقر وأبى سعيد الصاغانى ومحمد بن ميسر ونحوهم ممن إشتهر الكلام فيه وهكذا روايته عن موسى بن هلال إن صحت روايته عنه.

"அஹ்மத் (இமாம்) அவர்கள் பெரும்பாலும் நம்பிக்கைக்குரியவர்களின் தகவல்களையே அறிவிப்பதுண்டு. சிலபோது



ஸஹீஹான ஹதீதுக்கு இருக்க வேண்டிய கட்டாயமான பண்புகளில் ஒருசில பண்புகள் இழக்கப்பட்டோரின் தகவல்களையும் அறிவிப்பதுண்டு.

இதற்கு ஆமிர் பின் ஸாலிஹ் அஸ்ஸுபைரி, முஹம்மத் பின் அல் காஸிமுல் அஸதி, உமர் பின் ஹாரூனுல் பல்கீ, அலீ பின் ஆஸிமுல் வாஸிதீ, இப்ருஹீம் பின் அபில்லைஸ் ஸாஹிபுல் அஷ்ஜயீ, யஹ்யா பின் யஸீத் பின் அப்தில் மலிகின் நௌபலீ, நஸ்ர் பின் பாப், தலீத் பின் சுலைமானுல் கூபி, ஹுஸைன் பின் ஹசன் அல் அஷ்கர், அபீ ஸயீதிஸ் ஸாகானி, முஹம்மத் பின் மைசர் போன்றோரை உதாரணமாகக் காட்டலாம். இவர்களைப் போன்றவர் தான் மூஸா பின் ஹிலாலுமாகும். இவரால் அறிவிக்கப்பட்ட ஹதீத் உண்மையாயினும் சரியே."

மேற்கண்டோரில் ஆமிர் பின் ஸாலிஹுஸ் ஸுபைரீ, முஹம்மத் பின் காசிமுல் அஸதி, உமர் பின் ஹாரூனுல் பல்கீ, இப்ருஹீம் பின் அபீ அல்லைத் போன்றோர் மிகக் கடுமையான விமர்சனத்திற்கு உள்ளாக்கப்பட்டவர்கள் தான். அதற்காக ஹதீதுக்கலையின் சட்ட திட்டங்களையும் அதற்குரிய நிபந்தனைகளையும் நன்கு தெரிந்தவரெனச் சொல்லப்படும் அப்துல் ஹாதி மேற்கூறப்பட்டவர்களோடு மூஸா பின் ஹிலாலையும் இணைத்துப் பேசுவது அக்கலைக்கு அவர் செய்யும் மிகப்பெரும் துரோகமென்று தான் சொல்ல வேண்டும். ஏனெனில் இமாம் அஹ்மதவர்கள் நம்பிக்கைக்குரியவர்களின் தகவல்களையே அறிவித்துள்ளார்கள் என்பதே நமது தீர்ப்பாகும். காரணம் என்னவெனில்.,,,

நம்பிக்கைக்குரியவர் அல்லாத ஒருவரின் தகவலை நம்பிக்கைக்குரிய ஒருவர் அறிவிப்பாராயின் அந்நிலையில் அத்தகவலின் நிலை என்ன? என்பதாக இப்னு அபீ ஹாத்திம் அவர்கள் தமது தந்தையிடம் கேட்டபோது, அதற்கவர்.,,,

قال:إذا كان معروفا فى الضعف لم تقوه روايته عنه وإذا كان مجهولا نفعه روايته.

"அவரொரு ழயீபானவர் என்பது மஃரூபாக இருக்குமானால் அந்நிலையில் அவரது தகவலை நம்பிக்கைக்குரிய ஒருவர் அறிவித்தாலும் அதனால் எந்தப் பிரயோஜனமுமில்லை. ஆனால் அதேநேரம் மஜ்ஹுலான ஒருவரின் தகவலை நம்புவதற்கு நம்பிக்கைக்குரிய

**ஒருவரின் அறிவிப்பே போதுமாகும்**" என்று சொன்னார்கள். இதைத் தொடர்ந்து இப்னு அபீஹாத்திம் கூறுகிறார்.

நம்பிக்கையற்ற ஒருவரின் தகவலை நம்பிக்கைக்குரிய ஒருவர் அறிவித்தால் அது பலம் வாய்ந்ததாகுமா? என்று நான் (ஹாத்திம்) அபூ ஸுர்ஆவிடம் கேட்டபோது, அதற்கவர்; உமரைக் குறித்தா கேட்கிறாய் என்று கேட்டார். அதற்கு நான், இல்லை. கல்பியைக் குறித்து கேட்கிறேன் என்று சொல்ல, அதற்கவர்; கல்பி சொன்னதாக இமாம் சுப்யானுஸ் ஸௌரி அவர்கள் அறிவித்துள்ளார்களே என்று கூறினார். இது கல்பியைக் குறித்த குற்றச்சாட்டுகள் எடுத்துக் காட்டப்படுவதற்கு முன்னால் நடைபெற்ற சம்பவங்களாகும் என்று கூறுகிறார்.

இவ்வாறே அபூ முஹம்மத் என்பார் தமது தந்தையிடம் இமாம் ஸௌரி அவர்கள் கல்பியை ழயீபானவர் எனக் கணக்கெடுத்த பின்பும் அவரது தகவலை அறிவித்ததற்குரிய காரணமென்ன? என்று கேட்டபோது, அதற்கவர்; கல்பி சொன்னதாக இமாம் ஸௌரியவர்களால் அறிவிக்கப்பட்ட தகவல்கள் அனைத்தும் "இன்கார்" மற்றும் "தஅஜ்ஜுப்" உடைய விஷயத்திலாகும் என்று கூறினார். நூல் : அஜ்ஜர்ஹ் வத்தஃதீல், பாகம்-2, பக்கம்-36.

ஆதலால் மேற்கூறப்பட்டவைகளை கொண்டு நாம் கவனத்தில் கொள்ள வேண்டிய விஷயம் யாதெனில் ஒரு தகவலை சொன்னவர் "மஜ்ஹுலுல் ஹால்" அவரது நிலைபற்றி அறியப்படாதவராக இருந்தால், அல்லது முஹம்மத் பின் அஸ்ஸாயிபுல் கல்பீ, ஜாபிருல் ஜுஃபீ, ஆமிர் பின் ஸாலிஹுஸ் ஸுபைரி, அம்ர் பின் ஹாரூனுல் பல்கீ போன்றோரைப் போல "ழுஃபு" உடைய படித்தரத்தில் ஆரம்ப நிலையுடையோராக இருந்தால் அத்தகையோரின் தகவல்களை நம்பிக்கைக்குரியவர்கள் அறிவிக்கும் போது அத்தகவலும் நம்பிக்கைக்குரியதாகவும், ஆதாரத்திற்குரியதாகவும் அமைந்து விடும் என்பதை நம்மால் விளங்க முடிகிறது.

அதன் அடிப்படையில் தான் ஒரு சிலரின் கருத்தைக் கொண்டு அவர் "மஜ்ஹுலுல் ஹால்" என்பதை நாம் ஒப்புக்கொண்ட போதிலும் அவரது தகவலை மிக மிக நம்பிக்கைக்குரிய இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் அறிவித்திருப்பதால் அவரது தகவல் ஏற்கத்தக்க ஒன்றாகி விட்டதென்பதை நாம் வலியுறுத்துகிறோம்.

இதுபற்றிஇதேதுறையை சார்ந்த மற்றொருவர் சொல்லும் போது,...



ان جهالة الراوى لا توجب قدحا إذا كان من يروى عنه ثقة فإن روايته عنه تكون تعديلا له.

"ஒரு தகவலை சொன்னவர் **மஜ்ஹுலாக இருந்தாலும் அதனை நம்பிக்கைக்குரிய ஒருவர் அறிவிப்பாராயின் அதுவே அது ஏற்கப் படுவதற்கு போதுமாகும்**" என்பதாகக் கூறுகிறார் இமாம் ஸரக்ஷீ அவர்கள்.

நூல் : அல் முஃதபர் ஃபீ தாரீகி அஹாதீதில் மின்ஹாஜி வல் முக்தஸர், பக்கம்-226.

எனவே மூஸா பின் ஹிலால் மஜ்ஹுலானவர் அல்ல என்பதை திடமாக நம்புங்கள். மேலும் இப்னு அப்துல் ஹாதியின் கருத்துக்கு நீங்கள் மதிப்பளிப்பவராக இருந்தாலும் அவரால் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு ஆதாரமற்றது என்பதையும் உணர்ந்து கொள்ளுங்கள். இன்னும் மூஸா பின் ஹிலால் மஜ்ஹுலானவர் என்று சொல்லப்பட்டதற்காக அவரது தகவலை ஒதுக்கி விடாதீர்கள். இனி இவ்விஷயத்தில் பிடிவாதப் போக்குடையோருக்கு அல்லாஹ்வே போதுமானவன். ஆதலால் இதுவரை கூறப்பட்டவை அனைத்தும் மூஸா பின் ஹிலால் மஜ்ஹுலானவர் அல்ல என்பதை ஆதாரப்படுத்த எடுத்துக் காட்டப்பட்ட விளக்கங்களாகும்.

(2) இமாம் உகைலி என்பார் அழ்ழுஅபாவுல் கபீர் என்னும் நூலின் பாகம்-4, பக்கம்-170ல் (லா யஸிஹ்ஹு ஹதீதுஹு வலா யுதாபஃ அலைஹி) என்பதாக மூஸா பின் ஹிலாலை குறித்து அவரால் அறிவிக்கப்படும் ஸியாரத்துத் தொடர்பான தகவல் வேறொருவரால் அறிவிக்கப்படாததால் அவரது தகவல் சரியானதல்ல என்று கூறுகிறார்.

மூஸா பின் ஹிலாலால் சொல்லப்பட்ட தகவலைப் போன்று வேறுயாரும் சொல்லவில்லை என்பது குற்றச்சாட்டாகும். ஹதீதுக் கலையைப் பொறுத்தவரை ஒரு தகவலை ஒருவர் மட்டும் தான் கூறியிருக்கிறார். அவர் சொன்னதைப் போல வேறுயாரும் சொல்லவில்லை என்பது ஒரு குற்றச்சாட்டே கிடையாது. இமாம் உகைலி யிடம் இதோர் குற்றச்சாட்டு என்பதை யாராவது நிரூபிக்க முடியுமா? மாறாக ஒரு தகவல் ஒரேயொரு அறிவிப்பாளரால் மட்டுமே அறிவிக்கப்படுகிறது என்பதை தெரிந்து கொள்வதற்குரிய அடையாளமாகவே இவ்வாறு கூறியுள்ளார் என்பதை நாம் விளங்கிக்கொள்ள வேண்டும்.

இதுபற்றி ஹாபிழ் இப்னு ரஜப் அவர்கள் ஷரஹ் இலலித்திர்மிதி என்னும் நூலின் 264வது பக்கத்தில்,...

وأما أكثر الحفاظ المتقدمين فإنهم يقولون فى الحديث إذا تفرد به واحد وإن لم يرو الثقات خلافه أنه لا يتابع عليه ويجعلون ذلك علة فيه.

*"ஒரு தகவலை ஒருவர் மட்டுமே அறிவித்து அத்தகவலுக்கு மாற்றமானதொரு தகவல் நம்பிக்கைக்குரியவர்களால் எடுத்துக் காட்டப்படாது போகும் பட்சத்தில் அதை ஒரு காரணமாக வைத்து (இன்னஹு லா யுதாப.: அலைஹி) என்பதாக முன்னோர்களில் பெரும்பான்மையான ஹுப்பாழ்கள் கூறுகின்றனர்."*

மேலும் ஒரு தகவலை சொன்னவர் நம்பிக்கைக்குரியவர் என்னும் படித்தரத்தில் மிக உயர்ந்தவராக இல்லாதிருந்து அவர் மட்டுமே அதை அறிவித்திருந்தால் அந்நிலையில் அவர் ஸஹீஹானவரே. ஏனெனில் இது ஜுர்ஹின் எந்தவொரு படித்தரத்தையும் சார்ந்த தல்லவாதலால் இதை ஒரு காரணமாகக் காட்டி அவரது தகவலை விடமுடியாது. அதேநேரம் அவர் ஸாலிஹுல் ஹதீதாக இருப்பார். அல்லது நடுத்தரவாதியாக இருப்பார் என்பது உகைலியின் தீர்ப்பாகும். அத்துடன் அவரது தகவலைப் போன்றே இன்னொரு வரது தகவலும் இருக்குமாயின் இந்நிலையில் கண்டிப்பாக முந்திய வரது தகவல் ஏற்கத்தக்க ஒன்ருகும் என்பதும் உகைலியுடைய தீர்ப்பாகும். இனி ஸியாரத்துத் தொடர்பான தகவல் மூஸா பின் ஹிலாலால் மட்டுமா சொல்லப்பட்டுள்ளது? அவரது கருத்தைப் போன்றே அவரல்லாத மற்றவர்களாலும் சொல்லப்பட்டுள்ளதா என்பனவற்றை அடுத்து வரும் வரிகளில் பார்ப்போம் இன்ஷா அல்லாஹ்.

இனி மேற்கண்ட இமாம் உகைலியுடைய கருத்தை மையமாக கொண்டு செயல்பட முடியாதென்பதற்கு முக்கியமான மற்று மோர் காரணமானது, அஸ்மாவுர் ரிஜாலுடைய விஷயத்தில் மிகவும் பிரசித்திப்பெற்ற ஹாபிழ் இப்னு ஹஜர் அவர்கள் "அத்தல்கீஸுல் ஹிப்யர்" என்னும் நூலின் பாகம்-2, பக்கம்-267ல் இவ்வாறு கூறுகின்றனர். இமாம் உகைலியவர்கள் ஸியாரத்துத் தொடர்பான தகவலை மூஸா பின் ஹிலால் அல்லாத வேறுயாரும் சொல்லவில்லை எனக்கூறிய கருத்து ஆராயப்பட வேண்டிய ஒன்ருகும் என்று சொல்வதுடன் இவரது தகவலைப் போன்ற வேறு



தகவல்களும் பதிவாகியுள்ளன என்றும் கூறுகின்றனர்.

எனவே மூஸா பின் ஹிலால் சம்பந்தமாக சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுக்கள் எதுவும் வலுவானதாக இல்லை. அத்துடன் அக்குற்றச் சாட்டுக்குரிய சரியான பதில்களையும் நாம் பார்த்தோம். ஆதலால் மூஸா பின் ஹிலால் மீது பலமான ஜுர்ஹ் ஏதும் இல்லாதிருந் ததால் தான் இமாம் தஹபி அவரை ஸாலிஹுல் ஹதீத் என்றும், இமாம் இப்னு அத்தீ அர்ஜூ அன்னஹு லா பஃஸ பிஹி என்றும் கூறினர்.

ஆக சுருங்கக் கூறின் எந்தவொரு அறிவிப்பாளரைக் குறித்தும் யார் எதை சொன்னாலும் அவரைப் பற்றி சொல்லப்பட்டுள்ள இரு தரப்பு கருத்துக்களையும் தீர ஆராயாது ஒவ்வொருவரும் அவரவ ருக்குத் தோதான கருத்தைச் சொல்லி பாமர மக்களை குழப்பக் கூடாது. அத்துடன் விஷயம் முழுவதையும் படித்தபின் தான் தீர்க்கமானதொரு முடிவுக்கும் வர வேண்டும்.

இவ்வாறே ஒரு அறிவிப்பாளரின் குற்றச்சாட்டுக்கு முக்கியத் துவம் கொடுப்பதைப் போல அவரது பரிசுத்தத் தன்மைகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து தீர்ப்பளிக்க பழகிக் கொள்ளுங்கள். பின்னும் இதுவரை கூறப்பட்டு வந்த விஷயங்களனைத்தும் ஸியாரத்துச் சம்பந்தமான ஹதீதை ஏற்க முடியாது என்பதற்குரிய முதல் குற்றச்சாட்டுக்குரிய விளக்கமாகும். இனி இந்த ஹதீதை ஏற்க முடியாது என்பதற்குரிய இரண்டாவது காரணத்தையும் அதற்குரிய பதிலையும் இப்போது பார்ப்போம்.

அதற்குமுன் நாம் இன்னொன்றையும் உங்களின் கவனத்திற்கு தந்து விடுகிருேம். அதாவது, இமாம் உகைலியும் இமாம் இப்னு அபீஹாத்திமும் மூஸா பின் ஹிலாலைப் பற்றிய அவர்களது கருத்தை கூறியிருந்தனர். அவர்கள் அக்கலையில் பாண்டித்தியம் பெற்றிருந் ததால் அவர்களது கடமையை அவர்கள் செய்தனர். அதேநேரம் அவர்கள் ஸியாரத்திற்காக பிரயாணம் செய்யும் விஷயத்தில் எப்படிப்பட்ட கருத்தைக் கொண்டிருந்தனர் என்பதை நாம் நோக்கும்போது அவர்கள் நம்முடைய கருத்தை கொண்டவர்க ளாகத்தான் இருந்திருப்பர் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை. ஏன் தெரியுமா?

இமாம் அபூ ஹாத்திமை புகழ்வோரில் ஒருவர் அவர்களைப் பற்றி சொல்லும்போது,...

وكان زاهدا يعد من الأبدال.

"அவர்கள் அப்தால்களில் ஒருவராக இருக்கலாம் என எண்ணும ளவிற்கு அவர்கள் ஒரு ஸாஹிதாக இருந்தார்கள் என்று கூறுகிறார்."

இனி அப்தால்கள் எனப்படுவோர் பூமியில் எப்போதும் இருந்து கொண்டேயிருப்பர் என்பது இஸ்லாமியக் கொள்கை யாகும். ஆதலால் அப்தால்களில் ஒருவராக இருக்கலாம் என எண்ணுமளவிற்கு ஸாஹிதாக இருந்த ஒருவர், ஸியாரத்துச்செய்வ தற்காக பயணம் செய்வதை கண்டிப்பாக பாவமான காரிய மென்று ஒருபோதும் சொல்லியிருக்கவே மாட்டார்.

அடுத்து இமாமவர்கள் ஹிஜ்ரி 240ல் பிறந்தவராகும். இது போன்றே இமாம் உகைலி ஹிஜ்ரி 322ல் இறையடி சேர்ந்தவ ராகும். இக்காலங்களில் வஹ்ஹாபிஸம் என்ற ஒன்று இருந்ததற்குரிய வரலாறே இல்லை. அத்துடன் ஸியாரத்திற்காக பயணம் செய்வதை பாவமான காரியமென்று சொன்ன முதல் ஆசாமியே சுமார் 648 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றி மறைந்த இப்னு தைமிய்யா என்பவர்தான். இவரது சீடர்களில் ஒருவரான இமாம் தஹபியும் இதே கலையில் கடினமான போக்கை கையாண்டவர். இப்படிப்பட்டவரே இமாம் உகைலி மற்றும் அபீ ஹாத்திம் போன்றோரின் கருத்துக்களை முன்வைத்த பின்னரும் மூஸா பின் ஹிலாலை ஸாலிஹுல் ஹதீத் எனக் கூறுகின்றாரெனில் கண்டிப்பாக அவரது தகவல் ஏற்கத்தக்க ஒன்று தானென்பதில் அறவே சந்தேகமில்லை.

## மூஸா பின் ஹிலாலும் உபைதுல்லாஹ் பின் உமரும்

எனது ரௌழாவை தரிசித்தோர் மீது எனது ஷபாஅத் கட்டா யமாகி விட்டது என்பதாக ஏந்தல் எங்கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களால் சொல்லப்பட்ட ஹதீத், அப்துல் லாஹ் பின் உமர், உபைதுல்லாஹ் பின் உமர் ஆகிய இருவர் வாயிலாக மூஸா பின் ஹிலாலைக் கொண்டு சொல்லப்பட்டதாக பதிவு செய்யப்பட்டுள்ளது.

இதனை மூஸா பின் ஹிலாலைக் கொண்டு மொத்தம் ஆறுபேர் அறிவிக்கின்றனர். அவர்களில் மூன்றுபேர் மூஸா பின் ஹிலால் இருவர் வாயிலாகச் சொன்ன தகவலையும், இருவர் உபைதுல் லாஹ் வாயிலாகச் சொல்லப்பட்ட தகவலையும், ஒருவர் அப்துல் லாஹ் வாயிலாகச் சொல்லப்பட்ட தகவலையும் அறிவிக்கின்றனர்.



இதை நாம் கொஞ்சம் தெளிவாக பார்ப்போம்.

அலீ பின் மஃபத், ஃபழ்ல் பின் ஸஹ்ல், முஹம்மத் பின் இஸ்மாயீல், உபைத் பின் முஹம்மத் பின் அல் வர்ராக், ஜஃபர் பின் முஹம்மத் அல் பரூஸி, முஹம்மத் பின் அப்துர் ரஸ்ஸாக் ஆகிய ஆறுபேரும் மூஸா பின் ஹிலால் கூறியதாக அறிவித்தவர்களாகும். இவ்வாறு பேர்களில்.,,,

உபைத் பின் முஹம்மத் அல் வர்ராக், ஃபழ்ல் பின் ஸஹ்ல், முஹம்மத் பின் இஸ்மாயீல் அல் அஹ்மஸீ ஆகிய மூவரும் அப்துல்லாஹ், உபைதுல்லாஹ்வாகிய இருவரும் சொன்னதாக மூஸாவைக் கொண்டு அறிவிக்கின்றனர். இது ஸுனன் தாரகுத்னீ பாகம்-2, பக்கம்-244. ஷுஃபுல் ஈமான், பாகம்-3, பக்கம்-490. தல்கீஸுல் முதஷாபஹ், பாகம்-1, பக்கம்-581. ஷிபாவுஸ் ஸகாம் போன்ற நூல்களில் பதிவு செய்யப்பட்டிருப்பதை காணலாம்.

அடுத்து முஹம்மத் பின் அப்துர் ரஸ்ஸாக், ஜஃபர் பின் அல் பரூஸி ஆகிய இருவரும் உபைதுல்லாஹ்வைக் கொண்டு அறிவிக் கின்றனர். இது அஷ்ஷிபா, பாகம்-2, பக்கம்-74. அழ்ழுஅபாஃ, பாகம்-4, பக்கம்-170லும் பதிவு செய்யப்பட்டுள்ளதை பார்க்கலாம்.

இவ்வாறே அலீ பின் மஃபத் பின் நூஹ் என்பார் மூஸாவைக் கொண்டு அப்துல்லாஹ் வாயிலாக அறிவிக்கிறார். இது அல்குன்னு வல் அஸ்மாஃ என்னும் நூலின் பாகம்-2, பக்கம்-64ல் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இனி இதை சுருக்கமாகச் சொல்வதாயின் ஐந்துபேர் உபைதுல் லாஹ்வைக் கொண்டு மூஸாவால் சொல்லப்பட்டதென்றும், நான்குபேர் அப்துல்லாஹ்வைக் கொண்டு மூஸாவால் சொல்லப் புட்டதென்றும் அறிவிக்கின்றனர். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் உபைதுல்லாஹ்வைக் கொண்டு சொல்லப்பட்ட தகவலுக்கே முன்னுரிமை அளிக்கப்படும். இனி இருவரை கொண்டு சொல்லப் பட்டதும் ஏற்கத்தக்க ஒன்றுதான் என நாம் மட்டும் சொல்லவில்லை. மாறாக ஹதீதுடைய விஷயத்தில் மிகவும் அலட்சியத் தன்மையை தனக்குள் கொண்டிருந்த ஜனுப் அல்பானி இர்வாவுல் கலீல் என்னும் தமது நூலில் பாகம்-4, பக்கம்-337ல் இருவரைக் கொண்டு சொல்லப்பட்ட தகவலும் ஏற்கத்தக்க ஒன்றுதான் என்று கூறுகிறார். பிறகு அதை அவர் ஏன் புறக்கணித்தார் எனக் கேட்கத் தோன்றுகிறதல்லவா? அதற்கு வேறொன்றும் காரணமல்ல. திருடனுக்கு திருடுவது குற்றம்தான் என்பதைத் தெரிந்து கொண்டே

திருடுகிருன் என்ருல் அதற்கு அவனுடைய திருட்டுத் தலைவன் தான் காரணமாகும். இவ்வழிகேட்டுக்குரிய ஆசாமிக்கு உபைதுல் லாஹ்வைக் கொண்டு மூஸாவால் சொல்லப்பட்ட தகவல் ஏற்கத் தக்க ஒன்று தானென்று தெரிந்தும் இவ்விஷயத்தில் அவர் பின் வாங்கியதற்குரிய காரணம் அவரது வழிகேட்டுக்குரிய தலைவரான இப்னு அப்துல் ஹாதி தான் என்பதை நாம் விளங்கிக் கொள்ளலாம். அடுத்து அவர் என்ன சொல்கிருரென்று பாருங்கள்.

**وكان موسى بن هلال حدث به مرة عن عبيد الله فأخطأ لأنه ليس من أهل الحديث ولا من المشهورين بنقل وهو لم يدرك عبيد الله ولا لحقه فإن عبيد الله متقدم الوفاة كما ذكرنا ذلك فيما تقدم بخلاف عبد الله فإنه عاش دهرا بعد أخيه عبيد الله وكان موسى بن هلال لم يكن يميز بين عبيد الله وعبد الله ولا يعرف أنهما رجلان فإنه لم يكن من أهل العلم ولا يعتمد عليه فى ضبط باب من أبوابه.**

***"மூஸா பின் ஹிலால் உபைதுல்லாஹ் சொன்னதாகச் சொன்ன செய்தி தவருகும். ஏனெனில் இவர்ஹதீதுக்கலையைச் சார்ந்தவரோ அல்லது ஹதீதுகளை அறிவிப்பதில் பிரபலமானவரோ அல்ல. இன்னும் இவர் உபைதுல்லாஹ்வின் காலத்தில் வாழ்ந்தவரோ அவரை சந்தித்தவரோ அல்ல. ஏனெனில் உபைதுல்லாஹ் இவருக்கு முன்பே இவ்வுலகை விட்டு மறைந்து விட்டவராகும். இவ்வாறே அப்துல்லாஹ் உபைதுல்லாஹ்வுக்குப் பின் சிலகாலம் வரை இவ்வுலகில் வாழ்ந்திருந்தார். இந்நிலையில் மூஸா பின் ஹிலால் உபைதுல்லாஹ் யார்? அப்துல்லாஹ் யார்? என்பதை பிரித்தறிய முடியாதவராயும் இருந்திருக்கிருர்"*** என்பதாகக் கூறுகிருர்.

அல்லாஹ்வின் நல்லுதவியாலும் நாதாக்களின் நல்லாசியாலும் இவ்விஷயத்தில் நாம் சொல்ல விரும்புவது என்னவென்ருல் இது இப்னு அப்துல் ஹாதி என்னும் தனிநபருடைய மிகமோசமான அதேநேரம் படுமட்டமான பிடிவாதத்திற்குரிய வீண்பழியாகும். இவர் நடைமுறைக்கு முழுக்க முழுக்க மாற்றமான ஒரு கருத்தை தான் சொல்கிருர். இன்னும் இவரது கருத்துக்கு அல்பானி போன்ற தீவிரவாதிகள் ஆதரவளித்து அக்கருத்தை மக்களிடையே திணிக்க



முற்பட்டதால் தான் இதற்கு மறுப்பு தெரிவிக்க வேண்டிய நிர்பந்தம் உருவாயிற்று.

இனி உபைதுல்லாஹ்வைக் கொண்டு மூஸாவால் சொல்லப் பட்ட தகவலை ஐந்துபேர் அறிவித்ததாகவும் அவர்களது பெயர்களை யும் அவை பதிவு செய்யப்பட்டுள்ள நூல்களையும் உங்களின் மேலான கவனத்திற்கு முன்னல் தந்துள்ளோமல்லவா. அப்படி யாஞல் அவர்களும் தவறிழைத்து விட்டனர் என்றுதானே சொல்ல வேண்டும்? யாருக்குமே தெரியாத ஒருதவறு இந்த ஹாதிக்கு மட்டும் எப்படித் தெரிந்தது என்பதுதான் ஆச்சரியம்.

பின்னும் உபைதுல்லாஹ்வைக்கொண்டு சொல்லப்பட்ட தகவல் உண்மை தானென்பது உறுதிப்படுத்தப்படுவதை சகித்துக்கொள்ள முடியாத அப்துல் ஹாதி அதைப் பொய்யாக்க இப்படிப்பட்டதோர் தந்திரத்தைகையாளுவதன் மூலம் எல்லோரையுமே முட்டாளாக்கப் பார்க்கிருர். ஆம். அவரது குற்றச்சாட்டை மறுபடியும் உங்களின் பார்வைக்கு தருகிறோம்.

அ- மூஸா பின் ஹிலால் உபைதுல்லாஹ்வின் காலத்தில் வாழ்ந்த வரல்ல. அவரை சந்தித்தவருமல்ல என்று கூறுகிருர்.

அவ்வாருயின் இமாம் அஹ்மத் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் "அஸ்ஸுஹ்த்" என்னும் தமது நூலின் 279ம் பக்கத்திலும், இமாம் அஸ்பஹானி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் "ஹுல்யத்துல் அவ்லியா" என்னும் தமது நூலின் பாகம்-6, பக்கம்-212லும் ஹிஜ்ரி 147 அல்லது 148ல் இவ்வுலகை விட்டு மறைந்த ஹிஷாம் பின் ஹஸ்ஸான் என்பாரைக் கொண்டு மூஸாவால் சொல்லப்பட்ட தகவல் ஒன்றையும், இமாம் பஸ்வீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் "அல் மஃரிபா வத்தாரீக்" என்னும் தமது நூலிலும், ஹுல்யத்துல் அவ்லியா என்னும் நூலின் பாகம்-6, பக்கம்-213லும் ஹிஜ்ரி 143ல் இவ்வுலகை விட்டு மறைந்துபோன ஹிம்மஸ் பின் ஹஸனுல் பஸரி என்பாரைக் கொண்டு மூஸாவால் சொல்லப்பட்ட தகவல் ஒன்றும் பதிவு செய்யப்பட்டிருப்பதை காண முடிகிறது எனில் இவ்விருவரும் உபைதுல்லாஹ்வுக்கு முன்னரே இறந்துபட்ட வர்களாகும். இதன்றி மூஸா அவர்கள் ஹிஜாஸ் மாகாணத்திற்கும் பயணம் செய்துள்ளனர். பார்க்க: ரஃப்வுல் மினரா, பக்கம்-294.

பார்த்தீர்களா! உபைதுல்லாஹ்வுக்கு முன்னரே இவ்வுலகை விட்டு மறைந்து போனவர்களைக் கொண்டு மூஸாவால் ஹதீதுகள் அறிவிக்கப்பட்டுள்ளதெனில், இதன்றி ஹிஜாஸ் மாகாணத்திற்கும்

அவர் பயணம் செய்துள்ளார் எனில் மூஸா உபைதுல்லாஹ்வின் காலத்தில் வாழ்ந்தவரல்ல என்பதும் அவரை சந்தித்தவருமல்ல என்பதும் அப்துல் ஹாதியால் கடைந்தெடுக்கப்பட்ட வடிகட்டிய பொய் என்பதைத் தவிர வேறென்னவென்று சொல்ல முடியும்? ஆதலால் அப்துல் ஹாதியின் குற்றச்சாட்டை தூக்கிக் குப்பை தொட்டியில் எறிந்துவிட்டு உபைதுல்லாஹ்வை கொண்டு மூஸாவால் சொல்லப்பட்ட தகவலை நம்புங்கள்.

பின்னும் தமக்கு விருப்பமில்லாத ஒன்றை பொய்யாக்க குர்ஆன் ஹதீதை மட்டுமல்ல. வரலாறுகளைக் கூட திரித்து, இருப்பதை இல்லாமலாக்கி இல்லாததை உள்ளதைப் போன்று தோற்றுவித்துக் காட்டுவதில் இந்த வஹ்ஹாபிகள் ஜகஜாலக் கில்லாடிகள் என்பதற்கு இந்த அப்துல் ஹாதி ஒரு எடுத்துக்காட்டாகும்.

இவ்வாறே அப்துல்லாஹ் என்பவர் யார்? உபைதுல்லாஹ் என்பவர் யார் என்பதை மூஸாவால் பிரித்தறிய முடியவில்லை என்றும், இருவரும் வெவ்வேறு காலத்தைச் சேர்ந்தவர்கள் என்பதையும் அவர் புரிந்துகொள்ளவில்லை என்றும் கூறுகிறார் ஜனாப் அப்துல் ஹாதி.

ஒருவர் இருவரல்ல. பதினைந்து நபர்களால் மூஸா பின் ஹிலாலுடைய தகவல்கள் பதிவு செய்யப்பட்ட பின்னரும் அதில் அப்துல் ஹாதியால் இமாமென ஏற்றுக் கொள்ளப்பட்டு அவரது மத்ஹபை பின்பற்றுகின்ற இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரஹிமஹுல்லாஹ்வும் ஒருவராகும். இவ்வாறே யஃகூப் பின் சுப்யான் அல் பஸ்வீ போன்ற பேரறிஞர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒருவரை ஒருசிலர் ஏற்க மறுக்கிறார்கள் எனில் அவர்கள் ஒருவேளை அப்துல் ஹாதியின் வழித்தோன்றல்களாக இருப்பர். இவர்கள் நல்லவர்களல்ல. மாறாக நல்லவர்களின் குற்றங்குறை தான் இவர்களின் பார்வைக்கு படும். அது மட்டுமல்ல. அடுத்தவரின் குற்றங்களை அலசுவது தான் இவர்களின் குலத் தொழிலாகும்.

இதன்றி இப்னு தைமிய்யா, இப்னு அப்துல் ஹாதி போன்ற வழிகேடர்களுக்கு பல நூற்றாண்டுக்கு முன்னர் வாழ்ந்த, இன்றும் பெருமையோடு பேசப்படுகின்ற பெரும் பெரும் அறிஞர் பெருமக்களெல்லாம் அண்ணலெங் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரௌழா ஷரீபை தரிசிப்பதன் சிறப்புகளை சொல்லும்போது மூஸா பின் ஹிலாலின் தகவலையும் எடுத்துக் காட்டுகின்றனர் எனில் அவரது கருத்து குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் ஒப்பத்தான் இருந்துள்ளது என்பதை நாம் விளங்கிக் கொள்கிறோம்.



மேலும் உபைதுல்லாஹ், அப்துல்லாஹ்வாகிய இருவரைக் கொண்டும் சொல்லப்பட்ட தகவல் உண்மைதானென்பதை தெரிந்திருந்த இப்னு தைமிய்யாவும், அப்துல் ஹாதியும் தனது நான் என்னும் மமதையின் காரணமாக பாமர மக்களிடையே புதியதொரு கருத்தை வைப்பதன் மூலம் அவர்களை தாங்கள் கவர்ந்து விடலாமென்று கருதினர். ஆனால் இவர்கள் தான் தோண்டிய குழியில் தானே விழுந்த கதையாக முடிவில் மக்களால் இவர்கள் ஓரங்கட்டப்பட்டனர். அதன்றி இன்றும் முஃமின்களின் சாபத்திற்குரியவர்களாகவே இவர்கள் எண்ணப்படுகின்றனர்.

இன்னும் இமாம் ஷாபியை லஃனத்துச் செய்யும் துணிச்சல் யாருக்காவது உண்டா? இமாம் அபூ ஹனீபாவை லஃனத்துச் செய்ய யாருக்காவது துணிவுண்டா? இவ்வாறே இமாம் மாலிக்கை, இமாம் ஹன்பலை அல்லது ஸியாரத்திற்காக பிரயாணம் செய்யலாம் என்று கூறும் எந்தவொரு பெரியாரையாவது லஃனத்துச் செய்வதற்கு இவ்வையகத்தில் எவருக்கேனும் துணிச்சலுண்டா? சொல்லுங்கள். இன்னும் இம்மகான்களைப் பற்றி ஒரு வார்த்தை மரியாதைக் குறைவாக பேசினாலும் அவரைச் சாபமிடுவதற்கு உலக முஸ்லிம்களனைவரும் தயாராகி விடுவர். பின்னும் இவர்கள் எத்தனை நல்ல விஷயங்களை சொல்லியிருந்தாலும் அவையனைத்தையும் கவனத்தில் கொள்ளாமல் ஒதுக்கி வைத்து விடுவார்கள் எனில், அப்படிப்பட்டோரின் பட்டியலில் இடம் பெற்றுள்ள இப்னு தைமிய்யாவையும், அப்துல் ஹாதியையும், அப்துல் வஹ்ஹாப் நஜ்தியையும் இன்று நமது தேசத்திலுள்ளோரில் சில இயக்கங்களை சார்ந்தவர்கள் பின்பற்றுகின்றனர் எனில் இதெல்லாம் எதற்காக? எல்லாம் அரச பரம்பரையின் பணத்திற்காகத் தானென்பதில் இன்னும் என்ன சந்தேகம் இருக்க முடியும்? சரி. அது போகட்டும். இப்போது அடுத்த குற்றச்சாட்டு என்னவென்பதை பார்ப்போம். இதோ அப்துல் ஹாதி பேசுகிறார். என்னவென்று கேளுங்கள்.

ولو فرض ان الحديث من روايته عبيد الله لم يلزم ان يكون صحيحا فإن تفرد موسى بن هلال به عنه دون سائر أصحابه المشهورين بملازمته وحفظ حديثه وضبطه من ادل الاشياء على انه منكر غير محفوظ واصحاب عبيد الله بن عمر المعروفون بالرواية عنه مثل يحى بن سعيد القطان.

**"இனி உபைதுல்லாஹ் பின் உமரைக் கொண்டு மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்பட்டதை ஒரு பேச்சுக்காக நாம் ஒப்புக் கொண்டாலும் அத்தகவல் ஸஹீஹானது என்பது ஊர்ஜிதப்படுத்தப் பட வில்லை. இவ்வாறே உபைதுல்லாஹ்வைக் கொண்டு அறிவிப் போரில் பலர் இடம் பெறுகின்றனர். அவர்களில் மூஸாவை விட மகத்தான நினைவாற்றல் உடையவர்களும் ராவிகளுக்கான எல்லா பண்புடையோர் பலர் இருந்தும் அவர்களில் ஒருவர் கூட இத் தகவலை சொன்னதில்லை."**

ஆம். உபைதுல்லாஹ்வுடைய நம்பிக்கைக்குரிய தோழர்களில் ஒருவர் கூட உபைதுல்லாஹ்வால் அறிவிக்கப்பட்ட ஹதீதை சொல்லாததாலும் மூஸாவாகிய ஒருவர் மட்டுமே இந்த ஹதீதை அறிவித்துள்ளதாலும் இத்தகவல், அல்லது இத்தகவலை அறிவித் தவர் முன்கர், கைரு மஹ்பூழ் ஆக ஆகிவிடுகிறார். ஆகையால் இத்தகவலை சரிகண்டவர்களும், அல்லது சரிகாண முயன்றவர் களும் தவறிழைத்து விட்டனர் என்பதாக அப்துல் ஹாதி கூறுகிறார்.

உபைதுல்லாஹ்வைக் கொண்டு மூஸா பின் ஹிலாலால் சொல்லப்பட்ட ஹதீதை பொய்ப்பிப்பதற்காகவே தன்னை முழுமை யாக அர்ப்பணம் செய்துவிட்ட இப்னு அப்துல் ஹாதியின் ஒவ்வொரு குற்றச்சாட்டையும் மறுத்து அது தவறான ஒன்றென ஆதாரப்படுத்தப்பட்டாலும் அதை ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாக தமது தந்திரத்தால் மீண்டும் மீண்டும் அதை பொய்யாக் கவே முனைவார் என்பது இவரது வாதத்தைக் கொண்டு நமக்கு புலனாகிறதாகையால் இங்கே இவர் என்ன மாதிரியான குற்றச் சாட்டை சுமத்துகிறார் எனில்.,,,

உபைதுல்லாஹ்வின் நம்பிக்கைக்குரிய தோழர்களில் யாருமே மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்பட்ட தகவலை சொல்லவில்லை யாதலால் இவர் ஒருவர் மட்டுமே இத்தகவலை அறிவிப்பதால் இவர் முன்கர் என்று கூறுகிறார்.

அப்படியானால் ஒரு தகவலை ஒருவர் மட்டுமே அறிவிப்பா ராயின் அந்நிலையில் அவரை "முன்கர்" எனச் சொல்வதற்கு இரு நிபந்தனைகள் இருக்க வேண்டும்.

(1) அவரால் சொல்லப்பட்ட தகவல் ஸஹீஹானது அல்லது ஹஸனானது என்று கூறப்பட முடியாத அளவுக்கு அவர் ழயீபா னவராக இருக்க வேண்டும்.



(2) அவரது தகவலை ஆதாரப்படுத்த எந்தவொரு அத்தாட்சியோ அல்லது அவரது கருத்துக்கு இசைவான ஒரு கருத்தையோ வேறு யாரும் சொல்லியிருக்கக் கூடாது.

இதுபற்றி இக்கலையின் வல்லுனரான இமாம் ஹாபிழ் இப்னு ஹஜர் ரஹிமஹுல்லாஹ்விடமே கேட்டுப் பார்ப்போமே. அவர்கள் என்ன கூறுகிறார்களெனில்,...

إذا إنفرد المستور أوالموصوف بسوء الحفظ أو المضعف فى بعض مشائخه دون بعض بشيئ لا متابع له ولاشاهد فهذا أحد قسمى المنكر.

**"ஒரு தகவலை சொன்னவரது நிலைமைகள் மறைமுகமானதா கவோ அல்லது நல்ல பண்புகளற்றவராகவோ இருந்து அந்நிலை யில் அவரது தகவல் ஏற்கப்படுவதற்குரிய ஆதாரமும் இல்லாமல் போய் அவரது காலத்திய பெரியோர்களது பார்வையிலும் அவர் ழயீபானவராக இருந்தாலும் அவ்வகைகளில் ஒரு வகையைச் சார்ந்தவராகக் கருதப்படுவார்."**

நூல் : அந்நுகத், பாகம்-2, பக்கம்-675.

மேற்கண்ட விளக்கத்தைக் கொண்டு மூஸா பின் ஹிலாலை அப்துல் ஹாதி முன்கர் என்று கூறுவதற்குரிய ஆதாரம் ஏதுமுண்டா சொல் லுங்கள். இன்னும் ஹதீதுக் கலையின் இமாம்களில் ஒருவரும் அப்துல் ஹாதியின் இமாமுமாகிய இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இவரது தகவலை அறிவித்துள்ளனர். இமாம் இப்னு அத்தி இவரைப்பற்றி லா பஃஸ பிஹி என்று கூறுகிறார். இமாம் தஹபி இவரை ஸாலிஹுல் ஹதீத் என்கிறார். இத்தனைக்குப் பிறகும் அப்துல் ஹாதி இவரை முன்கர் என்று சொல் வாராயின் இவர் இஸ்லாத்திற்கு மிகப்பெரும் துரோகமிழைத்து விட்டாரென்று தான் நாம் கூறுவோம்.

ஏனெனில் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களை ஈமான் கொண்ட முஃமின்களாக அப்துல் ஹாதியும் அவரைச் சேர்ந்தவர்களும் இருப்பதால் நபியவர்களுடைய ரௌழா ஷரீபை தரிசிப்பதற்காக பிரயாணம் செய்வதை பாவமான காரியமென்று பேசுகின்றனர். அத்துடன் அதன் சிறப்புகள் பற்றி கூறப்பட்டுள்ள எல்லா ஹதீதுகளையும் (மௌழூஃ) இட்டுக்கட்டப்பட்டவையென் றும் கூறி மூஸா பின் ஹிலாலின் கருத்தை ஆதாரப்படுத்தும்

ஒவ்வொரு தகவலையும் இல்லையென மறுக்கின்றனர்.

இனி ஒரு நபரால் சொல்லப்பட்ட தகவலுக்கு ஒத்தக் கருத்துடைய தகவல் வேறொருவரால் இன்னொரு வழியாக எடுத்துக் காட்டப் படுமாயின் முன்னால் கூறப்பட்ட தகவலை சொன்னவர் ழயீபான வராக இருந்தாலும் அத்தகவல் ஹஸன் என்னும் தகுதிக்குரியதாகி விடும் என்பது ஹதீதுக் கலையை நன்கு அறிந்தோருக்கு தெரியும்.

ஆதலால் மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்பட்ட ஹதீதை அப்துல் ஹாதியின் கருத்துக்கு முன்னுரிமை தந்து அவரை ழயீபா னவர் எனக் கூறினாலும் அவர் ஒருவரைக் கொண்டு மட்டும் அந்த ஹதீத் சொல்லப்பட்டது என்பதற்காக அவரை முன்கர் என்று சொல்ல முடியாது. காரணம் அவரது தகவலை ஏற்றுக் கொள்வதற் கான தகுந்த சாட்சியங்கள் இருப்பதோடு அவரது தகவலையொத்த வேறு தகவல்களும் பதிவாகியுள்ளன. அந்தத் தகவல் என்னவென் பதை இப்போது பாருங்கள்.

عبد الله بن محمد العبادى ثنا مسلم بن سالم الجهنى حدثنى عبيد الله بن عمر عن نافع عن سالم عن إبن عمر قال: قال رسول الله صلى الله عليه وآله وسلم من جائنى زائرا لايعمل له حاجة إلا زيارتى كان حقا عليّ أن أكون له شفيعا يوم القيامة.

***"யார் என்னை தரிசிப்பதற்காக என்னிடம் வருகிறாரோ அவருக் காக மறுமைநாளன்று ஷபாஅத்துச் செய்வது என்மீது கடமையாகி விட்டது என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லமவர்கள் கூறுகின்றனர்."***

இது தப்ரானி அல்கபீர், பாகம்-12, பக்கம்-291ல் பதிவாகியுள் ளது. இன்னும் இதை இமாம் கலயீ, இப்னு ஸாயித், இப்னுல் மகர்ரி போன்ற அனைவரும் ஒரேவிதமாகக் கிடைக்கப் பெற்றதாகக் கூறுகின்றனர். இமாம் ஹைத்தமி அவர்களும் மஜ்மவுஸ் ஸவாயித் என்னும் தமது நூலின் பாகம்-4, பக்கம்-2ல் குறிப்பிட்டுள்ளதோடு இந்த ஹதீதை அறிவித்தவர்களில் மஸ்லமா பின் ஸாலிம் என்பவர் ழயீபானவராகும் என்றும் கூறுகின்றனர்.

எனவே மேற்கண்ட ஹதீதை ஏதாவது சாக்குப்போக்குச் சொல்லி பொய்யாக்க முனைந்தால் அந்த ஹதீதின் அறிவிப்பாளர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் முஹம்மத் அல் உப்பாதி அல் பஸரீ



என்பாரை விட நம்பிக்கைக்குரிய ஒருவரது தகவல் அவரது தகவலுக்கு வலுவூட்டுகிறது என்பதை புரிந்துகொள்ள வேண்டும்.

ஆம். உப்பாதை விட மிகச் சிறப்பான ஒருவர்தான் முஸ்லிம் பின் ஹாத்திமுல் அன்ஸாரி என்பவராகும். இவரை இமாம் திர்மிதி, இமாம் தப்ரானி, இமாம் இப்னு ஹிப்பான் போன்றோர் ஸிகத்தா (ஹதீதுகளை அறிவிப்பதில் உறுதியா)னவர் எனக் கூறுகின்றனர். பார்க்க: அத்தஹ்தீப், பாகம்-10, பக்கம்-113. இனி அவரால் சொல்லப்பட்ட ஹதீத் இதுதான். அதாவது,...

قال رسول الله صلى الله عليه وآله وسلم من جائنى زائرا لم تنزعه حاجة إلا زيارتى كان حقا عليّ أن أكون له شفيعا يوم القيامة.

***"வேறு காரணங்கள் ஏதுமின்றி என்னை தரிசிப்பதற்காகவே என்னிடம் வருவோருக்கு நாளை மறுமையில் எனது ஷபாஅத் நிச்சயமாகி விட்டதென்பதாக வள்ளல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினர்."***

எனவே மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியைக் கொண்டு அறிவிக்கப்பட்ட இந்த ஹதீத் அப்துல்லாஹ் பின் முஹம்மத் அல் உப்பாதியின் அறிவிப்பை விட முஸ்லிம் பின் ஹாத்திமுல் அன்ஸாரியின் அறிவிப்பே மிகவும் நம்பிக்கைக்குரிய ஒன்றாகும்.

மேலும் இமாம் அபூதாவூத் அவர்கள் இந்த ஹதீதை அறிவித்தவர் களில் முஸ்லிம் பின் ஸாலிமுல் ஜுஹனியை (லைஸ பிதிக்கா) உறுதி யானவரல்ல எனக் கூறியதை ஒரு காரணமாக வைத்து இந்த ஹதீதை பொய்யாக்க முடியுமாயின் இப்னு ஸக்கனால் ஸஹீஹ் எனக் கூறப்பட்ட கருத்தை வைத்து ஏன் ஆதாரமாக்க முடியாது? இன்னும் இமாம் அபூதாவூத் அவர்களால் நம்பிக்கைக்குரியவரல்ல எனக் கூறப்பட்ட ஒருவரை இமாம் இப்னு ஸக்கன் அவர்கள் ஸஹீஹானவர் என்று சொன்னால் இந்த இடத்தில் இப்னு ஸக்கனின் கருத்துக்கே முன்னுரிமை கொடுக்கப்பட்டாக வேண்டும் என்பது உங்களுக்குத் தெரியாதா? என நமது பெரியோர்கள் கேட்கவே, கொதித்துப்போன அப்துல் ஹாதி பேசுவதைப் பாருங்கள்.

ليس فيه ذكر زيارة القبر ولا ذكر الزيارة بعد الموت مع انه حديث ضعيف الإسناد منكر المتن لايصلح الاحتجاج به ولا

يجوز الاعتماد مثله ولم يخرجه أحد من أصحاب الكتب الستة ولا رواه الامام أحمد فى مسنده ولا أحد من الأئمة المعتمد. الخ.

''மேற்கண்ட ஹதீதில் கப்ரு ஸியாரத்துச் சம்பந்தமாகவோ அல்லது இறப்புக்குப் பின்னர் ஸியாரத்துச் செய்வது பற்றியோ சொல்லப்படவில்லை. அத்துடன் இந்த ஹதீதை அறிவித்தோரின் (இஸ்னத்) அறிவிப்பாளரின் வரிசைத் தொடரும் ழயீபாகும். மேலும் இந்த ஹதீதில் பேசப்படுகின்ற (முன்கருல் மத்ன்) ஹதீதின் மூலக்கருத்தும் நிராகரிக்கப்பட வேண்டிய ஒன்றுமாகும். அது மட்டுமல்ல. இந்த ஹதீதை (நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடையறௌழா ஷரீபை தரிசிப்பதற்காக வேண்டி பிரயாணம் செய்வதற்குரிய) ஆதாரமாகவும் எடுக்க முடியாது. அத்துடன் இதுபோன்ற ஹதீதுகளை நம்பவும் கூடாது. பின்னும் இந்த ஹதீத் ஆறு ஸஹீஹான (புகாரி, முஸ்லிம், நஸாயி, திர்மிதி, இப்னுமாஜா, அபூதாவூத் போன்ற) கிரந்தங்களிலும் பதிவாக வில்லை. இன்னும் இது இமாம் அஹ்மத் அவர்களால் அறிவிக்கப் பட்டதுமல்ல. அத்துடன் இந்த ஹதீதை நம்பிக்கைக்குரிய பெரியோர்களில் யாருமே ஸஹீஹ் என்றும் சொல்லவில்லை.

இன்னும் இந்த ஹதீதை அறிவித்த மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனி என்பவர் பிரபலமானவருமல்ல. அடுத்து இவர் எத்தகை யவர் என்பதற்கோ இவரது தகவல்கள் ஏற்கத்தக்க ஒன்றென்ப தற்கோ நம்பிக்கைக்குரிய எந்தத் தகவலும் இல்லை. அதற்கு மாறாக (தலைகுத்தி ரத்தம் எடுத்தல், பைத்தியம், வெண்குஷ்டம், கருங்குஷ்டம், தடுமல், பல்வலி போன்ற நோய்களுக்கு இது நிவாரணமாகும்) என்னும் இன்னொரு பொய்யான தகவல்தான் இவரது வாயிலாக தப்ரானியில் பதிவாகியுள்ளது என்கிறார் அப்துல் ஹாதி.

அன்பான இஸ்லாமிய சகோதரர்களே!

இந்த வஹ்ஹாபிகள் சமுதாயத்தின் பொய் தஜ்ஜால்கள். இக்கொடுங்கோலர்கள் அன்றுமுதல் இன்றுவரை இடத்திற்குத் தக்கவாறு தமது நிறத்தை மாற்றிக் கொள்வதில் கில்லாடிகள். தங்களின் கொள்கைக்கு மாறான ஒரு கருத்து உறுதிப்படுத்தப் படுவதை இவர்கள் உணர்வார்களாயின் சரேலென அதை திசை



திருப்ப வேறொரு குற்றச்சாட்டை கொண்டு வருவர். காலமெல் லாம் இவர்கள் இழிவுபடுத்தப்பட வேண்டுமென்பதற்காகவே வல்லோனாகிய அல்லாஹ் இவர்களது சொல்லையும் செயலையும் நிலையில்லாதவாறு செய்திருக்கிறான்.

அருள் கூர்ந்து அப்துல் ஹாதியால் எடுத்துக் காட்டப்படும் குற்றச்சாட்டுக்களை திரும்பத் திரும்ப உங்களின் பார்வைக்குக் கொண்டுவந்து அதை ஆய்வு செய்யுங்கள். அவர் என்ன சொல்கிறார்?

(1) என்னை மட்டுமே தரிசிப்பதற்காக என்னிடம் வருவோரை அல்லாஹ்வின் திருப்பொருத்தத்திற்குரிய அடியாராக ஆக்குவது என்மீது கடமை என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களால் சொல்லப்படும் ஹதீதை நபியவர்களுடைய றௌழாவை தரிசிப்பதற்கு பிரயாணம் செய்யலாமென்பதற்கு ஆதாரமாக்கி நாம் சொன்னால்,...

அதற்கு அப்துல் ஹாதி ஹயாத் மௌத் என்று இஸ்லாத்திற்கு ஒரு புதிய இலக்கணத்தை வகுத்துக் காட்டி மேற்கண்ட ஹதீதுக்கும் கப்ரு ஸியாரத்துக்கும் சம்பந்தமில்லை என்றும், இந்த ஹதீதில் மரணத்திற்குப் பின் தரிசித்தல் பற்றி எதுவும் சொல்லப்படவில்லை என்றும் கூறுகிறார். அவ்வாறாயின் இந்த ஹதீதில் நாயகம் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லமவர்களின் றௌழா ஷரீபை தரிசிப்ப தற்காக பயணம் செய்வதுபற்றி எதுவுமே சொல்லப்படவில்லை என்பது சரிதானா?

(2) அடுத்து **''இந்த ஹதீதின் இஸ்னத் ழயீபாகும்''** என்கிறார். அதாவது, இந்த ஹதீதை அறிவிக்கும் மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனி என்பவர் ழயீபானவராகும் என்பதுதான் இதன் பொரு ளாகும். ஆனால் அதேநேரம் சொல்லப்பட்ட தகவல் ஹதீத் தான் என்பதை ஒப்புக் கொள்கிறார். அப்படித்தானே! அது சரி. ழயீபான ஹதீது என்றால் என்ன என்பதை அப்துல் ஹாதியின் வாரிசுகளிடம் கேட்டுச் சொல்லுங்கள்.

மேலும் இப்னு ஹஸ்ம் அவர்களால் ஹதீதுக்குரிய கிரந்தங்கள் முறைப்படுத்தப்பட்ட போது புகாரி, முஸ்லிம் ஆகிய இருநூல்களுக்கும் அடுத்தபடியாக அமைக்கப்பட்ட நூல் ஸஹீஹ் இப்னுஸ் ஸகனாகும். நூல் : தத்கிரத்துல் ஹுஃப்ஃபாழ், 3-1153.

இப்படிப்பட்ட உயர்வான அந்தஸ்த்தைக் கொண்ட ஹாபிழ் அபூ அலிய்யிப்னி ஸகன் ரஹிமஹுல்லாஹ் அவர்களே இந்த

ஹதீதை அறிவிக்கும் அறிவிப்பாளரை ஸஹீஹானவரென கூறுகின்றார்கள் எனில் இந்நிலையில் இந்த ஹதீத் மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்படும் ஹதீதின் கருத்துக்கு இசைவான கருத்தைக் கொண்டதாக இல்லையா? பின்னும் இந்த ஹதீதை ழயீபென்றும், இவ்வாறே மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்படும் ஹதீதைப் போல வேறுயாரும் அறிவிக்கவில்லையென்றும் இப்னு அப்துல் ஹாதி எப்படிச் சொல்கிறார்? இதுதான் இவர் இஸ்லாத்திற்கு செய்த சேவையா? அடுத்து.,,,

*"ஹதீதின் மூலக்கருத்து நிராகரிப்புக்கு உரியதாகும்"* என்கிறார்.

அதாவது என்னை தரிசிப்பதற்காக என்னிடம் வருவோருக்கு எனது ஷபாஅத் கடமையாகி விட்டதென்று நபியவர்களால் சொல்லப்படும் செய்தி பொய்யானதென்று கூறுகிறார். இவரின் இக்கருத்து சரியானதா? அல்லது தவறானதா என்பதை நாம் ஆய்வு செய்யுமுன்,.

## ஹதீத் முன்கர் என்றால் என்ன?

هو الحديث الذى ينفرد بروايته الراوى الضعيف اوما يخالف به من هو أقوى منه.

**"ஒரு ழயீபானவரைக் கொண்டு மட்டும் ஒரு செய்தி அறிவிக்கப்படுமாயின், அல்லது அவரால் அறிவிக்கப்பட்ட செய்தி அவரை விட நம்பிக்கைக்குரிய ஒருவரால் அவருடைய செய்திக்கு நேர் மாறான ஒன்றாக இருக்குமாயின் அதை முன்கருல் ஹதீத் எனக் கூறப்படும்."** உதாரணமாக,...

இதனை இமாம் அஹ்மத் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் முஸ்னத் அஹ்மதிலும், இமாம் புகாரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தாரீக்குல் கபீரிலும், ஸுனன் நஸாயியிலும், இப்னு மாஜாவிலும், முஸ்னத் பஸ்ஸாரிலும், இப்னு ஷாஹீன் அவர்கள் ஃபழாயிலி ஸஹ்ரி ரமழான் என்பதிலும் பதிவு செய்துள்ளனர். அதாவது,...

النضر بن شيبان قال: قلت لأبى سلمة: حدثنى بشيئ سمعته من أبيك يحدث به عن رسول الله صلى الله عليه وآله وسلم قال: حدثنى أبى فى شهر رمضان قال: قال رسول الله صلى الله عليه وآله وسلم ان الله عز وجل فرض عليكم صيام شهر رمضان وسننت



لكم قيامه فمن صامه وقامه إيمانا واحتسابا خرج من الذنوب كيوم ولدته أمه.

**"வல்லோனாகிய அல்லாஹ் ரமழான் மாத நோன்பை கடமையாக்கியுள்ளான். இன்னும் நான் ரமழானின் இரவுகளில் வணங்குவதை சுன்னத்தாக்கியுள்ளேன். எனவே யார் ரமழான் மாதத்தில் நோன்பு நோற்று இரவில் வணங்குகின்றாரோ அவர் அன்று பிறந்த பாலகனைப் போல பாவங்கள் மன்னிக்கப்பட்டு பரிசுத்தமடைகிறார் என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்."**

இந்த ஹதீத் நழ்ர் பின் ஷைபான் என்பாருக்கு அபூ சலமா என்பவரது தந்தை சொன்னதாக அபூசலமாவால் அறிவிக்கப்பட்ட ஹதீதாகும். இந்த ஹதீத் இரு காரணங்களால் முன்கராகும்.

இந்த ஹதீதை அறிவித்த நழ்ர் பின் ஷைபான் ழயீபானவராகும். இவர் மட்டும் தான் அபூசலமாவின் தந்தை சொன்னதாக அபூசலமாவைக் கொண்டு சொல்கிறார். இது முதல் காரணமாகும்.

அடுத்து யஹ்யா பின் சயீத், ஸுஹ்ரீ, யஹ்யா பின் கதீர் போன்றோர் நழ்ர் பின் ஷைபானை விட நம்பிக்கைக்குரியவர்களாதலால் அவர்களது அறிவிப்பில் காணப்படும் ஹதீதில்,...

من قام شهر رمضان إيمانا وإحتسابا غفر له ما تقدم من ذنبه ومن قام ليلة القدر إيمانا وإحتسابا غفر له ما تقدم من ذنبه.

**"ஈமான் கொண்டவராயும், நன்மைகளை எதிர்பார்த்தவராயும் ரமழான் மாதத்தில் நின்று வணங்குவோரும், லைலத்துல் கத்ருடைய இரவில் வணங்குவோரதும் கடந்தகாலப் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன"** என்பதாக ஹழ்ரத் அபூஹுறைரா ரழியல்லாஹு அன்ஹு அவர்களால் அறிவிக்கப்படும் ஹதீத் அபூ சலமாவால் அறிவிக்கப்படும் ஹதீதுக்கு மாற்றமாக இருப்பதால் நழ்ர் பின் ஷைபாவால் அறிவிக்கப்பட்ட ஹதீதை முன்கருல் ஹதீத் என்று சொல்லப்படும். இது இரண்டாவது காரணமாகும்.

ஆனால் அதேநேரம் முதலில் சொல்லப்பட்ட ஹதீதை அறிவித்தோரில் ழயீபானவர்களிருந்தும் அவர்களால் அறிவிக்கப்பட்ட ஹதீத் அவர்களைவிட நம்பிக்கைக்குரியவர்களால் அறிவிக்கப்

பட்ட ஹதீதுக்கு நேர்மாறாக இருந்ததால் அதை முன்கருல் ஹதீத் என வகைப்படுத்தியவர்கள் அதை ஆதாரமாகக் கொள்ள முடியாதென்று சொல்லவில்லை. இன்னும் இந்த ஹதீத் ஸிஹாஹ் ஸித்தா எனப்படும் கிரந்தங்களில் ஒன்றான நஸாயியிலும் பதிவாகியுள்ளது. இப்னு மாஜாவிலும் பதிவாகியுள்ளது. இமாம் அஹ்மதும் இதை பதிவு செய்துள்ளனர். இந்நிலையில் முன்கருல் ஹதீத் என இப்னு அப்துல் ஹாதியால் எடுத்துக் காட்டப்படும் ஸியாரத்து தொடர்பான ஹதீதை கொண்டு அமல் செய்ய முடியுமா? முடியாதா? சொல்லுங்கள்.

இந்த ஹதீத் ஜாமிவுத் திர்மிதீ எண்338ல் பதிவு செய்யப்பட்டுள்ளது. அதாவது,...

حماد بن عيسى الجهنى عن حنظلة بن ابى سفيان الجحمى عن سالم بن عبدالله عن أبيه عن عمر بن الخطاب رضى الله عنه قال: كان رسول الله صلى الله عليه وآله وسلم اذا رفع يديه فى الدعاء لم يحطهما حتى يمسح بهما وجهه.

***"ரஸூலே அக்ரம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிரார்த்தனைக்காக தமது இரு கரங்களையும் உயர்த்துவார்களாயின் அவ்விரு கரத்தையும் தங்களின் முபாரக்கான திருவதனத்தின் மீது தடவிக் கொள்ளாமல் கீழே போட மாட்டார்கள் என்பதாக ஸெய்யிதுனா உமர் ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர்."***

இந்த ஹதீதைப் பற்றி இமாம் திர்மிதீ அவர்கள்,...

هذا حديث غريب لانعرفه إلا من حديث حماد بن سلمة وقد تفرد به.

***"இந்த ஹதீத் ஹம்மாத் பின் ஈஸா என்பவரால் மட்டுமே அறிவிக்கப்பட்டுள்ளதாகையால் இது கரீபான ஹதீதாகும் எனக் குறிப்பிடுகின்றனர்."***

இந்த ஹதீத் ஹம்மாத் பின் ஈஸா அல் ஜுஹனி என்பவரைக் கொண்டு மட்டுமே அறிவிக்கப்படுவதால் இந்த ஹதீத் முன்கருல் ஹதீத் பற்றி சொல்லப்பட்ட நியதிகளுக்கு உட்படுகின்றது. காரணம் ஹம்மாதைப் பற்றி அபூ ஹாத்திம் அவரை ழயீபானவர் என்றும், அபூதாவூத் அவர்கள் (ழயீபுன் றவா அஹாதீத மனாகிர) நிராகரிப்புக் குரிய ஹதீதுகளை அறிவிக்கும் பலவீனமானர் என்றும், ஹாக்கிம்,



நக்காஷ் போன்றோர் (யர்வீ அன் இப்னி ஜுரைஜின் வ ஜஃபரிஸ் ஸாதிகி அஹாதீத மௌழூஅத்தின்) இப்னு ஜுரைஜ், ஜஃபர் ஸாதிக் போன்றோர் சொன்னதாக மௌழூஆன - இட்டுக்கட்டப்பட்ட ஹதீதுகளை அறிவிப்பவர் எனச் சொல்லப்பட்ட பின்னரும் கூட இமாம் திர்மிதீ அவர்கள் அந்த ஹதீதைத் தமது நூலில் பதிவு செய்தது மட்டுமல்லாமல் அதனை கரீபான ஹதீத் என்றும் கூறியுள்ளார்கள்.

ஆனால் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபை தரிசிக்கும் சிறப்புக்களை எடுத்துக்காட்டும் ஹதீதுகளைச் சொன்னவர்களான மூஸா பின் ஹிலால், மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனி போன்றோரை மௌழூஆன ஹதீதுகளை அறிவிப்போர் என எந்தவொரு பெரியாரும் சொல்லவில்லை. இந்நிலையில் இதைக் கொண்டு அமல் செய்ய முடியாதென்று எப்படிச் சொன்னார் அப்துல் ஹாதி?

எனவே இதுவரை சொல்லிவந்த விளக்கத்தைக் கொண்டு முன்கரான ஹதீதென்று எதற்குச் சொல்லப்படும் என்பதை நீங்கள் விளங்கிக் கொண்டிருப்பீர்களென்று நினைக்கிறோம். அதாவது,...

அ - ஹதீதுகளை அறிவிப்போருக்கென பிரத்யேகமான பண்புகள் உள்ளன. அப்பண்புகளில் உயர்ந்த, சாதாரண, நடுத்தர தன்மைகளை இழந்த ஒருவரால் ஒருஹதீத் அறிவிக்கப்படுமாயின் அதனை முன்கர் என்று சொல்லப்படும். அதேநேரம் அவரிடம் இருக்க வேண்டிய முக்கியமான பண்புகள் இழக்கப்பட்டுப் போய் அறிஞர்களின் கடுமையான விமர்சனத்திற்கும் அவர் உள்ளாக்கப்படுவாராயின் அந்நிலையில் அவரால் அறிவிக்கப்பட்ட மௌழூஆன ஹதீதுக்கும் முன்கர் என்று சொல்லப்படுவதுண்டு.

ஆ - அறிஞர்களில் சிலர் முன்கரான ஹதீதை கரீப் என்னும் பதத்தைக் கொண்டும் பேசுவதுண்டு.

இ - ஒரு ஹதீதை முன்கரான ஹதீதெனத் தீர்ப்பளிப்பதற்கு இஸ்னாத் என்னும் அறிவிப்பாளரின் வரிசைத்தொடர் மட்டும் காரணமாகாது. ஹதீதின் மூலக்கருத்தும் அதற்குக் காரணமாக அமைவதுண்டு. அதாவது, நம்பிக்கைக்குரிய பல அறிவிப்பாளர்களால் சொல்லப்பட்ட தகவல் ஒரு விதமாவும், ழயீபான அறிவிப்பாளரால் சொல்லப்பட்ட தகவல் வேறொரு விதமாகவும் அமைந்திருப்பதாம். இதற்கு நழ்ர் பின் ஷைபானுடைய தகவலை உதாரணமாகக் காட்டியிருந்தோம்.

அல்லது நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளரால் சொல்லப்பட்ட தகவலை சிறு வித்தியாசத்தைக் கொண்டு ழயீபான அறிவிப்பாளரைக் கொண்டு முன்வைக்கப்படுவதாகும். இதற்கு உதாரணமாகிறது,...

முஸ்னத் அஹ்மத், பாகம்-3, பக்கம்-99,101, 282லும் புகாரி, பாகம்-1, பக்கம்-40லும், முஸ்லிம், பாகம்-1, பக்கம்-283லும், அபூதாவூத், பாகம்-4, பக்கம்-5லும், திர்மிதீ, பாகம்-5, பக்கம்-6லும், நஸாயி, அல்யௌமி வல் லைலத்தி, பக்கம்-74லும் குறிப்பிடப்பட்டுள்ள ஒருஹதீதானது,...

عن عبد العزيز بن صهيب عن أنس بن مالك رضى الله عنه قال: كان النبي صلى الله عليه وآله وسلم اذا دخل الخلاء قال: اللهم اني اعوذبك من الخبث والخبائث.

*"அல்லாஹும்ம இன்னி அவூதுபிக மினல் குபுதி வல் கபாயிதி எனக் கழிப்பிடத்திற்குள் நுழையும்போது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஓதிக் கொள்வார்கள்."*

ஆனால் முஸ்னத் இப்னி அபீஷைபாவில் பாகம்-1, பக்கம்-11ல்,

عن ابى معشر نجيح بن عبد الرحمن السندى عن عبد الله بن ابى طلحة عن انس رضى الله عنه: أن النبي صلى الله عليه وآله وسلم كان إذا دخل الكنيف قال: بسم الله اللهم إني أعوذبك من الخبث والخبائث.

*இந்த ஹதீதை அறிவித்தவர்களில் அபூ மஃஷர் என்பவர் ழயீபானவராக இருப்பதோடு, முன்னால் அறிவிக்கப்பட்ட அறிவிப்பாளர்களால் சொல்லப்பட்ட தகவலில் (பிஸ்மில்லாஹ்) என்னும் வாக்கியமே மேலதிகமாகுமாகையால் இதுவும் முன்கரான ஹதீதேயாகும்.* இந்நிலையில் முன்கரென்று சொல்லப்பட்ட பின்பும் இந்த ஹதீதைக் கொண்டு அமல்செய்ய முடியாதா? முடியும் எனில் மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியின் தகவலை அப்துல் ஹாதியின் தீர்ப்பான முன்கருல் மதன் என்பதாக ஏற்றுக் கொண்டாலும் அதை மட்டும் ஏன் அமல் செய்ய முடியாது?

ஈ- ஒரு ஹதீதை அறிவிப்பவர் நம்பிக்கைக்குரிய ஸஹீஹான



வராக இருப்பார். ஆனால் யாரிடமிருந்து அவர் அத்தகவலை பெற்றுக் கொண்டுள்ளாரோ அவர்களில் ஒருவர் ழயீபானவராகவும், அத்துடன் அவரைக்கொண்டு மட்டுமே அறிவிக்கப்பட்டிருக்குமாயின் அதையும் முன்கர் என்றே சொல்லப்படும். இதற்கு கதாதா சொன்னதாக மஃமர் பின் ராஷிதுடைய அறிவிப்பில் காணப்படும் ஹதீதை உதாரணமாக சொல்லலாம்.

உ- ஸதூக் என்னும் தரத்தைக் கொண்ட அறிவிப்பாளரால் அறிவிக்கப்படும் ஹதீதே ஹஸனும் இருவகை சந்தர்ப்பங்களின் போது முன்கரென்று கணக்கிடப்படும்.

(1) ஒருவரால் அறிவிக்கப்பட்ட தகவலின் மூலக்கருத்து நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளர்களால் சொல்லப்பட்ட தகவலின் மூலக் கருத்துக்கு மாற்றமாக இருப்பதோடு அவரையன்றி வேறுயாரும் அத்தகவலை சொல்லாதிருத்தல்.

உதாரணமாக இமாம் அஹ்மத், பாகம்-2, பக்கம்-423,510லும், அபூதாவூத், எண்-2350லும் பதிவு செய்யப்பட்டுள்ள ஹதீதானது,...

حماد بن سلمة عن محمد بن عمرو بن علقمة عن ابى سلمة عن ابى هريرة رضى الله عنه عن النبى صلى الله عليه وآله وسلم قال:إذا سمع أحدكم النداء والاناء على يده فلا يضعه حتى يقضى حاجة منه.

*"உணவுப் பாத்திரம் கையிலிருக்கும் போது பாங்கின் ஒலியைக் கேட்டால் உங்களின் தேவையை பூர்த்தி செய்யாமல் பாத்திரத்தை கீழே வைக்க வேண்டாம் என்று சொன்னார்கள் செம்மல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்."*

இந்த ஹதீத் முஹம்மத் பின் அமர் பின் அல்கமாவால் சொல்லப்பட்டதாகும். இவர் ஸதூக் - உண்மையாளராகும். அத்துடன் இவரது ஹதீத் ஹஸன் என்னும் தரத்தைச் சார்ந்ததாகும். இவ்வாறே,...

عن عائشة رضى الله عنها قالت: كلوا واشربوا حتى يؤذن ابن أم مكتوم فانه لايؤذن حتى يطلع الفجر.

*"இப்னு உம்மி மக்தூம் அவர்கள் பாங்கு சொல்லும்வரை உண்ணுங்கள். அருந்துங்கள். நிச்சயமாக அவர் பஜ்ர் உதயமா*

**காமல் பாங்கு சொல்ல மாட்டார்."** என்பதாக புகாரி மற்றும் முஸ்லிமில் பதிவாகியுள்ள அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹாவின் மர்பூஆன தகவலுக்கு மாற்றமாகுமாதலால் இதனை முன்கரான ஹதீதென்று சொல்லப்படும்.

ஆக இவையனைத்தும் முன்கரான ஹதீத் என்றால் என்ன என்பதற்குத் தரப்பட்ட ஒரு சிறு விளக்கமாகும். இன்னும் இவையனைத்தும் முதல்தர வகுப்பினர்களுக்குரிய விளக்கமுமாகும். எனவே ஸியாரத்தைக் குறித்த ஹதீதோடு மேற்கண்ட விளக்கத்தை ஒப்பிட்டு பார்ப்பீர்களேயாயின் இப்னு அப்துல் ஹாதியின் முகத்தை மூடியுள்ள திரைகிழிந்து உண்மை தோற்றம் தெரியவரும் இன்ஷா அல்லாஹ். மேலும் இப்னு அப்துல் ஹாதியைத் தொடர்ந்து அவர் சொன்னதை போன்று மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியால் சொல்லப்பட்ட தகவலின் மூலக்கருத்து பிழை என்றால், மறுக்கத் தக்க பொய்யானது என்றால் அதற்குரிய காரணம் என்னவென்பதை இவர்கள் விளக்க வேண்டும். அடுத்து அப்துல் ஹாதியின் நான்காவது குற்றச்சாட்டை குறித்த விளக்கத்தை இப்போது பார்ப்போம்.

ولم يخرجه أحد من أصحاب الكتب الستة ولا رواه الامام احمد فى مسنده.

**"மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியால் சொல்லப்பட்ட தகவலை ஸிஹாஹ் ஸித்தா என்னும் ஸஹீஹான ஆறு கிரந்தங்களில் எதிலுமே பதிவு செய்யப்படவில்லையென்றும், இமாம் அஹ்மத் அவர்கள் கூட தமது முஸ்னதில் இந்த ஹதீதை பதிவு செய்யவில்லையாதலால் இதை ஏற்க முடியாது"** என்பது தான் அப்துல் ஹாதியின் குற்றச்சாட்டாகும்.

இனி ஒரு ஹதீத் ஸஹீஹான ஆறு கிரந்தங்களில் பதிவு செய்யப்பட்டிருக்க வேண்டுமென்பதோ அல்லது முஸ்னத் அஹ்மதில் பதிவாகி இருக்க வேண்டுமென்பதோ ஒரு நிபந்தனையே அல்ல. மாறாக சொல்லப்படும் தகவலை அறிவித்தவர்களுடைய இஸ்னாத் சரியாக இருக்குமாயின் அது எந்தவொரு நூலில் பதிவு செய்யப்பட்டிருந்தாலும் அதை ஏற்றுக்கொள்வதில் எவ்வித ஆட்சேபனையும் இல்லை. ஆதலால் அப்துல் ஹாதியின் இக்குற்றச்சாட்டு அர்த்தமற்ற ஒன்றாகும்.

அதேநேரம் மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியின் தகவலை



இமாம் அஹ்மத் கூட தமது நூலில் பதிவு செய்யவில்லை என்பதை ஒரு குற்றச்சாட்டாக வைக்கும் இவர், மூஸா பின் ஹிலாலின் (ஏனைய) தகவல்களை எல்லாம் இமாம் அஹ்மத் அவர்கள் பதிவு செய்துள்ளார்களாகையால் அவர் மஜ்ஹூலானவர் அல்ல என்பதாக நாம் சொன்னபோது, அதற்கவர்; இமாம் அஹ்மத் அவர்கள் நம்பிக்கையற்ற பல பேருடைய தகவலை எல்லாம் அறிவித்துள்ளார்கள் என்று சொன்னதை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்களென்று நினைக்கிறோம்.

மேலும் மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியின் தகவல் ஸிஹாஹ் ஸித்தா மற்றும் முஸ்னத் அஹ்மத் போன்றவைகளில் பதிவு செய்யப்பட வில்லையென்ற போதிலும் முஃஜிமுல் கபீர், முஃஜிமுல் அவ்ஸத் போன்ற நூல்களில் பதிவு செய்யப்பட்டிருப்பது போதாதா? அத்துடன் இந்த வம்பர்கள் ராவிகளைப் பற்றிய குறைகளையே திரும்பத் திரும்ப சொல்வதால் இவர்கள் அவர்களை உண்மையாக்கி வைத்தோரைப் பற்றி ஏன் ஒரு வார்த்தைகூட சொல்லவில்லை?

இவ்வாறே மஸ்லமாவை இமாம் அபூதாவூத் அவர்கள் உறுதியா (ஸிகத்தா) னவரல்ல என்பதை அழுத்தமாகச் சொல்லும் இவர்கள் அதே நபரை இப்னுஸ் ஸகன் போன்றோர் ஸஹீஹானவர் என்று சொன்னதை ஏன் மறைக்கின்றனர்? இமாம் அபூதாவூத் அவர்கள் அவரை ஸிகத்தானவரல்ல என்று சொன்னது உண்மைதான். ஆயினும் இவ்வார்த்தை ஜர்ஹ் தஃதீலுடைய விஷயத்தில் எப்படிப்பட்ட தரத்தைக் கொண்டதென்பதை ஏன் இவர்கள் விளக்கவில்லை?

இன்னும் மஸ்லமா பின் ஸாலிமுல் ஜுஹனியால் சொல்லப்பட்ட தகவல் ஸிஹாஹ் ஸித்தாவின் எந்தவொரு நூலிலும் பதிவு செய்யப்படவில்லையென ஆதங்கப்பட்டுக் கொள்ளும் இவருக்கு ஹாபிழுல் கபீரென போற்றப்படும் ஹாபிழ் அபூதாவூத் ரஹிமஹுல்லாஹ் அவர்களால் அறிவிக்கப்பட்ட நபிமொழி ஒன்றை இங்கே உங்களின் பார்வைக்கு தருகிறோம். அதாவது,...

فقال رسول الله صلى الله عليه وآله وسلم المدينة بها قبرى وبهابيتى وتربتى وحق على كل مسلم زيارتها.

**"மதீனா முனவ்வராவில் தான் எனது ரௌழாவும், அங்கேதான் எனது இருப்பிடமுமாகும். எனவே அவற்றை தரிசிப்பதற்கு**

அனைவருக்கும் உரிமையுண்டு என்பதாக ஏந்தல் நபி ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்.'' அல் மகாலாத் துஸ் ஸுன்னிய்யா, பக்கம்-150.

இத்தகவல் மஸ்லமாவால் சொல்லப்பட்ட தகவலை ஊர்ஜிதப் படுத்தவில்லையா? ஆம் எனில் அப்துல் ஹாதியின் தம்பதிகள் இதனை ஏற்றுக் கொள்வார்களா? இல்லையில்லை. இதற்கும் பல்வேறு காரணங்களை சொல்லி சப்பைக்கட்டு கட்டுவார்கள். இது தான் அவர்களின் இயல்பு.

وقد تفرد به هذا الشيخ.

"**என்னை மட்டும் ஸியாரத்து செய்வதற்காக என்னிடம் வருவோருக்கு ஷபாஅத்துச் செய்வது என்மீது கடமையாகும் என்னும் வாக்கியம் ஜுஹனியால் மட்டுமே சொல்லப்பட்டதாகும்**'' என்று அப்துல் ஹாதி கூறுகிறார். இது அவரால் வைக்கப்படும் ஐந்தாவது குற்றச்சாட்டாகும்.

இதுவும் தவறான விதண்டாவாதத்திற்குரிய சிறுபிள்ளைத்தனமான ஒரு குற்றச்சாட்டு என்றுதான் சொல்லுவோம். ஏனெனில் மஸ்லமாவால் அறிவிக்கப்படும் அத்தகவல் அவர் ஒருவரால் மட்டுமே அறிவிக்கப்பட்டாலும் அது மூஸா பின் ஹிலாலுடைய தகவலுக்கு ஒத்ததாக இல்லையா என்ன? அத்துடன் மஸ்லமாவின் தகவலை (ஷைகுன் ஸதூக்குன்) என அப்துல் ஹாதியால் புகழப்பட்ட முஸ்லிம் பின் ஹாத்திமுல் அன்ஸாரியும் அறிவித்திருப்பதால் அதை அப்துல் ஹாதி ஏற்று நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் திருப்பொருத்தத்தை பெற்றுக் கொள்ள முயற்சிக்காமல் மஸ்லமாவை குறை சொல்வதிலேயே கண்ணுங் கருத்துமாக இருக்கிறார். மேலும்,...

الحجامة فى الرأس أمان من الجنون والجذام والبرص والنعاس والضرس.

"**தலைகுத்தி ரத்தம் எடுப்பதானது பைத்தியம், வெண்குஷ்டம், கருங்குஷ்டம், தடுமல், பல்வலி போன்றவைகளுக்கு பாதுகாப்பாகும்.**''

இந்த ஹதீத் தப்ரானியில் மஸ்லமாவின் வாயிலாகவே பதிவாகியுள்ளது. இதையும் அப்துல் ஹாதி மௌழூஃ என்று சொல்கிறார்.



ஆனால் இதே போன்றதொரு கருத்தைக் கொண்டுள்ள மற்றொரு ஹதீத் ஹழ்ரத் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களைக் கொண்டு அல் உகைலி, பாகம்-1, பக்கம்-83லும், இப்னு அத்தி, 6:2074லும் பதிவு செய்யப்பட்டிருப்பது இதற்கு ஆதாரமாக அமைந்துள்ளது. இதை அறிவித்த இஸ்மாயீல் பின் ஷைபா அத்தாயிபி என்பவரை ழயீபானவர் என்று சொன்னாலும் அவரை பொய்யரென்று சொல்லப்படவில்லை. அல்லது கடுமையான ஜர்ஹுடையவரென்றும் சொல்லப்படவில்லை. ஆதலால் இதனை அவர் ஆதாரமாகக் கொண்டிருந்திருப்பாராயின் மஸ்லமாவின் தகவலை ஒருபோதும் மௌழூஃ என்று சொல்லியிருக்க மாட்டார்.

மேலும் ஒரு ஹதீத் ஹதீதுக்குரிய நூல்களில் பதிவு செய்யப்பட்டிருந்தும் அதனை மௌழூஃ எனக்கூறுவதால் ஏற்படும் பின்விளைவுகள் எதையும் கொஞ்சங்கூட பொருட்படுத்தாமல் சொல்வதானது மிகவும் மனவேதனைக்குரிய விஷயமாகும். பின்னும் ரத்தம் குத்தி எடுத்தல் தொடர்பான ஹதீதை மௌழூஃ என்று சொன்ன முதல் ஆசாமியும் இந்த அப்துல் ஹாதிதான் என்பதை வாசிப்போர் தெரிந்துகொள்ள வேண்டும்.

எனவே இதுவரை சொல்லப்பட்ட விஷயங்கள் மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்பட்ட ஹதீத் அவரால் மட்டும் அறிவிக்கப்பட்டதல்ல. மாறாக அதேபோன்ற கருத்தமைந்த ஹதீதுகள் இருவருக்கும் மேற்பட்டவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளன என்பதையும், இவ்வாறே உபைதுல்லாஹ் பின் உமர் அவர்களைக் கொண்டு மூஸா பின் ஹிலால் அவர்களால் சொல்லப்பட்ட ஹதீதை பற்றியும் மிக விரிவாக ஆய்வு செய்தோம். இதன்படி இப்னு அப்துல் ஹாதி என்பவர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரௌழா ஷரீபை தரிசிப்பதற்காக பயணம் செய்தல் குற்றமாகும் என்னும் கொள்கையுடையவராக இருப்பதால் அவர் ஸியாரத்திற்காக பயணம் செய்யலாம் என்பதற்குரிய ஆதாரங்களாக அமைந்த ஹதீதுகள் அனைத்தையும் பொய்யாக்க முனைந்தார். அத்துடன் உபைதுல்லாஹ்வை கொண்டு அறிவிக்கப்படும் ஹதீத் ஆதாரப்படுத்தப்படுமானால் தனது சாயம் வெளுத்துப் போய் விடும் என்பதையும் தெரிந்திருந்த அவர், அது நிரூபிக்கப்பட்டு விடக்கூடாதென்பதற்காகவே மூஸா பின் ஹிலாலையும், மூஸாவின் தகவலுக்குத் தோதான ஹதீதை அறிவித்த மஸ்லமாவையும் பொய்யர்களென ஆதாரப்படுத்தப் பார்த்தார். இருப்பினும் அவரால் எடுத்து வைக்கப்பட்ட அனைத்து குற்றச்சாட்டுக்களும் தவிடு பொடியாக்கப்பட்டுப் போனதை நீங்கள் நன்கு விளங்கியிருப்

பீர்களென்று நம்புகிறோம்.

வழிகெட்டோர் என முத்திரை குத்தப்பட்ட நமது நாட்டின் கூலிப்படைகளுக்கு இப்னு அப்துல் ஹாதியின் தீர்ப்பே முக்கிய மான ஒன்ருகப்படுமாயின், அவரைவிட பல நூற்ருண்டுகளுக்கு முன்பிருந்தே ஸியாரத்துச் செய்வதன் முக்கியத்துவத்தை எடுத்துச் சொன்ன இஸ்லாமிய முன்னேடிகளின் கருத்துக்கு முக்கியத்துவம் தருவதுதான் எங்களுக்குப் பெருமையான ஒன்ருகும்.

## அப்துல்லாஹ் பின் உமரும் அப்துல் ஹாதியும்

எனது ரௌளாவை தரிசிப்போருக்குஎனது மன்ருட்டம் கடமை யாகி விட்டது என்னும் ஹதீதை அப்துல்லாஹ் பின் உமரைக் கொண்டு மூஸா பின் ஹிலால் அறிவித்துள்ளார்கள் என்பதை முன்பே நாம் சுட்டிக் காட்டியிருக்கிறோம். ஆனல் இந்த ஹதீதை சிலரால் ஏற்றுக்கொள்ள முடியாமல் போனதற்குரிய மிக முக்கியமான காரணம் மூஸா அவர்கள் உபைதுல்லாஹ்வைக் கொண்டு சொன் னதைப் போல அப்துல்லாஹ்வின் வாயிலாகவும் கிடைக்கப் பெற்றதாகச் சொன்னதே காரணமாகும். இதற்கு அவர்களால் எடுத்துக் காட்டப்பட்ட ஆதாரங்களில் உபைதுல்லாஹ்வைக் கொண்டு சொல்ல முடியாது என்பதும் ஒன்ருகும். அல்லாஹ்வின் நல்லுதவியாலும் நாதாக்களின் நல்லாசியாலும் இக்கருத்தை நாம் முறியடித்து விட்டோம். அடுத்து இரண்டாவது நபராகிய அப்துல் லாஹ் ழயீபானவர் என்பதை நாம் ஆரம்பத்திலேயே சுட்டிக்காட்டி இருந்தோம். இப்போது அவர் தொடர்பாக அப்துல் ஹாதியால் எடுத்துக் காட்டப்படும் குற்றச்சாட்டுக்களையும் அதற்குரிய ஆதாரப் பூர்வமான பதிலையும் பார்ப்போம்.

இதோ அப்துல் ஹாதி அஸ்ஸாரிமுல் முன்கீ என்னும் தமது நூலின் 36 மற்றும் 38வது பக்கங்களில் இவ்வாறு கூறுகிருர்.

وقد تكلم فى عبد الله جماعة من أئمة الجرح والتعديل ونسبوه الى سوء الحفظ والمخالفة للثقات فى الروايات قال ابو حاتم محمد بن حبان البستى فى كتاب المجروحين من المحدثين عبد الله بن عمر بن محمد بن حفص بن عاصم بن عمربن الخطاب العمرى أخو عبيد الله بن عمر من أهل المدينة يروى عن نافع رؤى عنه العراقيون وأهل المدينة.



"ஹதீதை அறிவிப்போர்களது தெளிவான நிலைமைகளை எடுத்துக் கூறும் அறிஞர்களை ஜர்ஹ் தஃதீலுடைய அறிஞர்க ளென்று சொல்லப்படும். இக்கலையைக் கொண்டிருந்த கூட்ட மொன்று, அப்துல்லாஹ் பின் உமர் நல்ல நினைவாற்றலை கொண் டவராகக் காணப்படவில்லை. அன்றி அவர் அவரைவிட நம்பிக் கைக்குரியவர்களின் தகவல்களுக்குப் புறம்பான தகவல்களையும் அறிவித்துள்ளார் எனக் கூறுகின்றனர்."

இவ்வாறு சொல்லப்பட்ட கலையின் அறிஞர்களில் ஒருவரான அபூ ஹாத்திம் முஹம்மத் பின் ஹிப்பான் அல்புஸ்தீ என்பவரும் ஒருவராகும். அவர் அல் மஜ்ரூஹீன மினல் முஹத்திதீன் என்னும் தமது நூலில், ஹழ்ரத் ஸெய்யிதுன உமர் பின் கத்தாப் ரழியல் லாஹு அன்ஹு அவர்களின் புதல்வரான ஆஸிம். அவரது புதல் வரான ஹப்ஸி. அவருடைய புதல்வரான முஹம்மத். அவரது புதல்வரான உமர். அவருடைய புதல்வரே அப்துல்லாஹ் என்று சொல்லப்படுபவராகும். அதாவது உமர் ரழியல்லாஹு அன்ஹு வுடைய மகனுடைய, மகனுடைய, மகனுடைய, மகனுடைய, மகனுடைய, மகனே அப்துல்லாஹ்வாகும். இவர் இதுவரை பேசப்பட்டு வந்த உபைதுல்லாஹ்வுடைய மூத்த சகோதரரு மாகும் என்று கூறுகிருர்.

இந்த அப்துல்லாஹ் என்பவர் ஹழ்ரத் நாபிஃ ரழியல்லாஹு அன்ஹு சொன்னதாகவும் ஹதீதுகளை அறிவித்துள்ளார். இவரை கொண்டு இவர் சொன்னதாக ஈராக்கியர்களும், மதீனவாசிகளும் ஹதீதுகளை அறிவித்துள்ளனர். இவர் ஸாலிஹானவராகவும் வணக்கசாலியாகவும் காணப்பட்டார். பின்னர் காலப்போக்கில் இவரது தகவல்கள் பதியப்படும் அந்தஸ்த்தை இழக்க நேரிட்டது. இவர் ஹிஜ்ரி 173ல் இவ்வுலகினின்றும் மறைந்து போனவராகும்.

யஹ்யா பின் ஸயீத் அவர்கள் அப்துல்லாஹ் பின் உமர் அவர்கள் சொன்னதாக எதையும் சொல்லவில்லை என ஹமதானி என்பவருக்கு அம்ர் பின் அலீ சொன்னதாகவும் ஒருதகவல் பதிவாகியுள்ளது.

அ- ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒழு செய்வார் களாயின் தமது தாடியை குடைந்து கொள்வார்கள்.

ஆ- நட்சத்திரங்களை மூல மந்திரமாகக் கொண்டு செயல்படு பவனிடம் சென்று கேள்வி கேட்கும் ஒருவரது நாற்பது நாட்களின் தொழுகைகள் ஒப்புக்கொள்ளப்பட மாட்டாது.

இ- (யுத்தத்தில் கிடைக்கும் கனீமத்துப் பொருட்களில்) இரு பங்குகள் குதிரையில் சென்று ஜிஹாத் செய்பவருக்கும், ஒரு பங்கு கால்நடையாக சென்று ஜிஹாத் செய்பவருக்குமாகும்.

இம்மூன்று ஹதீதுகளுமே ஹழ்ரத் நாபிஃ அவர்கள் சொன்னதாக அப்துல்லாஹ்வைக் கொண்டு அறிவிக்கப்பட்டவைகளாகும். இவைகளின் தீர்ப்புகள் படித்தோருக்கு நன்கு தெரியுமென்று அபூ ஹாத்திம் அவர்கள் கூறுகின்றனர்.

அ- யஹ்யா பின் ஸயீத் அவர்கள், அப்துல்லாஹ் பின் உமர் பின் ஹப்ஸ் அல் உமரை ழயீபானவர் எனக்கூறுகிறார். இமாம் புகாரி.

ஆ- நினைவாற்றல் காரணமாக அப்துல்லாஹ்வை ழயீபானவர் என்கிறார் யஹ்யா பின் ஸயீத் அவர்கள். இமாம் திர்மிதீ.

இ- அபூ அப்துர்ரஹ்மான் அப்துல்லாஹ் பின் உமர் பின் ஹப்ஸ் பின் ஆஸிம் பின் உமர் அவர்கள் ழயீபானவராகும்.

ஈ- அப்துல்லாஹ்வைப் பற்றி யஹ்யா பின் முயீனிடம் நான் (இமாம் அஹ்மத்) கேட்டபோது, அதற்கவர்; ழயீபானவர் என்று சொன்னதாக அஹ்மத் பின் ஹன்பல் எனக்கு சொன்னார். இமாம் உகைலி.

உ- இமாம் அஹ்மத் பின் ஹன்பலின் புதல்வர் தமது தந்தையிடம் அப்துல்லாஹ் எப்படிப்பட்டவர் எனக்கேட்க, அதற்கு இமாமவர்கள்; அவர் அப்படிப்பட்டவர் இப்படிப்பட்டவர் என்று சொன்னார். இமாம் அஹ்மதின் புதல்வர்.

ஊ-அப்துல்லாஹ்வின் ஹதீத் எப்படிப்பட்டதென்று இமாம் அஹ்மதிடம் கேட்கப்பட்ட போது, அதற்கவர்; இஸ்னாதில் மேலதிகம் செய்பவரும், நம்பிக்கைக்குரியவர்களின் தகவல்களுக்கு மாற்றம் செய்பவருமாகும். மற்றபடி தனிப்பட்ட ரீதியில் அவர் ஒரு ஸாலிஹான மனிதராகும் என்று சொன்னார்கள். இமாம் அபூ ஸுர்ஆ அத்திமஷ்கீ.

இதனை இமாம் உகைலி அபூ பக்ர் அல் அத்ரம் சொன்னதாகக் குறிப்பிடுகிறார்கள்.

எ- அப்துல்லாஹ்வானவர் ஸுவைலிஹ் என யஹ்யா பின் முயீன் சொன்னதாக இஸ்ஹாக் பின் மன்ஸூர் கூறுகிறார்.



ஏ- அப்துல்லாஹ் ழயீபானவர் என எனது தந்தை சொன்னார். அப்துல்லாஹ் பின் அலிய்யிப்னில் மதீனி.

ஒ- அப்துல்லாஹ் ஸதூக்கானவர். அதேநேரம் அவர் இழ்திராபுடையவர். யஃகூப் பின் ஷைபா.

ஓ- அப்துல்லாஹ்வின் தகவலை பதிவு செய்யலாம். ஆனால் அதனை எதற்கும் ஆதாரமாகக் காட்ட முடியாது. ஹாத்திம் ராஸி.

ஃ- அப்துல்லாஹ் பலவீனமானவரும் லய்யினும் முக்தலிதுல் ஹதீதுமாகும். ஸாலிஹ் பின் முஹம்மத் அல் பக்தாதி.

-- பலமானவரல்ல. அபூ அஹ்மத் பின் ஹாக்கிம்.

ஒன்றும் இலக்கத்திலிருந்து ஃ வரை சொல்லப்பட்ட கருத்துக்களனைத்தும் அப்துல்லாஹ் பின் உமரைப் பற்றிய குற்றப் புலனாய்வுக்குரிய விஷயங்களாகும். இவற்றை அப்துல் ஹாதி தமது நூலில் எடுத்துக்காட்டி அப்துல்லாஹ்வால் அறிவிக்கப்பட்ட ஸியாரத்திற்குரிய ஹதீதை மறுக்கிறார்.

உண்மையில் நானாக அல்லது நீங்களாக அல்ல. வேறு யாராக இருந்தாலும் அப்துல்லாஹ்வைப் பற்றி அப்துல் ஹாதியால் சொல்லப்பட்ட கருத்தோடு மட்டும் நாம் நின்றிருப்போமாயின் அப்துல் ஹாதியின் கருத்துத்தான் சரியானதென்னும் முடிவுக்கு வந்திருப்போம் என்பது மட்டும் நிச்சயம். இதில் நமது நாட்டிலுள்ள வஹ்ஹாபிகள் பணத்திற்காக அவரது கருத்தோடு நின்றுவிட்டனர். இவர்களை விட்டும் நம்மைப் பாதுகாத்த அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். உபைதுல்லாஹ்வின் அறிவிப்பை கொண்டு மூஸாவால் சொல்ல முடியாதென்ற அப்துல் ஹாதியின் கருத்தை முறியடித்து அதைத் தவறென்று நிரூபித்த நமது பெரியோர்களுக்கு இது ஒன்றும் பெரிதல்ல. இன்னும் எந்தவொரு குற்றச்சாட்டுக்கும் ஆளாகாத மிகவும் நம்பிக்கைக்குரியவரான உபைதுல்லாஹ்வால் சொல்லப்பட்ட தகவலோடு விஷயத்தை முடித்திருக்கலாம். அதற்கும் மேலாக அப்துல்லாஹ் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளை அகற்றி அவரைத் தூய்மைபடுத்தியதோடு அவர் மூலமாகச் சொல்லப்பட்ட தகவல் உண்மைதான் என்பதை நிரூபிப்பதற்காகவே ஒவ்வொரு குற்றச்சாட்டையும் தெளிவுபடுத்துகிறோம். அவற்றை படித்துப் பயனடைவதோடு நின்று விடாமல் மற்றவரையும் படிக்கத் தூண்டுங்கள். அப்போது தான் அப்துல் ஹாதியுடையவும், அவரது சகாக்களுடையவும்

உண்மை சொரூபம் உங்களுக்குத் தெரியும்.

## குற்றச்சாட்டு ஒன்று :

இப்னு ஹிப்பான் அவர்கள் தமது அல்மஜ்ரூஹீன் என்னும் நூலில் மேற்கண்டவாறு கூறியுள்ளார்கள் எனில், இப்னு ஹிப்பான் அவர்கள் ஹதீதை அறிவிப்போரின் நிலைமைகளை சொல்லும் ஒரு பெரியாராகும். ஆனால் அவரால் சொல்லப்பட்ட கருத்துக்கள் அனைத்தும் நம்பிக்கைக்குரியது தானா எனக் கேட்டால்.,,,

எந்தக் கலையில் இப்னு ஹிப்பான் பிரபலமானவரோ அதே கலையில் அவரைவிட மிகவும் பிரபலமான இமாம் தஹபி, இமாம் இப்னு ஹஜர் போன்றோரும் இன்னும் பலரும், அறிவிப்பாளர் களின் குறைகளை எல்லை கடந்து விபவரிப்பவரும் மிகக் கடினமான நிலைகளைக் கையாளுபவருமாகும் என்பதாகக் குறிப்பிடுகின்றனர். இப்படிப்பட்ட கடினமானோரின் தீர்ப்பை ஆதாரமாகக் கொள்ள முடியாது என்பது இக்கலையை சேர்ந்த ஆய்வாளர்களின் தீர்ப்பாகும்.

அத்துடன் இப்னு ஹிப்பான் கடினமான போக்கை உடையவர் என்பதை நிரூபிக்க இமாம் தஹபி (இவரும் இப்னு தைமிய்யாவின் அறிவாற்றலைக் கண்டு அசந்துபோன காலக்கட்டத்தில் கடினமான வராகத்தான் காணப்பட்டார். அதன்பின் இவரே இப்னு தைமிய் யாவை எச்சரித்து ஒரு நூலையும் தொகுத்தார்.) அவர்கள் ஒரு சிலரைப்பற்றி குறிப்பிட்டுள்ளதை இங்கே உங்களின் பார்வைக்கு தருகிறோம்.

அ- அஃப்லஹ் பின் ஸயீத் என்பாரைப் பற்றி இப்னு ஹிப்பான் குறிப்பிடும்போது, அஃப்லஹ் நம்பிக்கைக்குரியவர்கள் சொன்ன தாக மௌழூஆன தகவல்களை அறிவித்துள்ளார். ஆதலால் அவரு டைய தகவல்களை ஆதாரமாக எடுக்க முடியாது. இன்னும் எந்தக் காரணத்தைக் கொண்டும் இவரது தகவல்களை நாம் ஆதாரமாக எடுக்க முடியாதென்று சொன்னதற்கு இமாம் தஹபி அவர்கள், இப்னு ஹிப்பான் அவர்கள் சில நேரங்களில் நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளர்கள் மீது, அவர் என்ன சொல்கிறார், அவரது வாயிலி ருந்து என்ன வெளியாகிறது என்பதைத் தெரிந்து கொள்ளாம லேயே அவரைப் பற்றி குறைகளை வைத்து விடுகிறார் என்று கூறுகிறார்.

ஆ- ஆரிம் என்னும் பிரபலமான முஹம்மத் பின் பழ்ல் அஸ் ஸதூஸியைப் பற்றி இமாம் தாரகுத்னி சொன்னதாக இமாம் இப்னு



ஹிப்பான் சொன்ன கருத்துக்கு இமாம் தஹபி அவர்கள், இமாம் நஸாயிக்குப் பின் இவரைப் போன்ற ஒருவர் வரவில்லை என்கிறார். அப்படிப்பட்ட ஒருவரைப் பற்றி இப்னு ஹிப்பான் இப்படிச் சொல்வதாகக் கூறுகிறார்.

இ- அய்யூப் பின் அப்துஸ்ஸலாமைப் பற்றி இப்னு ஹிப்பான் சொன்ன கருத்துக்கு, இமாம் தஹபி அவர்கள்; இப்னு ஹிப்பான் அறிவிப்பாளர்களது விஷயத்தில் மிகவும் கடினமான - மோசமான போக்கைக் கையாண்டிருப்பதாகக் கூறுகிறார்.

ஈ- சுவைத் பின் அம்ருல் கலபீ என்பாருடைய விஷயத்தில் இப்னு ஹிப்பான் அவர்கள் எல்லை மீறிய வார்த்தைகளை பயன் படுத்தியுள்ளதாக இமாம் தஹபி கூறுகிறார்.

உ- உத்மான்பின் அப்துர் ரஹ்மான் அத்தராயிபி விஷயத்திலும் இப்னு ஹிப்பான் அவர்கள், தமது வழமையின் அடிப்படையில் திணிக்கப்பட்டுள்ளதாக இமாம் தஹபி சொல்கிறார்.

ஆதலால் நம்பிக்கைக்குரிய அறிவிப்பாளர்கள் தொடர்பாக இப்னுஹிப்பானின் கருத்துக்கு முக்கியத்துவம் தரப்பட மாட்டாது என்பது நிச்சயமாகி விட்டதால் அப்துல்லாஹ் பற்றிய இப்னு ஹிப்பானின் கருத்தை ஏற்க முடியாதுள்ளது.

## குற்றச்சாட்டு இரண்டு :

அப்துல்லாஹ் தவறான தகவல்களை அறிவிப்பவர் என்பதை ஆதாரப்படுத்த இப்னு ஹிப்பான் பின்வரும் மூன்று தகவல்களை எடுத்துக் காட்டுகிறார். அதாவது,...

(1) ரஸூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்கள் ஒழு செய்யும்போது தமது முபாரக்கான தாடியைக் குடைந்து கொள்வார்களாம்.

இந்தத் தகவலை ஏற்றுக்கொள்ள முடியாதென்பதற்கு ஏதாவது காரணம் இருக்குமாயின் அது அப்துல்லாஹ் உமரல்ல. மாறாக அப்துல்லாஹ் உமர் சொன்னதாகச் சொன்ன முஃமல் பின் இஸ்மாயீல் என்பவர் தான் காரணமாகும். இவர் ஒரு நம்பத்தகுந்த வராயினும் பெரும்பாலோர் இவரை ழயீபானவர் என்றும், முன்கருல் ஹதீத் என இமாம் புகாரியும் கூறுவதால் இதை ஆதார மாக வைத்து அப்துல்லாஹ் உமரை குற்றஞ்சாட்டுவது நல்லதல்ல.

(2) நட்சத்திரங்களை பயன்படுத்தி கணக்கு சொல்பவனிடம் சென்று கேள்வி கேட்பவரின் நாற்பது நாட்களின் தொழுகைகள் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது என மாநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினர்.

இதே தகவலை அப்துல்லாஹ் பின் உமர் அவர்கள் நாபிஃ சொன்னதாகச் சொல்ல நானும் செவிமடுத்தேன் என இப்னு வஹ்ப் அவர்கள் அல்ஜாமிஃ என்னும் தமது நூலின் 114ம் பக்கத்தில் குறிப்பிடுகின்றனர்.

அப்துல்லாஹ் உமருடைய இந்த ஹதீதை ஆதாரமாகவைத்து இப்னு ஹிப்பான் குற்றம் சாட்டுவதன் காரணம் என்ன என்பது தான் நமக்குப் புரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். அதாவது,...

மேற்கண்ட ஹதீத் ஸஹீஹ் முஸ்லிமின் கிதாபுஸ்ஸலாம், இக்மால் பாகம்-7, பக்கம்-158, முஸ்னத் அஹ்மத், பாகம்-7, பக்கம்-687. ஹுல்யத்துல் அவ்லியா, பாகம்-10, பக்கம்-407. தாரீக் அஸ்பஹான், ஸுனன் பைஹகீ, பாகம்-8, பக்கம்-138 போன்றவைகளில்,...

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் துணைவியரில் சிலர், ஹழ்ரத் ஸபிய்யா ரழியல்லாஹு அன்ஹா அவர்களுக்கும், அவர்கள் நாபிஃ ரழியல்லாஹு அன்ஹு அவர்களுக்கும், அவர்கள் உபைதுல்லாஹ் உமர் (அப்துல்லாஹ்வின் சகோதரர்) அவர்களுக்கும் சொன்னதாகப் பதிவாகியுள்ள போது, இப்னு ஹிப்பான் அவர்கள், அப்துல்லாஹ் தமது சகோதரருக்கு மாற்றம் செய்து விட்டதாகக் கருதி உபைதுல்லாஹ்வின் தகவலை எடுத்துக் கொண்டுள்ளார் என்றே நமக்குத் தோன்றுகிறது.

பின்னும் ஹுல்யத்துல் அவ்லியா, பாகம்-8, பக்கம்-246ல் ஹழ்ரத் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், ஸயீத் பின் வஹப் அவர்களுக்கும், ஸயீத் அபீ இஸ்ஹாக் அஸ்ஸபீயீ என்பாருக்கும் சொன்னதாகவும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

அபீ இஸ்ஹாக் அஸ்ஸபீயீயும் ஸயீத் பின் வஹ்பும் நம்பத் தகுந்தவர்களும், பிரபலமானவர்களுமாகும். எனவே இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹுவால் சொன்னதாகச் சொல்லப்பட்ட தகவலும் ஸஹீஹானது தான். இதில் அப்துல்லாஹ் தவறு செய்தவரல்ல. இனி தவறு செய்ததாகச் சொல்வோர் ஏதோவொரு



தனிப்பட்ட காரணத்திற்காகவே இப்படியெல்லாம் குற்றஞ் சாட்டுகின்றனர். இன்னும் மூன்றாவது ஹதீதுக்கான விளக்கம் வேண்டுவோர் பத்ஹுல்பாரி, பாகம்-6, பக்கம்-68ஐ பார்த்துக் கொள்க.

பின்னும் அப்துல்லாஹ் பின் உமரை குறித்த இப்னு ஹிப்பானின் கருத்தை ஆதாரப்பூர்வமானதாக நாம் எடுக்க முடியாது. ஏனெனில் முஹத்திதீன்களின் ஒரு கூட்டம் அப்துல்லாஹ்வின் ஹதீதை ஏற்றுக் கொண்டும், இன்னொரு கூட்டம் அவரை ழயீபானவர் என்றும் சொன்னதுதான் அதற்குரிய காரணமாகும். இதில் ழயீபானவர் எனத் தீர்ப்பளித்த அக்கூட்டத்தார் கூட அவரால் அறிவிக்கப்பட்ட ஹதீதுக்குரிய சரியான சாட்சியும், அந்த ஹதீதின் கருத்துக்கு தோதான கருத்து வேறொரு ஹதீதில் கிடைக்கும் பட்சத்தில் அவரது தகவலை ஏற்றுக் கொள்கின்றனர்.

எனவே உண்மையில் ஒரு அறிவிப்பாளரை மத்ரூக் எனச் சொல்லப்பட்டால் அந்நிலையில் அவரது தகவலுக்குரிய சாட்சியும், அதற்குத் தோதான கருத்தைக் கொண்ட வேறொரு ஹதீத் இருந்தாலும் அவரது தகவலை ஒப்புக்கொள்ள முடியாதென்பதே நியதியாகும். ஆனால் ழயீபானவர் எனச்சொல்லப்பட்டால் அதற்குரிய சாட்சிகள் இருக்கும்போது ஒப்புக் கொள்ளப்படுமாயின் அப்போது ழஃப் என்பது நீக்கப்பட்டு ஹஸன் லிகைரிஹீ என்னும் தரத்திற்கு அவர் உயர்த்தப்பட்டவராகி விடுவார்.

இதை உறுதிப்படுத்தும் வகையில் இமாம் முஸ்லிம் அவர்கள் தமது ஸஹீஹ் முஸ்லிமில் அப்துல்லாஹ்வை உபைதுல்லாஹ்வுடன் இணைத்து ஹதீதை பதிவு செய்துள்ளார்கள் எனில் இந்நிலையில் அப்துல்லாஹ் அப்துல் ஹாதியால் ஏற்கப்பட்ட இப்னு ஹிப்பானின் கருத்துக்கு உள்ளாக்கப்படுவாரா என்ன? சொல்லுங்கள். இன்னும் மற்றொருவரோடு தொடர்புபடுத்தப்பட்டு இமாம் முஸ்லிமால் அறிவிக்கப்படும் ஒருவரின் தகவலை நாம் ஏற்பது தவறா? பின்னும் அப்துல்லாஹ்வின் எந்தவொரு தகவலையும் ஏற்க முடியாதெனில் தன்கீஹுத் தஹ்கீக் என்னும் தமது நூலில் அவருடையதகவலை அப்துல் ஹாதி ஏன் பதிவு செய்தார்? இத்தகையோர் தங்களுக்குத் தோதான கருத்தை யார் சொன்னாலும் அந்த நிலையில் அதை ஏற்றுக் கொள்ளும் அரசியல்வாதிகள் என்பதை நீங்கள் மறந்து விடக்கூடாது.

## குற்றச்சாட்டு மூன்று :

حدثنا عبد الله قال: سألت أبي عبد الله عن عبد الله بن عمر

فقال: كذا وكذا.

**"அப்துல்லாஹ் பின் உமரைப் பற்றி இமாம் அஹ்மதின் புதல்வர் தமது தந்தையிடம் கேட்டபோது, அதற்கவர்கள்; அவர் இப்படிப்பட்டவர் என்றும் அப்படிப்பட்டவர் என்றும் இஸ்னதில் மேலதிகம் செய்பவராயும் மாற்றம் செய்பவராயும் இருந்தார் என்றும், அதேநேரம் அவர் நல்லவர் என்றும் சொன்னதாகச் சொல்கிறார்."**

இதில் இமாம் அஹ்மத் அவர்கள் அப்துல்லாஹ்வைப் பற்றி சொன்னதாகச் சொல்லப்படும் இக்குற்றச்சாட்டு ஒரு வலுவான நிலையினைக் கொண்டதல்ல என்று மறுக்கின்றனர். ஏனெனில் இவ்வாறு நாம் சொல்வதற்கு இமாமவர்கள் தான் காரணமாகும். இனி இமாமவர்களின் குற்றச்சாட்டை எடுத்துக்காட்டும் அப்துல் ஹாதி அதே நபரைப் பற்றி இமாமவர்கள் சொன்ன நல்ல கருத்தையெல்லாம் முழு பூசனிக்காயை சோற்றில் மறைத்த கதையாக ஏன் மறைத்து விட்டார்? அதுவும் எப்படி?

صالح لابأس به قد رؤى عنه الناس.

**"அப்துல்லாஹ் எந்தக் குறையும் இல்லாத நல்லவர். பெரும்பாலோர் அவரைக் கொண்டு ஹதீதுகளை அறிவித்துள்ளனர்."** நூல் : அல் ஜர்ஹ் வத்தஃதீல், பாகம்-5, பக்கம்-109,110. இதுபோன்றே இன்னோரிடத்தில்,...

صالح قدرؤى عنه لابأس به ولكن ليس مثل أخيه عبيد الله.

**"அப்துல்லாஹ் நல்லவர். அவர் மூலமாக ஹதீதுகள் அறிவிக்கப்பட்டுள்ளன. அவர் பரிசுத்தமானவர். இருப்பினும் அவர் அவரது சகோதரரான உபைதுல்லாஹ்வை போன்றவரல்ல என்பதாக அபூதாலிப் என்பவர் இமாமவர்கள் சொன்னதாகக் கூறுகிறார்."** நூல் : அல் காமில் இப்னு அத்தி, 4-1460.

எனவே இமாம் அஹ்மதவர்கள் அப்துல்லாஹ்வைப் பற்றி சொன்ன வார்த்தைகளை தூய்மையான உள்ளம் கொண்டு சிந்திப்போர்க்கு நல்லதொரு முடிவு கிடைக்கும். எதற்கும் ஃபத்ஹுல் முகீத், பாகம்-2, பக்கம்-127ஐ பாருங்கள்.

ஆதலால் இமாமவர்கள் அப்துல்லாஹ்வைக் குறித்து சொன்ன



வார்த்தைகள் வலுவானதல்ல. அவ்வாறின்றி அப்துல்லாஹ்வின் தகவலை ஏற்றுக்கொள்ளவே முடியாது. ஏனெனில் அவரது தகவல் அனைத்தும் பொய்யானவை எனத் தீர்ப்பளிப்போமாயின் இமாம் ஹன்பலியின் மத்ஹபைச் சார்ந்த முக்கியமான பிரமுகர் எனப் பேசப்படும் அபூ முஹம்மத் பின் குதாமா அல் முகத்திஸி அவர்கள் எதிர் தரப்பாரால் புறக்கணிக்கப்பட்டு விடுவாருகையால் (எனது ரௌழாவை தரிசிப்பவருக்கு எனது ஷபாஅத்து கடமையாகி விட்டது) என்னும் ஹதீதையும், இன்னும் இதுபோன்ற வேறு ஹதீதுகளையும் இவர் ஆதாரமாக ஏற்றுக் கொள்வாரா? பார்க்க: அல்முக்னி பாகம்-3, பக்கம்-588.

## குற்றச்சாட்டு நான்கு :

அப்துல்லாஹ்வைப் பற்றி யஹ்யா பின் முயீன் அவர்களால் சொல்லப்பட்ட இரு வார்த்தைகளை அப்துல் ஹாதி எடுத்துக் காட்டுகிறார். ஒன்று: ழயீபானவர் என்பதும் மற்றொன்று: ஸுவைலிஹ் என்பதுமாகும். இங்கேயும் அப்துல்லாஹ்வைப் பற்றி யஹ்யா பின் முயீன் சொன்னதை மட்டும் தான் அப்துல் ஹாதி எடுத்துக் காட்டுகிறாரே அன்றி,...

ليس به بأس يكتب حديثه.

**"அப்துல்லாஹ் பிரச்னைக்குரியவரல்ல. அவரது ஹதீதை பதிவு செய்யலாம்"** என்று இப்னு அபீ மர்யம் என்பாரின் கேள்விக்கு யஹ்யா தந்த பதிலை மறைத்து விட்டார். இன்னும் யஹ்யா பின் முயீன் அவர்கள் (லைஸ பிஹி பஃஸுன்) என்று சொன்னாரெனில் அதற்கு அவர் ஸிகத்தானவர் என்பது அறியப்பட்ட விஷயமில்லையா? இன்னும் உத்மான் பின் ஸயீத் அத்தாரமீ அவர்கள், நாபிஃ சொன்னதாக அப்துல்லாஹ் பின் உமர் கூறுகிறாரே அதற்குரிய நிலை என்ன? என்பதாக இப்னுமுயீனிடம் கேட்கப்பட்ட போது, அதற்கவர்;

صالح ثقة.

என்று சொன்னாரே. நூல் : அல்காமில் 4-1459. இதையும் அப்துல் ஹாதி மறைத்து விட்டார்.

ஒரு அறிஞர் எனப்படுபவர் ஒரு விஷயத்தைப் பற்றி சொல்லு முன் அதுபற்றி பதியப்பட்டுள்ள நல்ல, கெட்ட கருத்துக்கள் அனைத்தையும் எடுத்துச்சொன்ன பிறகுதான் தனது முடிவை சொல்வாரேயன்றி தனக்குத் தோதான கருத்தை மட்டும் எடுத்துக் கொண்டு மற்றவைகளை எல்லாம் மறைக்க மாட்டார். ஆனால் இந்த

நல்ல குணமே இல்லாத அப்துல் ஹாதியை தமது தலைக்குமேல் வைத்துக்கொண்டு ஒரு கூலிக் கூட்டம் கொண்டாடிக் கொண்டிருக்கிறது.

ஆதலால் இப்னு முயீன் அப்துல்லாஹ்வை ஸிகத்தானவர் என்று சொன்னதுதான் இறுதியான முடிவாகும். அதிலும் குறிப்பாக நாபிஃ சொன்னதாகச் சொன்ன தகவலைக் கொண்டு அவ்வரை ஸிகத்தானவர் என்று சொல்கிறார். இதில் ஸியாரத்துத் தொடர்பான ஹதீத் அப்துல்லாஹ் உமரைக் கொண்டு நாபிஃ சொன்னதாகச் சொல்லப்பட்டதாகும். எனவே ஸியாரத்தை குறித்த தகவல் எல்லா வகையிலும் நம்பத்தக்க ஒன்றென்பது இதன் மூலம் உறுதியாகி விட்டது.

எனவே இதுவரை அப்துல்லாஹ்வைக் குறித்து சொல்லப்பட்ட கருத்துக்களின் முடிவின்படி அவர் நம்பிக்கையானவர். அத்துடன் அவரது தகவலுக்கு மாற்றமான இன்னொரு தகவல் கிடைக்காத வரை அது மக்பூலான - ஏற்றுக்கொள்ளத் தக்க ஒன்றே என்பதை நாம் விளங்கிக்கொள்ள வேண்டும்.

ஏனெனில் ஸிகத்தானவரால் சொல்லப்பட்ட தகவலுக்கு மாற்றமான ஒரு தகவல் கிடைக்காத வரை அவரது தகவல் மக்பூலானது என்பது இத்துறையைச் சார்ந்த அனைவரின் ஒட்டு மொத்தமான தீர்ப்பாகும். இப்படியொரு தீர்ப்பு இருப்பதால் தான் இப்னு தைமிய்யா மற்றும் அப்துல் ஹாதி போன்றோரின் அடிச்சுவடுகளை விட்டுவிட்டு எல்லா பெரியோர்களும் அதனை ஆதாரமாக எடுத்தனர்.

சரி. நீங்கள் உமரைப் பற்றிய இப்னு முயீனின் குற்றச்சாட்டையே அப்துல் ஹாதியைப் பின்பற்றி பொய்ப்பிப்பவராக இருப்பீர்களேயானால் அந்த இப்னு முயீன் ஸியாரத்தை பற்றிய விஷயத்தில் என்ன மாதிரியான கருத்தைக் கொண்டிருந்தார் என்பதாவது உங்களுக்குத் தெரியுமா? அவர் என்ன சொல்கிறார் என்பதைப் பாருங்கள்,...

سفرة إلى المدينة أحبّ إليّ من مأتى طواف.

**"இருநூறு முறை தவாபு செய்வதைவிட மதீனா முனவ்வராவுக்கு ஒருமுறை பிரயாணம் செய்வதே எனக்கு மிகப் பிரியமானதாகும் என்று கூறுகிறார்.**" நூல்: மஃரிபத் ரிஜால், பாகம்-2, பக்கம்-29.

பார்த்தீர்களா? எந்த ஹதீதைக் குறித்து இத்தனை நேரமாக நாம்



நேரத்தைக் கழித்துக் கொண்டிருந்தோமோ அதைப் பொய்யாக்க மூஸாவை, அப்துல்லாஹ் பின் உமரை, மஸ்லமாவை, உப்பாதியை என இத்தனை நபர்களை குற்றஞ்சாட்ட இப்னு ஹிப்பான், உகைலி, இப்னு முயீன், அஹ்மத் என்று யாரையெல்லாம் ஆதாரப்படுத்த முனைந்தோமோ அவர்கள் யாவருமே ஸியாரத்து செய்வதையும், அதற்காகப் பிரயாணம் செய்வதையும் ஹலாலான காரியம் என்னும் அழுத்தமான கொள்கையை கொண்டவர்கள் என்பதை யாரும் மறந்து விடக்கூடாது. அடுத்து ஒரு அறிவிப்பாளரை அலசுவதற்காக நாம் ஆதாரப்படுத்தப் போகும் உலமாக்களையும் அவர்களின் நூல்களையும் நீங்கள் பார்க்குமுன் அவர்கள் அது சம்பந்தமான விஷயத்தில் என்ன மாதிரியான அபிப்பிராயம் கொண்டிருந்தனர் என்பதை பார்க்க வேண்டாமா? உதாரணத்திற்கு, ஹதீதின் அறிவிப்பாளர்களுடைய குற்றங் குறைகளை எடுத்துக் காட்டி நபிமொழிகளை மட்டந்தட்டுவதற்கு உங்களால் உபயோகிக்கப்படும் ஒரு பெரியார் அல்லாமா இமாம் தஹபி என்பதை மறுக்க மாட்டீர்கள். இமாம் தஹபி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனித ரௌழா ஷரீபை தரிசிப்பது பற்றி கூறும் கருத்தை ஸியர் அஃலாமுன் நுபலா பாகம்-5, பக்கம்-400ஐ எடுத்துப்பார்த்து தெரிந்து கொள்ளுங்கள். இனி தொடர்ந்து அப்துல் ஹாதியின் குற்றச்சாட்டுக்களை கவனிப்போம்.

## அப்துல்லாஹ் பின் உமரும், இமாம்களும்

மூஸா பின் ஹிலாலை (உபைதுல்லாஹ்வை கொண்டு மூஸாவால் அறிவிக்கப்பட்ட தகவலை) பொய்யாக்க முடியாமல் போகவே அடுத்து அப்துல்லாஹ்வை பொய்யாக்கினால் தான் அவரால் அறிவிக்கப்படும் தகவலை பொய்யாக்க முடியும் என்பதால் அதில் விடாப்பிடியாக இரவு பகலாக ஈடுபட்டு அப்துல் ஹாதி அவரை குற்றம் சாட்டியோரின் பட்டியலையெல்லாம் ஒன்று திரட்டியிருந்தார்.

இருப்பினும் நாதாக்களின் நல்லாசியால் அவரது ஒவ்வொரு குற்றச்சாட்டுக்களையும் நாம் தெளிவுபடுத்தினோம். இன்னும் குற்றம் சாட்டியவர்களென்று சொல்லப்பட்ட அறிஞர்களே அவரைப் புகழ்ந்து பரிசுத்தப்படுத்தி பேசியதையும் நாம் எடுத்துக் காட்டினோம். இதற்கெல்லாம் மேலாக அந்த அறிஞர்களனைவரும் ஸியாரத்திற்காக பிரயாணம் செய்யலாம் என்னும் கொள்கையை உடையவர்கள் என்பதையும் ஆதாரப்படுத்தினோம். இப்போது அப்துல் ஹாதியால் சுட்டிக்காட்டப்படாத அறிஞர்களைக் கொண்டு

அப்துல்லாஹ் உமரின் பரிசுத்தத்தன்மையை உங்களின் பார்வைக்கு தருகிறோம். அப்துல் ஹாதியால் சுட்டிக்காட்டப்பட்ட பெரியோர் களின் நல்ல வார்த்தைகளை எல்லாம் அவர் குழிதோண்டிப் புதைத்து விட்டார் என்ற போதிலும் இப்போது நம்மால் வரிசைப்படுத்தப் படப் போகும் அப்துல் ஹாதியின் குற்றச்சாட்டின் வரிசைக்கு இலக்காகாமல் புகழ்ந்துள்ள பெரியோரைப் பற்றி அவர் என்ன சொல்வார்? பாருங்கள்,...

(1) கல்வியின் இமாமெனப் போற்றப்படும் அஹ்மத் பின் ஸாலிஹுல் மிஸ்ரி என்பார் அப்துல்லாஹ்வைப் புகழ்ந்து பேசக் கண்டேன் என்கிறார் இமாம் அபூ ஹாத்திம் ராஸி அவர்கள்.
நூல் : அல் ஜுர்ஹ் வத்தஃதீல், பாகம்-5, பக்கம்-110. துக்காத் இப்னி ஹிப்பான், பக்கம்-151.

(2) அப்துல்லாஹ் சொன்னதை அறிவிக்கலாம் என்கிறார் இமாம் அஜ்லீ அவர்கள். நூல் : அஸ்ஸிகாத், பக்கம்-239.

(3) இப்னு ஷாஹீன் அவர்கள் உமரியை ஸிகத்தானவர் என்கிறார். நூல் : திக்காத், பக்கம்-151.

(4) இமாம் கலீலி அவர்கள், உமரை ஸிகத்தானவர் என்கிறார்.

(5) யஃகூப் பின் ஷைபா அவர்கள், உமரை ஹஸனானவர் எனக்கூறும் வகையில் ஸிகத்தானவர் எனவும் ஸதூக்கானவர் எனவும் கூறுகிறார். அதேநேரம் அவரது ஹதீதில் இழ்திராபும் உள்ளதென்று சொல்கிறார். நூல் : தாரீக் பக்தாத், பாகம்-10, பக்கம்-20. இதில் இழ்திராபு இருப்பதாகச் சொல்லப்பட்டாலும் அவர் ஒரு சரியான அறிவிப்பாளர் என்னும் நிலையிலிருந்து வெளிப்பட மாட்டார்.

(6) ஹாபிழ் அபூ யஃலல் மௌஸிலி அவர்கள் உமரை ஹஸனானவர் என்கிறார்.

(7) இப்னு ஸகன் அவர்கள், உமரை ஸிகத்தானவர் என்கிறார்.

(8) இமாம் திர்மிதீ அவர்கள் துஹ்பா என்னும் நூலின், பாகம்-9, பக்கம்-391, 392ல் பாபு மா யகூலு இதா றஅம் முப்தலா, பாகம்-3, பக்கம்-590. பாபு துகூலி மக்கத்த நஹாரன் என்னும் பிரிவில் அப்துல்லாஹ்வின் ஹதீதை ஹஸன் என்கிறார்.

(9) இப்னு கதீர் சூரா கிஸஸின் ஆரம்பப் பகுதியில் ஹஸனானவர் என்கிறார்.



(10) அப்துல்லாஹ் பின் உமர் ஸாலிஹுல் ஹதீதாகும். இன்னும் இப்னு வஹ்ப், வகீஃ போன்ற நம்பத்தகுந்தவர்கள் எல்லாம் அப்துல்லாஹ்வைக் கொண்டு ஹதீதுகளை அறிவித்துள்ளனர். அவரது அறிவிப்புக்களில் எந்தப் பிரச்சினையும் இல்லை. அதே நேரம் அவரது சகோதரர் உபைதுல்லாஹ்வை விட ஸிகத்தானவரல்ல தான். இருப்பினும் அவரைப் பொறுத்தவரை அவர் நல்லவர் தான். அவரது அறிவிப்புக்களை சொல்வதால் பாதகம் ஏதுமில்லை. நூல் : இப்னு அத்தி, 5-1869.

(11) அப்துல்லாஹ் உமரானவர் ஸாலிஹுல் ஹதீதான ஒரு சிறந்த அறிஞராகும் என்பதாக ஹாபிழ் சகாவி கூறுகிறார்கள். நூல் : அத்துஹ்பத்துல் லதீபா, பாகம்-3, பக்கம்-366.

(12) இமாம் தஹபி அவர்கள், அல் காஷிப், 2-99. மற்றும் அத்தீவான், பக்கம்-173லும் உமரைப் பற்றிய ஜுர்ஹை எடுத்துக் காட்டாமல் பரிசுத்தப்படுத்துவதோடு நிறுத்திக் கொண்டார். இன்னும் இமாம் தஹபி அவர்கள் தம்மிடம் அவரைக் குறித்து சொல்லப்பட்ட பரிசுத்தத் தன்மையே போதுமென அதற்கே முன்னுரிமை தந்துள்ளார்கள். அதாவது எந்த அறிவிப்பாளரது விஷயத்தில் பலரும் பல்வேறு கருத்துக்களை கூறுகின்றனரோ, அதில் பலமான குற்றச்சாட்டு ஏதும் இல்லாதிருப்பின் அவர் ஸிகத்தானவர் என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

எனவே அப்துல்லாஹ் பின் உமர் ஸிகத்தானவர் என்பதோடு நாபிஃயைக் கொண்டு உமரால் சொல்லப்பட்ட ஹதீத் நம்பத் தகுந்த ஒன்றுதான் என்பதற்கு யஹ்யா பின் முயீன் அவர்கள் சொன்ன கருத்து மட்டுமே போதுமென்று இவ்விடத்தில் மீண்டும் சொன்னவர்களாக இந்த ஹதீத் ஆதாரத்திற்குரிய ஒன்றுதான் என்பதைக் கூறி முடிக்கிறோம்.

அத்துடன் மீண்டும் இங்கே நாம் முடிவாகச் சொல்லிக்கொள்ள விரும்புவது என்னவெனில் அப்துல் ஹாதி தமது அஸ்ஸாரிமுல் முன்கியில் அப்துல்லாஹ் பின் உமரை ழயீபாக்குவதிலேயே மும்முரமாக காணப்படுகிறார். அதேநேரம் இவர் இதே அப்துல்லாஹ் வின் அறிவிப்பை அத்தன்கீஹ் என்னும் நூலில் பதிவு செய்ததோடு மட்டுமின்றி அக்கருத்துக்கு மாற்றமான கருத்தைக் கொண்டோர் அப்துல்லாஹ்வை ழயீபானவர் எனச்சொன்ன போது மேற்கண்ட யஹ்யாவின் தீர்ப்பைச் சொல்லி அவர் நம்பிக்கைக்குரியவர் என்பதை 1-122ல் உறுதிப்படுத்துகிறார்.

மேலும் அப்துல்லாஹ் பின் உமரை ஸிகத்தானவர் என்பதை யஹ்யாவின் கருத்தைக் கொண்டு உறுதிப்படுத்திய அப்துல் ஹாதி அஸ்ஸாரிமுல் முன்கியில் யஹ்யாவின் கருத்தை மறைத்து விட்டார். ஏன் தெரியுமா? அப்துல் ஹாதி நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மீது ஈமான் கொண்ட முனபிக் (நய வஞ்சகர்) என்பதற்கு இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்? ஒரு விஷயத்தின் சிறப்புக்களை சொல்வதற்கு ழயீபான ஹதீதே போதுமென அனைத்து அறிஞர்களும் ஒட்டு மொத்தமாக சொல்லும் போது ஹஸனான ஹதீதைக் கொண்டு அமல் செய்ய முடியா தென்று சொல்ல இவருக்கு என்ன அதிகாரமிருக்கிறது?

யா அல்லாஹ்! இச்சிறு பணியை ஏற்று உனது நபியின் நேசத்தை பெற்ற நல்லடியார்களின் கூட்டத்தில் இரு உலகிலும் எங்களை சேர்த்து வைப்பாயாக.



## ஹதீதே ழயீபும், ஃபழாயிலே அஃமாலும்

நாம் இந்நூலில் எடுத்துக்கொண்ட விஷயத்தை ஆதாரப்படுத்து வதற்காககையாண்ட ஹதீதுகளை சிலர் ழயீபானதென்று சொல்லக் கூடும். அடுத்து அந்த ஹதீதுகளை அறிவித்தவர்களான அறிவிப்பா ளர்களை, அவர்களிடம் ழஃபு உள்ளது என்பதில் ஆட்சேபணை ஏதுமில்லை என்பதை ஏற்றுக் கொண்டால் இந்நிலையில் அவைகளை ஏற்க முடியுமா? அவைகளை ஆதாரமாகக் கொள்ளலாமா? கூடாதா? என்பதுதான் சர்ச்சைக்குரிய விஷயமாகும்.

இதில் ஒவ்வொரு ஹதீதையும், அதற்குரிய அறிவிப்பாளர்க ளையும் ஆராய்ந்து முழுக்க முழுக்க ஸஹீஹானவர்களைக் கொண்டு மட்டுமே அறிவிக்கப்பட்ட ஹதீதுகளைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லப்படுமாயின் இவ்விஷயத்தில் நாம் இஸ்லாத்திற்கு மாபெரும் துரோகமிழைத்தவர்களாகி விடுவோம். இப்படி ஆய்வு செய்து ஸஹீஹல்லாத ஏனைய படித்தரங்களைக் கொண்ட ஹதீதுகளை எல்லாம் நாம் ஒதுக்கத் தலைப்பட்டோமாயின் இதைவிட நீதமற்ற செயல் வேறொன்று இருக்காது. ஆகையால் சொல்லப்படும் கருத்தை யார் எப்படிக்கையாளுகின்றனர் என்பதை மட்டும் பாருங்கள்.

قال الامام عبد الرحمن بن مهدي رحمه الله تعالى إذا روينا عن النبيّ صلى الله عليه وآله وسلم فى الحلال والحرام شددنا فى الأسانيد وانقدنا فى الرجال. الخ.

"ஹலால் ஹராமுடைய விஷயத்தில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் சொன்னார்கள் என்று சொல்லப்பட்டால்

அது சம்பந்தமான ஹதீதை அறிவிக்கின்ற அறிவிப்பாளர்களது விஷயத்தில் நாங்கள் மிகவும் கடினமாக இருப்போம். இனி ஃபழாயில், தவாபு, இகாபு போன்ற விஷயங்களைக் குறித்த ஹதீதுகள் சொல்லப்படும் போது அந்த ஹதீதுகளை அறிவிக்கும் அறிவிப்பாளர்களது விஷயத்தில் காணப்படும் மன்னிக்கத்தக்க விஷயங்களை மன்னித்து அவைகளை பொருட்படுத்தாது விட்டு விடுவோம் என்று கூறுகிறார்கள் அப்துர் ரஹ்மான் பின் மஹ்தி ரஹிமஹுல்லாஹ்'' அவர்கள்.

لاتأخذوا العلم فى الحلال والحرام إلا من المشهورين بالعلم الذين يعرفون الزيادة والنقصان.

''ஹலால் ஹராம் பற்றிய ஹதீதைச் சொல்லப்பட்டால் சகல வகையிலும் பிரபலமானவர்களின் அறிவிப்பையே எடுங்கள். மற்றவைகளில் இது அவசியமல்ல'' என்று கூறுகிறார்கள் இமாம் சுப்யானுஸ் ஸௌரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.

إذا روينا عن الرسول صلى الله عليه وآله وسلم فى الحلال والحرام والسنن والأحكام تشددنا فى الأسانيد.

''ஹலால் ஹராம் ஸுன்னத் அஹ்காம் போன்ற விஷயங்களை ஆதாரப்படுத்தும் வகையில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சொன்னார்களென்று சொல்லப்பட்டால் இஸ்னா துடைய விஷயத்தில் நாங்கள் மிகவும் கடுமையாக இருப்போம். இனி அமல்களைக் குறித்த ஹதீதுகளைக் கொண்டு சட்டமேதும் உருவாக்கப்படாமல் அல்லது இருக்கும் சட்டங்களை இல்லாமலாக்காத ஒன்றாக இருந்தால் கடுமையைக் கையாளாமல் விட்டு விடுவோம்''என்கிறார்கள் அஹ்மத் பின் ஹன்பல் ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.

إذا روينا فى الحلال والحرام شددنا وإذا روينا فى الفضائل ونحوها تساهلنا.

''ஹலால் ஹராமுடைய ஹதீதுகளை அறிவிக்கப்படுமாயின் மிகவும் கடுமையாக இருப்போம். ஃபழாயில் சம்பந்தமான ஹதீதுகளாக இருந்தால் அவற்றில் கடுமையைக் கையாள மாட்டோமென்று'' கூறுகிறார்கள் அப்துல்லாஹ் பின் முபாரக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.



الخبر إذا ورد لم يحرم حلاله ولم يحلل حراما ولم يوجب حكما وكان فى ترغيب أوترخيص وجب الإغماض عنه والتساهل فى روايته.

''ஹலாலை ஹராமாக்கக் கூடியதாகவோ அல்லது ஹராமை ஹலாலாக்கக் கூடியதாகவோ அல்லது ஒரு சட்டத்தை ஏற்படுத்தக் கூடியதாகவோ இல்லாதிருந்தால், இவ்வாறே தர்கீபு, தர்ஹீபு, தர்கீஸு போன்ற விஷயங்களாக இருந்தால் அத்தகைய ஹதீதுகளுடைய அறிவிப்பாளர்களது விஷயத்தில் கடுமையாக இருக்க வேண்டியதில்லை'' என்கிறார்கள் அபூ ஸகரிய்யா அன்பாரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.

لاتسمعوا من بقية ماكان فى سنة واسمعوا منه ماكان فى ثواب وغيره.

''புகிய்யா என்னும் அறிவிப்பாளர் சட்டங்களைக் குறித்துச் சொல்வாராயின் அதை கேட்காதீர்கள். அதேநேரம் தவாபு சம்பந்தமான ஹதீதுகளை சொன்னால் கேட்டுக் கொள்ளுங்கள்'' என்கிறார்கள் இப்னு உயைனா ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.

أهل الحديث بجماعتهم يتساهلون فى الفضائل فيرونها عن كل وإنما يتشددون فى أحاديث الأحكام.

''ஃபழாயிலுடைய ஹதீதுகளை எல்லோரிடமிருந்தும் எடுத்துக் கொள்வர். ஃபழாயிலுடைய விஷயத்தில் இலகுவையே அனைத்து முஹத்திதீன்களும் கையாண்டுள்ளனர். அதன்றி அஹ்காம் - சட்ட திட்டங்கள் பற்றியதாக இருக்குமாயின் மிகக் கடினமாக இருப்பர்'' என்கிறார்கள் இப்னு அப்துல் பர்ரு ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.

وقد إتفق الحفاظ (ولفظ الأربعين)قد إتفق العلماء على جواز العمل بالحديث الضعيف فى فضائل الأعمال.

''ழயீபான ஹதீதைக்கொண்டு ஃபழாயிலுக்காக ஆதாரம் காட்டி அமல் செய்ய முடியுமென்பது அறிஞர்களின் ஒருங்கிணைந்த கருத்தாகும்'' என்கிறார்கள் இமாம் நவவி, இப்னு ஹஜர், முல்லா அலிய்யுல் காரி போன்றோர்.

இன்னேரிடத்தில் இமாம் நவவி அவர்களிடம், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சொன்னதாகச் சொல்லப்பட்ட ஹதீத் ஸஹீஹ் என்னும் தரத்தைச் சார்ந்ததாக இல்லாதிருக்குமாயின் அதனை அறிவிக்கலாமா? அதை ஆதாரமாகக் கொள்ளலாமா என்று கேட்கப்பட்ட போது, அதற்கவர்கள்; முடியும். இருப்பினும் அதனுடைய வகையை விபரிக்க வேண்டும். மௌழூஆக இருக்கக் கூடாது என்றார்கள்.

ஆம். அறிவிக்கப்படும் ஹதீத் ஒருங்கிணைந்த தீர்ப்பின் பிரகாரம் மௌழூஆக இல்லாதிருப்பின், ஃபழாயிலுடைய விஷயத்தில் ஒரு அமலை செய்வதற்கு ஆசையூட்டவும், எச்சரிக்கை செய்யவும் ஸஹீஹ் என்னும் தரத்தைச் சாராத ஏனைய தரத்தைச் சார்ந்த ஹதீதுகளைக் கொண்டு செயல்பட முடியும்.

பார்க்க: ஃபத்ஹுல் முகீஸ், ஜவாஹிருல் உஸூல், அல் முக்த ஸர் ஃபீ இல்மில் ஹதீதி, அல் கௌலுல் பதீஃ, தத்ரீபுர் ராவி, அந் நுகத், தலாயிலுந் நுபுவ்வத், அல் மஜ்மூஃ, ஃபதாவா இமாம் நவவி, தக்ரீபுர் ராவி.



## ஸியாரத்தும் பெரியார் [இமாம்] களும்

இதுவரை நாம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களை தரிசிப்பதற்காக பயணம் செய்யலாம். அப்பயணமானது நல்லதொரு நற்செயலாகும் என்பதை நிரூபிக்க ஒரேயொரு ஹதீதை மட்டும் எடுத்துக்காட்டி நயவஞ்சகர்களின் அடாவடித்தனத்தின் விளைவாக அச்சத்திய வாக்கை உண்மையானது தான் என்றும் அதைக்கொண்டு கண்டிப்பாக அமல்செய்ய முடியுமென்பதை விரிவாக விளக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டதால் அதை நிரூபிப்பதற்காகவே இத்தனை நேரத்தை எடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அதற்காக நாம் இந்நயவஞ்சகர்களுக்கு நன்றியை கூறிக்கொள்கிறோம். ஏன் தெரியுமா?

முன்பெல்லாம் ஹதீது என்று சொல்லப்பட்டால் அறவே சந்தேகத்திற்கிடமின்றி அதற்குரிய நூலையோ அல்லது வேறு எதையுமே பார்க்காது அதற்கொப்ப செயல்பட்ட நாம் இப்போது அதற்குரிய பல நூல்களையும் பார்த்தேயாக வேண்டும் என்னும் கட்டாயத்திற்கு உட்படுத்தப்பட்டுப் போனதால் அதிலிருந்து பல எதிர்பாராத விஷயங்களையெல்லாம் தெரிந்துகொள்ள முடிந்ததல்லவா. அதற்காகத்தான் நன்றி சொன்னோம்.

இனி இந்தத் தலைப்பில் நமது உயிருக்கும் மேலான உயிர் நாடியான ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தரிசிப்பதற்காக பயணம் செய்வது பற்றி நமது முன்னோர்கள் என்ன கூறுகின்றனர் என்பதைப் பாருங்கள்.

குர்ஆனும் ஸுன்னவும் தான் நமது முன்னோடிகளேயன்றி

வேறு எதுவுமேயில்லை என்றும், இவையல்லாத இன்னொன்றை எங்களின் முன்னோடிகளாக நாங்கள் ஏற்க மாட்டோம் என்றும் வீறுப்பு பேசும் சிலரையும் நமக்குத் தெரியும். இதில் ஒரு ஆச்சரியம் என்னவென்றால் நாங்கள் குர்ஆனையும் ஸுன்னாவையும் தான் பின்பற்றுவோமேயன்றி மூன்றாவதான ஒன்றையல்ல என்பதாக பிரச்சாரம் செய்பவர்கள் தங்களின் கருத்துக்களுக்கு இப்னு தைமிய்யா, இப்னு அப்துல்ஹாதி, பஷீர் ஸஹ்சுவானி போன்றோரின் கருத்துக்களைத் தான் முன்வைக்கின்றனர். ஆக இவர்களது முன்னோடிகளே திசைமாறிய வழிகெட்டவர்களாக இருக்கும்போது இவர்களால் பிறருடைய ஹக்கை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்?

ஆனால் நம்முடைய முன்னோடிகள் இவர்களுடைய முன்னோடிகளாலும் பின்பற்றப்பட்டவர்கள் தான் என்பதில் நமக்குப் பெருமை தான். ஆம். இப்னு தைமிய்யா, அப்துல் ஹாதி போன்றவர்களெல்லாம் தம்மைத்தாமே ஹன்பலி மத்ஹபைச் சார்ந்தவர்களென சொல்லிக் கொண்டவர்களாகும். இப்போது நமது முன்னோர்களின் கருத்துக்களை அவர்கள் என்ன சொல்கிறார்களென்றுபாருங்கள்.

إذا انصرف الحجاج والمعتمرون من مكة فليتوجهوا إلى مدينة رسول الله صلى الله عليه وآله وسلم فإنها من أهم القربات وأنجح المساعى.

**"புனித ஹஜ்ஜுக்காக செல்பவர்களாயினும் அல்லது உம்ராவை நிறைவேற்றச் சென்றிருந்தாலும் புனித மக்காவில் அதற்குரிய கடமைகளை பூர்த்தி செய்தபின் பாராளும் பயகம்பர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரௌழாவை தரிசிக்கச் செல்லுங்கள். நிச்சயமாக அது அல்லாஹ்வின் சமீபத்துவத்தை பெற்றுத்தரும் உன்னதமான நற்காரியங்களில் ஒன்றாகும்"** என்கிறார்கள் இமாம் நவவி ரஹிமஹுல்லாஹ் அவர்கள். நூல் : அல் ஈழாஹ் ஃபீ மனாஸிகில் ஹஜ்ஜி, பக்கம்-488.

இப்னு தைமிய்யாவை விட பல வருடங்களுக்கு முன்னால் வாழ்ந்த இமாம் நவவி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் நபியவர்களை ஸியாரத்துச் செய்ய வேண்டும். அதோர் உன்னதமான நற்செயலாகும் என மக்காவுக்கு செல்லும் அனைவரையும் மதீனாவுக்கும் செல்லுமாறு தூண்டுகிறார்கள். அதற்கு இமாமவர்கள் தாரகுத்னியில் பதிவு செய்யப்பட்டுள்ள மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்படும் ஹதீதைத்தான் ஆதாரமாகவும் காட்டுகிறார்கள். இன்னும்



இவர்கள் ஷாபி மத்ஹபைச் சார்ந்தவராகுமாதலால் இவரது காலத்தைசார்ந்தோர் மட்டுமல்ல. அதற்கு முன்னால் வாழ்ந்தோரும் கூட ஸியாரத்துக்காக பயணம் செய்வதை ஆகுமான ஒன்றெனக் கருதி செயல்பட்டிருக்கிறார்கள் என்பதும் இதைக்கொண்டு தெரிய வருகிறது.

ஆனால்இப்னுதைமிய்யா ஸியாரத்துக்காக பயணம் செய்வதை பாவமான காரியமென்று சொல்வதுடன், அதைக் குறிக்கும் ஹதீதுகள் அனைத்தும் பொய்யானவை என்றும் அதனால் தான் முன்னோர்களில்கூட யாருமே ஸியாரத்துச்செய்யவில்லை என்றும் கூறுகிறார். இது அப்பட்டமான பொய்யாகும். தன்னைவிட பல ஆண்டுகளுக்கு முன்னால் வாழ்ந்த உலகம் போற்றும் அறிஞர்களில் ஒருவர் ஸியாரத்துச் செய்ததோடு மற்றவர்களையும் செய்யுமாறு கட்டளையிட்ட பின்னரும் முன்னோர்களில் யாருமே இப்படிச் செய்யவில்லையென எப்படிச் சொன்னார்?

மேலும் அல்லாமா இமாம் நவவி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் நூலுக்கு விரிவுரை தந்த நூலாசிரியர் அல்லாமா இப்னு ஹஜர் ஹைதமி அவர்கள்,...

الحديث يشمل زيارة صلى الله عليه وآله وسلم حيا وميتا ويشمل الذكر والأنثى الآتى من قرب أوبعد.

**"எனது கப்ரை தரிசிப்போருக்கு எனது ஷபாஅத்து நிச்சயமாகி விட்டதென்னும் ஹதீத் நபியவர்களது ஹயாத்தின் போது மட்டுமல்ல. அதற்குப் பின்பும் ஆகுமானதாகும். இதில் ஆண் பெண் ஆகிய இரு சாராரும் அடங்குவர். இன்னும் வருகை தருபவர் சமீபத்திலிருந்தாலும் சரி. தூரத்திலிருந்தாலும் சரியே. பின்னும் ஸியாரத்துச் செய்வதற்கென பிரயாணம் செய்வதும் சிறப்பான தொரு காரியமே"** என்பதையும் இந்த ஹதீத் கூறுகிறதென்று சொல்கிறார்கள். நூல் : ஷரஹுல் ஈழாஹ், பக்கம்-489.

இவ்வாறு சொல்லிவிட்டு தொடர்ந்து இமாம் இப்னு ஹஜர் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதைப் பாருங்கள்,...

ولا يغتر بانكار ابن تيمية لسن زيارته صلى الله عليه وآله وسلم فإنه عبد أضله الله.

***"நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபை தரிசிப்பதற்காக பிரயாணம் செய்வதை பாவமான காரியம் என இப்னு தைமிய்யா சொல்வதைப் பார்த்து ஏமாந்து விடாதே. திடமாக அல்லாஹ்வால் வழிகெடுக்கப்பட்ட அடியார்களில் அவர் ஒரு அடியாராகும்"*** என்றும் கூறுகின்றனர்.

நூல் : ஷரஹுல் ஈழாஹ், பக்கம்-489.

மேலும் ஸியாரத்தைக் குறித்து விரிவாக எழுதப்பட்ட நூல்களில் இமாம் சுப்கியுடைய ஷிபாவுஸ் ஸகாம் என்னும் நூல் மிகவும் பிரபலமானதாகும். இந்நூலையும் இதில் குறிக்கப்பட்டுள்ள அனைத்து ஹதீதுகளையும் பொய்யென்று மறுப்புரை எழுதினர் இப்னு தைமிய்யாவின் சீடர்களில் பிரதமச் சீடரான இப்னு அப்துல் ஹாதி. இவரைப் பற்றி முஹத்திஸ் அஸ்ஸெய்யித் அப்துல் அஸீஸ் அல் குமாரி அவர்கள்,....

وإبن عبد الهادى سلك فى ذلك الكتاب مسلك الإفراط الخارج عن قوائد أهل الحديث فيجب الحذر منه.

***"இமாம் சுப்கியுடைய நூலுக்கு மறுப்பு நூல் எழுதிய அப்துல் ஹாதி தமது நூலில் ஹதீதுக் கலைக்குரிய சட்டங்களை எல்லாம் தூக்கியெறிந்து விட்டு தேவையின்றி வரம்பு கடந்து பேசியுள்ளார். இவரது கருத்துக்களிலிருந்து விலகிக் கொள்வது அவசியமாகும்"*** என்று சொன்ன வார்த்தையை அஸ்ஸெய்யித் முஹம்மத் பின் அலவிய்யுல் மாலிகி அவர்கள் ஸீரத்துன் நபவிய்யா என்னும் நூலின் 122வது பக்கத்தில் குறிப்பிட்டுள்ளார்கள்.

இன்னும் நாம் இங்கே இமாம் ஷாபியுடைய கருத்தை எடுத்துக் காட்டுவதற்காக அல்லாமா இமாம் நவவியுடைய நூலிலிருந்து ஒரு கருத்தை எடுத்துக் காட்டினோம். இனி இதே இமாமுடைய இதே நூலிலுள்ள ஒரு கருத்து வஹ்ஹாபிகளின் கருத்துக்கு தோதானதாகக் காணப்பட்டதால் அதை ஆதாரமாக வைத்துக்கொண்டு உங்களுடைய இமாமே கூடாதெனச் சொல்லும் ஒன்றை நீங்கள் எப்படிச் செய்ய முடியுமென்று கேட்கிறார் இந்திய தேசத்திலுள்ள இவர்களின் முக்கியமான பிரமுகர்களில் ஒருவரான ஸபிய்யுர்ரஹ்மான் முபாரக்பூரி என்பவர். அக்கருத்தானது,...

ஆல் அஷ்ஷெய்கு குடும்பத்தில் பிறந்தவரான முஹம்மத் பின் இப்ராஹீம் பின் அப்துல் லதீப் என்பவர் தர்காக்கள் கட்டப்படுவதையும் கப்ருகளை முத்தமிடுவதையும் மறுத்து அரபு மொழியில்



எழுதிய நூலை ஸபிய்யுர்ரஹ்மான் உர்து மொழியில் மொழியாக்கம் செய்ய அது தாருஸ்ஸலாம் பதிப்பகத்தில் அச்சாகியுள்ளது.

அந்நூலின் 31ம் பக்கத்தில் இமாம் நவவியின் ஒரு கருத்தை எடுத்துக் காட்டுகிறார். அது இவர்களது கொள்கைக்கு தோதானதாகக் காணப்பட்டது தான் காரணமாகும். அதாவது,...

لايجوز أن يطاف بقبر النبيّ صلى الله عليه وآله وسلم ويكره إلصاق البطن والظهربجدارالقبرقاله الحليمى وغيره.ويكره مسحه باليد وتقبيله بل الأدب أن يعبد منه لوحضرفى حياته صلى الله عليه وآله وسلم.

***"அண்ணலெம் பெருமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாரக்கான ரௌழாவை தரிசிக்கச் செல்வோர் அதனை தவாபு செய்யலாகாது. இன்னும் ரௌழாவின் சுவற்றோடு தமது உடலை ஒட்ட வைத்துக் கொள்வது வெறுக்கத்தக்க செயலாகும் என இமாம் ஹலீமியும் வேறு பலரும் ரௌழாவை கரங்களால் தொட்டு முகத்தில் பூசிக் கொள்வதையும் சுவர்களை முத்தமிடுவதையும் வெறுப்புக்குரிய செயல்"*** என்றும் கூறுகின்றனர். நூல் : அல் ஈழாஹ், பக்கம்-501.

கப்ரை முத்தமிடுவதை கப்ருடைய வணக்கமெனக் கருதி அதை ஷிர்க்கென்று ஓலமிடும் வஹ்ஹாபிகள், பார்த்தீர்களா? உங்களுடைய இமாம்களே கப்ருகளை முத்தமிடுவதை வெறுக்கத்தக்க செயலென்று சொல்லும்போது நீங்கள் அதை எப்படி ஆகுமாக்கிக் கொள்கிறீர்களென்று கேட்கின்றனர்.

எங்களுடைய இமாம்கள் அதை வெறுப்புக்குரிய செயலென்று தான் கூறுகின்றார்களேயன்றி உங்களைப்போல் ஷிர்க்கென்று சொல்லவில்லையே! இனி ஷிர்க்கான காரியம் என்பதால் தான் இமாமவர்கள் அதைத் தடுத்தார்களென்று வைத்துக் கொண்டால் இமாமவர்கள் பாவமான காரியங்கள் ஏதும் நிகழ்ந்து விடக் கூடாதென்பதில் மிகவும் கவனமாக இருந்துள்ளார்கள் என்பதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள் அப்படித்தானே. அப்படியானால் அந்த இமாமுக்கு ஸியாரத்தின் எண்ணத்தில் பிரயாணம் செய்வது பாவமான காரியம் என்பது கூடவா தெரியவில்லை? அத்துடன் ஸியாரத்தை குறித்து பதிவாகியுள்ள ஹதீதுகளனைத்தும் பொய்யா

***திரு வாக்கையும் தமது கூற்றுக்கு சான்றாக வைக்கின்றனர்.*** நூல் : *அல் முக்னீ, பாகம்-3, பக்கம்-588.*

இனி இப்னு தைமிய்யாவின் குடும்பம் முழுவதுமே ஹன்பலி மத்ஹபை பின்பற்றுவோராகத்தான் இருந்தனர். ஆம். தைமிய்யாவின் தந்தையின் தந்தையின் தந்தையென அனைவருமே ஹன்பலி மத்ஹபின்படியே வாழ்ந்ததோடு, அக்காலத்திய அறிஞர்களாகவும் மின்னினர். நல்லோரின் குடும்பத்தில் பிறந்த இவர் தமது தந்தையின் மறைவுக்குப்பின் ஷைத்தானின் வலையில் போய் சிக்கிக் கொண்டார். விளைவு! இவர் தமது வாதத்திற்காக எடுத்த முதல் விஷயமே ஸியாரத்துத் தான்.

இதுபற்றி அல்லாமா முல்லா அலிய்யுல் காரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் சொல்லும்போது, 'ஸியாரத்திற்காக பயணம் செய்வதை ஹராமென்று இப்னு தைமிய்யா சொன்னதைப் போன்று ஹன்பலிகளில் வேறுயாருமே சொன்னதில்லை என்பதோடு இவ்விஷயத்தில் அவர் மிகவும் வரம்பு கடந்து விட்டார்' என்றும் கூறுகின்றனர்.

எவ்வாறு இப்னு தைமிய்யா தமது தந்தை மற்றும் பாட்டன் முப்பாட்டனின் கருத்துக்கும் விளக்கத்துக்கும் மாறுசெய்து இஸ்லாத்தில் புதியதோர் விளக்கத்தை நுழைத்ததால் சாபத்திற்குள்ளாக்கப்பட்டாரோ அவ்வாறு தான் அப்துல் வஹ்ஹாப் நஜ்தியுமாகும் என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

ஆம். தந்தை செய்ததை, தந்தையின் தந்தையென முன்னோர்கள் செய்ததை பொய்யாக்கும் இவர்கள் முன்னோர்களில் யாருமே செய்யவில்லை என்று சொல்வதைப் பார்த்தால் இவர்களது முன்னோர்கள் யார் என்பதுதான் நமக்குத் தெரியவில்லை.

இன்னும் நாம் யாரையெல்லாம் அறிஞர்களென்று தெரிந்து வைத்துள்ளோமோ அவர்களில் நான்கு மத்ஹபுகளைச் சார்ந்த முக்கியமான சிலரது கூற்றைத்தான் இங்கே எடுத்துக் காட்டினோம். இவர்களையன்றி மற்றவர்களும் கூட அன்றிலிருந்து இன்றுவரை ஸியாரத்துச் செய்வது கூடுமென்று பேசும் போதெல்லாம் நாம் இதுவரை ஆதாரமாக எடுத்துக் காட்டிய தாரகுத்னி என்னும் நூலில் பதிவாகியுள்ள மூஸா பின் ஹிலாலால் அறிவிக்கப்படும் ஹதீதைத் தான் ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

இந்த ஹதீதைத்தான் இப்னு தைமிய்யாவும் அப்துல் ஹாதியும் பொய்யானதென்றும் இட்டுக்கட்டப்பட்டதென்றும் நீட்டி முழக்கு



வதோடு ஸியாரத்திற்காக பயணம் செய்வதை பாவமான காரியமென்றும் கூறுகின்றனர். இவர்களின் கூற்றுப்படி பயணம் செய்த எல்லா பெரியோர்களும் பாவிகளாகும். இன்னும் இவர்களுக்கு மட்டும்தான் அந்த மாபெரும் உண்மை தெரிந்திருக்கிறது. ஆகையால் இவர்களுக்கு முன்னாலிருந்த அத்தனை பேருமே அந்தப் பாவமான காரியத்தைத்தான் செய்தார்கள் எனில் அதே பாவத்தை நாமும் செய்வதில் நமக்குப் பெருமைதான்.

இனி இவ்விஷயத்தில் இறுதியாக நாம் பார்க்கப் போவது மிக முக்கிய ஒன்றாகும். அதாவது, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தரிசிப்பதற்காக செல்லும் பிரயாணமானது மார்க்கத்தில் முக்கியமானதொரு அமலாக இருப்பதால் அதை விளக்கித் தரும் வகையில் ஒரு ஹதீத் கூட புகாரி, முஸ்லிம் போன்ற நூல்களில் ஏன் பதிவு செய்யப்படவில்லை என்பதே. ஒருவேளை அந்நூல்களில் பதிவு செய்யப்பட்டிருந்தால் இத்தனை பிரச்னைகளுக்கும் வழி ஏற்பட்டிருக்காதல்லவா என்று அங்கலாய்த்துக் கொள்வோருக்கு அடுத்து வரும் விஷயங்கள் தகுந்த பதிலாக அமையுமென்று நினைக்கிறோம்.

## ஸியாரத்தும் திருமறையும்

ولوأنهم إذ ظلموا أنفسهم جاؤوك فاستغفروا الله وإستغفر لهم
الرسول لوجدوا الله توابا رحيما.

***"யார் தமது ஆன்மாவுக்கு அநீதம் இழைத்திட்டாரோ அவர்கள் நபியே நாயகமே உமது திருச்சன்னிதானத்திற்கு ஆஜராக வேண்டும். அதன்பின் (உமது பொருட்டால்) அவர்கள் அல்லாஹ்விடம் பாவமன்னிப்புக் கோர வேண்டும். இன்னும் அவர்களது பாவங்கள் போக்கப்படுவதற்கு ரஸூலாகிய நீரும் அவர்களுக்காக சிபாரிசு செய்தால் அல்லாஹ்வை அவர்கள் மிகவும் மன்னிப்போனாகவும் அதிகம் அருள் புரிபவனாகவும் பெற்றுக் கொள்வார்கள்."*** சூரா அந்நிஸாஉ, வசனம்-64.

இந்த வசனம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை எல்லா காலங்களிலும் தரிசிப்பதற்காக பயணம் செய்யலாம் என்பதற்கு முஃமின்களால் எடுத்துக் காட்டப்படும் அழுத்தமானதொரு ஆதாரமாகும்.

ஸியாரத்திற்காக பயணம் செய்வது பாவமான காரியமென்று ஓலமிடும் உன்மத்தர்கள் இவ்வசனம் நபியவர்கள் வாழ்ந்த காலத்தை மட்டுமே குறிக்குமேயன்றி எல்லா காலத்திற்கும் இது பொருந்தாதென்று ஆயாசப்படுகின்றனர்.

ஆனால் இவ்வசனம் பாவிகளது விமோசனத்திற்காக இறக்கப்பட்ட ஒரு வசனமாகும். ஆதலால் இந்நயவஞ்சகர்களின் முகத்தை



மூடியுள்ள திரை அகற்றப்பட வேண்டுமாயின் நபியவர்களின் சன்னிதானத்திற்கு சென்று அவர்களது பொருட்டால் பாவமன்னிப்புத் தேட வேண்டும். இப்படித் தேடிவிட்டால் அவர்கள் மன்னிக்கப்பட்டு விடுவார்களா எனில் அறவே இல்லையென்றுதான் சொல்லுவோம். ஏன் தெரியுமா? நபியவர்களும் இவர்களுக்காக சிபாரிசு செய்ய வேண்டும். அப்படிச் செய்தால்தான் அவர்கள் மன்னிக்கப்படுவார்களென அல்லாஹ் கூறுகிறான்.

நினைவில் கொள்ளுங்கள். ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களது காலத்தைச் சேர்ந்த முனாபிக்கீன்கள் தமது பாவங்களுக்குரிய மன்னிப்பை தேடி நபியவர்களின் சன்னிதானத்தில் ஆஜராகி பரிகாரம் தேடினர். இவ்வாறே இன்றுள்ள முனாபிக்கீன்களும் நபியவர்களை தேடிச்சென்றே பரிகாரம் தேட வேண்டும். ஆனால் இவர்கள் நபியவர்களிடம் செல்ல வேண்டியதில்லை எனக் கூறுவதோடு அதுபற்றிய ஹதீதுகள் அனைத்தையும் பொய்யானதென்றும் வாதிக்கின்றனர். இவர்களை விட கேடுகெட்டவர் வேறு யாராக இருக்க முடியும்?

மூன்று காலத்தைச் சேர்ந்த மூதேவிகளும் முத்துநபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் வருகைதந்து பாவமன்னிப்புக் கோருமாறு அல்லாஹ் ஆணையிடுகிறான். ஆனால் இவர்கள் நாங்கள் நபியவர்களிடம் போகமாட்டோம் என்கின்றனர். அத்துடன் இதையொரு பாவமான காரியமென்றும் பிதற்றுகின்றனர்.

எனவே மேற்கண்ட திருமறை வசனத்தை நபியவர்களை சந்திப்பதற்காக பயணம் செய்யலாம் என்பதற்குரிய ஆதாரமாகச் சொல்லப்படும் போது சிலர் அதை தாங்கள் ஏன் ஏற்றுக்கொள்ள முடியாதென்று கூறுகின்றனர் என்னும் கேள்விக்கும், அதற்காக அவர்களால் எடுத்துக் காட்டப்படும் கேள்விகளையும் அதற்குரிய பதில்களையும் நாதாக்களின் நல்லாசியால் இப்போது பார்ப்போம்.

### காரணம் ஒன்று :

எந்த வசனம் உங்களால் எடுத்துக் காட்டப்படுகிறதோ அந்த வசனத்தில், "இஸ் ழலமூ" என்னும் வார்த்தை உபயோகப்படுத்தப்படுகிறதேயன்றி "இஸா ழலமூ" என்று சொல்லப்படவில்லையாதலால் இதில் 'இஸ்' என்பது கடந்த காலத்தைக் குறிக்குமேயன்றி நிகழ்காலத்தையோ, எதிர்காலத்தையோ குறிக்காது.

ஆகையால் இவ்வசனம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி

வஸல்லமவர்கள் வாழ்ந்த காலத்தில் நடந்ததைக் குறித்து பேசுகிற தேயன்றி நிகழ்காலத்தை குறிக்காது. எனவே இவ்வசனத்தை ஆதாரமாகக் கொண்டு நபியவர்கள் நமக்காக சிபாரிசு செய்வார்கள் எனக்கருதி அவர்களிடம் சென்று பரிகாரம் தேடுவது ஊசித் துவாரத்திற்குள் ஒட்டகத்தை நுழைக்க முனைந்த கதையாகி விடும்.

மேலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களு டைய காலத்தில் வாழ்ந்த தமது ஆன்மாக்களுக்கு அநீதம் இழைத் தோர் அல்லாஹ்விடம் மட்டும் மன்னிப்புத் தேடுவதால் அவர்க ளுக்கு விமோசனம் கிடைக்காது. மாறாக அவர்கள் நபியவர்களின் சன்னிதானத்திற்கும் ஆஜராக வேண்டும். அதன்பின் அல்லாஹ் விடம் அந்த நபியுடைய பொருட்டால் பாவ மன்னிப்புத் தேட வேண்டும். அதுபோதுமா என்றால் இல்லை. நபியவர்களும் அவர்க ளுக்காக சிபாரிசு செய்ய வேண்டும். அப்போது தான் அல்லாஹ் அவர்களை மன்னிப்பான் என்று சொல்கிறீர்களே! அப்போது அல்லாஹ் அவர்களை ஏன் மன்னிக்கவில்லை? அது மட்டுமல்ல. நபியவர்களது கால்த்திய அநியாயக்காரர்களை நபியவர்களிடம் சென்று பாவமன்னிப்புத் தேடும்படியாக உத்திரவிட்ட அல்லாஹ், நபியவர்களின் மறைவுக்குப்பின் யாரிடம் சென்று பாவமன் னிப்புத் தேடும்படியாக உத்திரவிட்டான்?

மேற்கண்ட வசனத்தில் 'இஸ் ழலமூ' என்னும் பதம் பேசப்படு வதால் இது கடந்த காலத்தை மட்டும்தான் குறித்துப் பேசுகிற தென்று முஃமின்களை குறைகூறும் நீங்கள் அடுத்து வரும் வசனங் களுக்கெல்லாம் என்ன சமாதானம் சொல்லப் போகிறீர்களென்று பார்ப்போம்.

ولو ترى إذ فزعوا.

*"இன்னும் (காபிர்கள் மறுமையில்) பயத்தால் நடுங்குவதை நபியே நீர் பார்ப்பீராயின்"* சூரா அஸ்ஸபஃ, வசனம்-51.

ولو ترى إذ وقفوا على النار.

*"நரக நெருப்பின் முன் அவர்கள் நிறுத்தப்படும் போது (நபியே) நீர் அவர்களைப் பார்ப்பீராயின்"* சூரா அன்ஆம், வசனம்-27.

ولو ترى إذ وقفوا على ربهم.

*"இவர்கள் உயிர்ப்பிக்கப்பட்டு இவர்களுடைய இறைவன் முன் நிறுத்தப்படும் போது இவர்களை நீர் பார்ப்பீராயின்"* சூரா அன்ஆம், வசனம்-30.



ولو ترى إذ الظالمون فى غمرات الموت.

*"அவர்கள் மரண வேதனையிலிருக்கும் போது நீர் அவர்களை பார்ப்பீராயின்"* சூரா அன்ஆம், வசனம்-93.

ولو ترى إذ المجرمون ناكسوا رؤوسهم.

*"மேலும் இக்குற்றவாளிகள் தமதிறைவன் முன் தலை குனிந்த வர்களாக இருப்பதை நபியே நீர் பார்ப்பீராயின்"* சூரா அஸ் ஸஜ்தா, வசனம்-12.

மேற்கண்ட ஐந்து வசனங்களும் நாளை மறுமையில் நிகழப் போகும் சம்பவத்தை விபரிக்கின்றது என்றாலும் இவ்வசனங்களில் பேசப்படும் 'இஸ் பஸஹூ', 'இஸ் உகிபூ', 'இஸ் அழ்ழாலிமூன', 'இஸ் அல்முஜ்ரிமூன' என்னும் வாக்கியங்கள் கடந்தகால நிகழ்ச்சி களை குறித்துத்தான் பேசுகிறது எனில் உங்களது கூற்றின் பிரகாரம் இங்கெல்லாம் 'இஸா பஸஹூ', 'இஸா உகிபூ' என்றல்லவா பேசியி ருக்க வேண்டும்?

இதன் மூலம் 'இஸ் ழலமூ' என்னும் வார்த்தை கடந்த காலத்தைக் குறித்துத்தான் பேசுகிறது என்னும் உங்களின் கருத்து குழி தோண்டிப் புதைக்கப்படுவதை இதைப் பார்த்த பிறகாவது உணர்ந்து கொள்ளுங்கள்.

எனவே இவ்வசனமானது "மூன்று காலத்தைச் சேர்ந்த தமது ஆன்மாவுக்கு அநீதமிழைத்தவர்கள் அனைவரும் நபியவர்களின் சன்னிதானத்திற்கு வந்தேயாக வேண்டுமென்பதைத் தான் துல்லி யமாக விளக்கிக் காட்டுகிறது" என்பதை புரிந்து கொள்ளலாம்.

ஆகையால் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்க ளிடம் செல்வதற்கு இதைவிட ஆணித்தரமான வேறு ஆதாரம் எதுவுமில்லை என்பதால் இதை விளக்கிக்காட்ட இன்னொரு ஆதா ரமும் தேவையற்ற ஒன்றென்பதால் ஸியாரத்தின் மகிமையைப் பற்றி சொல்வதற்கு மீண்டும் தாரகுத்னியிலுள்ள நபிமொழிகளை உங்களின் பார்வைக்கு தருகிறோம்.

இனி ஒரு விஷயம் குர்ஆனைக் கொண்டு ஆதாரப்படுத்தப்பட்டு விட்டால் அதற்கு இன்னொரு ஆதாரத்தை தேட வேண்டுமென்ற அவசியமில்லை. இந்நிலையில் குர்ஆனின் கூற்று உங்களின் கொள் கைக்கு மாற்றமானதாக இருப்பதால் நீங்கள் ஏதோ நல்லவர்களைப் போல ஸஹீஹான ஹதீதைத் தேடி அலைகிறீர்கள்.

ஆயினும் மேற்கண்ட வசனம் எல்லா காலத்திற்கும் பொருந்தக் கூடியதுதான் என்று சொன்னபோது, இல்லையில்லை. அதில் 'இஸ் மூலமூ' என்னும் வாக்கியம் பேசப்படுவதால் இது கடந்த காலத்தை மட்டுமே குறிக்குமென்னும் உமது விதண்டாவாதத்தை ஒன்றுக்கு ஐந்து வசனங்களை ஆதாரமாகக் காட்டி இப்பதம் எதிர்காலத் தையும் குறிக்குமென்று சொன்னதை சந்தோஷமாக ஏற்றுக் கொள்வதற்குப் பதிலாக தற்போது நபியவர்கள் நமது பாவத்திற்காக சிபாரிசுச் செய்ய முடியாதென்பதற்கு இன்னொரு நபிமொழியைக் கொண்டு வருகிறார்.

## காரணம் இரண்டு :

إذا مات إنقطع عمله إلا من ثلاث.

***"மரணமடைந்த ஒருவர் எந்தச் செயலையும் செய்ய முடியாத வாறு செயலிழக்கச் செய்யப்படுகிறார் என்பதாக பூமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்"*** என்பது தான் அந்நபி மொழியாகும்.

இந்த நபிமொழியை ஆதாரமாகக் காட்டி தற்போது நபியவர்க ளிடம் பாவமன்னிப்புத் தேடுவதை கூடாத காரியமெனக் கூறும் இவர்களது கூற்று இவர்களின் மடத்தனத்தையே காட்டுகிற தென்று தான் சொல்ல வேண்டும். எப்படியென்று கேட்கிறீர்களா? இறந்தவர்களால் எதையுமே செய்ய முடியாதெனச் சொன்ன நபியவர்கள்,...

حدثنا أبو الجحم الأزرق بن علي حدثنا يحى بن أبى بكير حدثنا المستلم بن سعيد عن الحجاج عن ثابت البناني عن أنس بن مالك:قال رسول الله صلى الله عليه وآله وسلم الأنبياء أحياء فى قبورهم يصلون.

***"நபிமார்கள் தமது கப்ருகளில் உயிரோடு இருப்பதுடன் தொழுது கொண்டும் இருக்கிறார்கள்"*** என்றும் கூறுகின்றனர்.

நூல் : ஹயாத்துல் அன்பியா, பக்கம்-15. முஸ்னத் அபீயஃலா, பாகம்-6, பக்கம்-147. அக்பார் அஸ்பஹான், பாகம்-2, பக்கம்-44. அல் காமில், பாகம்-2, பக்கம்-739. மஜ்மவுஸ் ஸவாயித், பாகம்-8, பக்கம்-211.



இன்னும் இந்த ஹதீதை அறிவித்த அனைவரும் நம்பத்தகுந்த வர்கள் என்கிறார் இமாம் ஹைத்தமி ரஹிமஹுல்லாஹ் அவர்கள்.

மேலும் இந்த ஹதீதை அறிவித்தவர்களின் வரிசைத் தொடரில் ஹஜ்ஜாஜ் என்னும் ஒருவரும் இடம் பெறுகிறார். இவரை இமாம் தஹபி அவர்கள், அல் மீஸானில் குற்றஞ் சாட்டுகிறார். அவரது குற்றச்சாட்டுக்கு இமாம் ஹாபிழ் இப்னு ஹஜர் அவர்கள்,...

இமாம் தஹபியால் குற்றஞ்சாட்டப்படும் ஹஜ்ஜாஜ் வேறு. இந்த ஹதீதில் இடம்பெறும் ஹஜ்ஜாஜ் வேறு. இவருடைய முழுப் பெயர் ஹஜ்ஜாஜ் பின் அபீ ஸியாதுல் அஸ்வத் என்பதாகும். இவர் பஸராவாசியாகும். இமாம் அஹ்மத் அவர்கள் இவரை நம்பத்தகுந்தவரென்றும், நல்லவரென்றும், இமாம் இப்னு முயீன் அவர்கள் இவர் நம்பிக்கையானவரென்றும், இமாம் அபூ ஹாத்திம் அவர்கள் இவரை ஸாலிஹுல் ஹதீதென்றும், இமாம் இப்னு ஹிப்பான் அவர்கள் இவரை ஸிகத்தானவரென்றும் புகழ்ந்துள்ள தாகக் குறிப்பிடுகின்றனர்.

பின்னும் இந்த ஹதீதைப் பற்றி வேறு காரணங்கள் ஏதும் சொல்லப்படுமாயின் இவர்களது தலைவரான ஜனாப் அல்பானி தமது "ஸில்ஸிலது அல் அஹாதீதுஸ் ஸஹீஹா" என்னும் நூலின் 621ம் இலக்கத்தில் இதை ஏன் பதிவு செய்தாரென்று கேளுங்கள்.

அடுத்து இந்த ஹதீதை ஒரு வாதத்திற்காக ஆதாரமாகக் கொள்ள முடியாதென்பதை ஒரு பேச்சுக்காக ஏற்றுக் கொண்டாலும்,...

مررت على موسى وهو قائم يصلي.

***"நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களின் கப்ருக்கு அருகே நான் சென்றபோது அவர் தொழுது கொண்டிருப்பதைக் கண்டேன்"*** என்னும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இந்த ஹதீதுக்கு என்ன பதில் தருவார்கள்?

நூல் : முஸ்னத் அஹ்மத், பாகம்-6, பக்கம்-873, எண் : 20873, 23450, 23482, சுனன் நஸாயீ, பாகம்-3, பக்கம்-238, பாபு திக்ரி ஸலாத்தி நபியில்லாஹ் மூஸா அலைஹிஸ்ஸலாம்.

இது மட்டுமா? நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்ல மவர்கள் இஸ்ராவுடைய இரவன்று பைத்துல் முகத்தஸில் அனைத்து நபிமார்களுக்கும் ரஸூல்மார்களுக்கும் இமாமாக நின்று தொழுகை நடத்தியதாகச் சொல்லப்படும் ஹதீதுக்கும் என்ன பதில் தரப் போகிறார்கள்?

இவ்வாறே மிஃராஜுடைய பயணத்தின் போது ஒவ்வொரு வானத்திலும் நபியவர்கள் பல நபிமார்களோடு உரையாடினர் எனக்கூறும் ஹதீதுக்கும் என்ன பதில் தரப் போகிறார்கள்?

நம்மீது விதியாக்கப்பட்ட ஐம்பது நேரத் தொழுகையை ஐந்து நேரத் தொழுகையாக மூஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் தான் ஆக்கித் தந்தனர் எனக்கூறும் ஹதீதுக்கும் என்ன பதில் தரப் போகிறார்கள்?

உடனே இவர்கள் மூஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் கப்ரில் தொழுதார்கள் என்றால் இப்போது நாம் தொழுவதைப் போன்று என்றெல்லாம் கேட்கக்கூடாது. தொழுகை என்றால் எழுந்து கை கட்டி நிற்க வேண்டும். ருகூவு செய்ய வேண்டும். ஸுஜூது செய்ய வேண்டும் என்பதையெல்லாம் நாம் தெரிந்து வைத்திருந்தாலும் அப்படித்தான் கப்ரில் இருப்போரும் செய்வார்களென்று எண்ணக் கூடாது.

ஏனெனில் அரபியில் ஸலாத் என்னும் பதத்திற்கு பிரார்த்தித்தல், இஸ்திஃக்பார் செய்தல், பயபக்தியோடு இருத்தல் என்பதற்கும் சொல்லப்படுவதுண்டு. ஆகையால் மரணமடைந்தவரால் எதுவுமே செய்ய முடியாதென்று சொல்லப்படுவதைக் கொண்டு நபியவர்களால் நமக்காக பிரார்த்திக்க முடியாதெனில் நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களால் மட்டும் எப்படி முடிந்தது?

அடுத்து இங்கே குறிப்பிடப்பட வேண்டிய மிக முக்கியமான விஷயமென்னவெனில், நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் கப்ருக்குள் தொழுது கொண்டிருப்பதை நான் கண்டேன் என நபியவர்கள் கூறுவதைக் கொண்டு நபியவர்கள் தனக்கு மறைவானவைகளும் தெரியும் என்று சொல்லுவதால் நபியவர்களுக்கு சுவருக்குப் பின்னால் இருப்பதுகூடத் தெரியாதென்று சொல்ல சிலருக்கு என்ன உரிமையிருக்கிறது?

இவ்வாறே நபிமார்கள் கப்ரில் உயிரோடு இருக்கிறார்கள். ஆனால் நம்மை போன்றல்ல. அங்கே அவர்கள் நம்மைப்போன்று சாப்பிடுவதில்லை. நம்மைபோன்று பருகுவதில்லை. நம்மைப்போன்று உறவு கொள்வதில்லை என்பதாக அங்கேயும் பாலியல் பற்றிப் பேசுகிறார் ஜனாப் அல்பானி.

இலங்கையில் நடைபெற்ற விவாதமொன்றில் கலந்துகொண்ட எதிர்தரப்பினர் விவாதத்தின் துவக்கத்திலிருந்து இறுதிவரை பாலியல் பற்றிய பேச்சுக்களைத் தான் திரும்பத் திரும்ப பேசிக்



கொண்டிருந்தனர். மேற்கண்ட அல்பானியின் விஷயத்தைக் கவனிக்கும் போது இவர்கள் அல்பானியின் சிநேகிதர்கள் தான் என்பதை உறுதிப்படுத்தியது நமக்குத் தெளிவாகத் தெரிந்தது.

எனவே இறந்தவரால் எதையும் செய்ய முடியாதென்னும் ஹதீதைப் புரிந்து கொள்ளாது அதை ஆதாரமாக வைத்துக் கொண்டு நமது உயிருக்கும் மேலான உயிர்களின் தந்தையான தாஹா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும் இந்த ஹதீதுக்குள் உட்படுத்தி நபியவர்களை சாதாரணமாக எடைபோடும் இந்நயவஞ்சகர்களுக்கு அடுத்து வரும் ஹதீத் தெரியுமா தெரியாதா?

இந்த ஹதீத் இவர்களுக்குத் தெரிந்திருந்தாலும் கூட இவர்கள் அதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இன்னும் இந்த ஹதீதை இமாம் ஹைத்தமீ, இமாம் பஸ்ஸார், இமாம் ஹாபிழ் இராக்கி, இமாம் ஹாபிழ் சுயூத்தி போன்ற அறிஞர்களெல்லாம் ஸஹீஹானதென்று சொன்னாலும் இந்த அழிச்சாட்டியக்காரர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். ஹதீதானது,...

أن النبي صلى الله عليه وآله وسلم قال: حياتي خير لكم تحدثون ويحدث لكم ووفاتي خير لكم تعرض عليّ أعمالكم فما رأيت من خير حمدت الله عليه ومارأيت من شر إستغفرت لكم.

*"எனது இவ்வுலக வாழ்க்கை எவ்வளவு உங்களுக்குச் சிறப்பானதோ அதுபோலவே எனது கப்ருடைய வாழ்வும் உங்களுக்குச் சிறப்பானது தான். இன்னும் நான் உங்கள் மத்தியில் இருக்கும் போது உங்களோடு உரையாடினேன். நான் உங்களை விட்டு மறைந்தபின் உங்களின் செயல்பாடுகளை பார்க்கிறேன். அப்போது நீங்கள் ஒரு நல்ல காரியத்தை செய்யக் கண்டால் அதற்காக நான் அல்லாஹ்வை புகழுகிறேன். அவ்வாறின்றி ஒரு பாவமான காரியத்தை நீங்கள் செய்யக் கண்டால் உங்களின் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காக நான் அல்லாஹ்விடம் சிபாரிசு செய்கிறேன் என்பதாக அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்."*

நூல் : மஜ்மவுஸ் ஸவாயித், பாகம்-9, பக்கம்-24, பாபு மா யஹ்ஸுலு லி உம்மதிஹி ஸல்லல்லாஹு அலைஹி வ ஆலிஹி வஸல்லிம் மின் இஸ்திஃக்பாரிஹி பஃத வபாதிஹி.

பார்த்தீர்களா? தனது ஆன்மாக்களுக்கு தீங்கிழைத்தோர் நபியவர்களின் சன்னிதானத்திற்கு வருகைதந்து அவர்களை பொருட்டாக்கி பாவமன்னிப்புத் தேட வேண்டுமென திருமறையும், நான் உங்களை விட்டு மறைந்த பின் எனது கப்ருடைய வாழ்க்கையிலும் ஒரு தீயசெயலை நீங்கள் செய்யக் கண்டால் உங்களுக்காக நான் இஸ்திஃபார் செய்கிறேனென திங்களெங்கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களும் சொல்லிக் கொண்டிருக்க, இந்நய வஞ்சகர்களோ நபியவர்கள் இறந்து போய் விட்டார்கள் என்றும், அவர்களால் நமக்காக எதையும் செய்ய முடியாதென்று சொல்வதற்கும் நாம் இடம் தந்தோமே!

அடுத்து நாம் மேலே சுட்டிக்காட்டிய வசனம் நபியவர்களின் ஜீவியத்திலும் சரி. மறைவுக்குப் பின்னாலும் சரி. இரு காலத்துக்கும் பொருந்துமென நாமாகச் சொல்லவில்லை. மாறாக குர்ஆனின் விரிவுரைகளை புரட்டிப் பார்த்தோருக்கு இது நமது கருத்தல்ல என்பது நன்கு விளங்கும். ஆம். திருக்குர்ஆனின் விரிவுரையாளர்கள் அந்த வசனம் இரு காலத்திற்கும் பொருந்தும் என்னும் நம்பிக்கையுடையவர்களாக இருப்பதால் அந்த வசனத்தை அடுத்து ஒரு சம்பவமொன்றையும் குறிக்கின்றனர். அதாவது,...

كنت جالسا عند قبر النبي صلى الله عليه وآله وسلم فجاء أعرابيّ فقال:السلام عليك يارسول الله صلى الله عليه وآله وسلم سمعت الله يقول:ولو أنهم إذ ظلموا أنفسهم جاؤوك فاستغفروا الله واستغفر لهم الرسول لوجدوا الله توابا رحيما. وقد جئتك مستغفرا لذنبي مستشفعا بك إلى ربي ثم أنشأ يقول:

ياخير من دفنت بالقاع أعظمه
فطاب من طيبهن القاع والأكم
نفسي الفداء لقبر أنت ساكنه
فيه العفاف وفيه الجود والكرم.

*"இந்த சம்பவத்தை குறிப்பிடுவோரில் அஷ்ஷெய்கு அபுன் நஸ்ர் அஸ்ஸப்பாக் என்பாரும் ஒருவர். இவர் உத்பீ என்பவர் சொன்னதாக இதனை தமது நூலில் பதிவு செய்துள்ளார். அதாவது உத்பீ சொல்கிறார்.*



*நான் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழா ஷரீபுக்கருகே அமர்ந்திருந்தேன். அப்போது அங்கே வருகை தந்த அரபி ஒருவர், தமது ஆன்மாவுக்கு தீங்கிழைத்துக் கொண்டவராக..........என்னும் வசனத்தை ஓதி, நபியே! நாயகமே! நான் உங்களிடம் எனது பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காக வந்துள்ளேன். நாயகமே! எனது இறைவனிடத்தில் உங்களுடைய பொருட்டால் எனது பாவம் மன்னிக்கப்படுவதற்காக பிரார்த்திக்க வந்துள்ளேன் என்றவர்,.........................என்னும் கவிதையையும் பாடிவிட்டு சென்றார். இச்சம்பவம் நடந்து முடியும்போது நான் கண்ணயர்ந்து விட்டேன். அப்போது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கனவில் கண்டேன். நபியவர்கள் என்னை நோக்கி, உத்பியே! அந்த அரபியின் பாவங்களை அல்லாஹ் மன்னித்து விட்டானென்னும் நற்செய்தியை அவரைப் பார்த்து சொல்லும் எனக்கூறி விட்டுச் சென்றனர்."*

இன்னும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் இப்போதும் பாவமன்னிப்புத் தேடலாம் என்பதற்கு இச்சம்பவத்தைக் கொண்டுதான் அவ்வசனத்திற்கு விளக்கம் தரப்படுவதாக யாரும் நினைத்துவிடக் கூடாது. மாறாக நபியவர்களது மறைவுக்குப் பின்னால் அவர்களது கப்ருடைய வாழ்க்கையின் போது யாருமே அவர்களிடம் பாவமன்னிப்புத் தேடியதற்குரிய ஆதாரம் ஏதுமுண்டா என்று அங்கலாய்க்கும் அழிச்சாட்டியக்காரர்களின் வாயை அடைப்பதற்காகத்தான் எடுத்துக் காட்டப் பட்டது.

ஏதோ நல்லவரைப் போல் இவ்வசனம் கடந்த காலத்திய நிகழ்ச்சியை மட்டும்தானே குறிக்கின்றதெனச் சொன்னபோது, இல்லையில்லை. இது முக்காலத்திற்கும் பொருந்தும் என்பதை நாம் ஆதாரப்படுத்தினோம். அதன்பின் இறப்புக்குப் பின்னால் நபியவர்களிடம் பாவமன்னிப்புத் தேடியதற்குரிய ஆதாரமென்னவென்று கேட்டபோது, அதற்கு உத்பியுடைய சம்பவத்தை சொன்னால், இந்தச் சம்பவத்தை யார் யாருக்கு சொன்னார்களென்ற முழுமையான அறிவிப்பாளர்கள் இல்லையாதலால் இதை ஏற்க முடியாதென்று அப்துல் ஹாதி கூறுவதால் நாங்களும் அதை ஏற்றுக் கொள்ள மாட்டோம் என்கிறாய்.

இமாம் இப்னு கதீரை நீரும் ஒரு இமாமாக, குர்ஆனின் விரிவுரையாளராக ஏற்றுக் கொண்டிருக்கிறீர்களல்லவா. இதே இமாம் இப்னு

அப்துல் ஹாதியை புகழ்ந்துள்ள வார்த்தைகளையும் ஆதாரமாக எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள் தானே. அதுமட்டுமா? இந்த இமாம் இப்னு தைமிய்யாவின் பிரதான சீடர்களில் ஒருவரும் கூட.

அந்த இமாமுக்கு மேற்கண்ட அவ்வசனம் கடந்த காலத்தை மட்டும்தான் குறிக்குமென்பது தெரியாதா? அல்லது உத்பியால் அறிவிக்கப்படும் சம்பவம் பூரணமான அறிவிப்பாளர்களைக் கொண்டு முன்வைக்கப்படாததால் அதை ஏற்க முடியாதென்பதும் தெரியாதா?

ஒன்று தெரியுமா? இப்னு தைமிய்யாவின் வழிகேட்டில் புதையுண்டு போன அப்துல் ஹாதியின் கூற்று உங்களுக்குப் பக்கபலம் என்றால், அதே இப்னு தைமிய்யா குர்ஆன் ஹதீதுக்கு மாற்றமாக செயல்படுவதைக் கண்ட இப்னு கதீர் தானொரு மாணவர் என்பதையும் உதறித்தள்ளி விட்டு சத்தியத்தை நிலைநிறுத்த அச்சம்பவத்தை தமது குர்ஆனின் விரிவுரையில் எடுத்துக் காட்டுகிறார் எனில் அதை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம்.

இன்னும் இமாம் அவ்ஸாயிக்குப் பின் ஷாம் தேசத்தில் இப்னு குதாமாவைப் போன்ற பேரறிஞர் எவரும் வரவில்லையென இப்னு தைமிய்யாவால் புகழப்படும் பெரியாரான இப்னு குதாமா தமது நூலான அல் முக்னீ, பாகம்-3, பக்கம்-590ல் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களது முபாரக்கான ரௌழா ஷரீபை தரிசிக்கும் முறைபற்றி பேசும்போது, நபியவர்களுக்கு ஸலாத்தும் ஸலாமும் உரைத்தபின்,...

**"சூராஅந்நிஸாவின் 64ம் வசனத்தை ஓதியபின், நபியவர்களை நோக்கி; நாயகமே! ரஸூலே! எனது பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காக பாவப் பரிகாரம் தேடியவனாக உங்களின் சன்னிதானத்திற்கு வந்துள்ளேன். யா அல்லாஹ்! உனது ஹபீபுடைய ஜீவியத்தின் போது அவர்களது சன்னிதானத்திற்கு வருகை தந்தோருக்கு மஃபிரத்தை கடமையாக்கியது போல எனக்கும் கடமையாக்குவாயாக"** என்று பிரார்த்தித்துக் கொள்ளுமாறு கூறுகின்றனர்.

சம்பூரணமான அறிவிப்பாளர்கள் இல்லை என்பதற்காக உத்பியால் அறிவிக்கப்படும் நிகழ்ச்சியை ஏற்க முடியாதெனில், உமக்கு மட்டுமல்ல. உமது ஆசானாகிய அப்துல் ஹாதிக்கும் ஆசானானவரால் புகழப்பட்ட இமாம் இப்னு குதாமாவின் வார்த்தைக்கு மதிப்பளித்து அதை ஆதாரமாகக் கொள்ளலாம் தானே. ஜனாப் ஜுனைத்



இதற்குமா ஆதாரம் தேடப் போகிறார்? இஸ்னாதைத் தேடியலையும் நீங்கள் எதுவரை இஸ்னாதை தேடிக் கொண்டிருக்கப் போகிறீர்கள்? இறுதியில் உங்களுக்கே இஸ்னாத் இல்லாமல் போய்விடப் போகிறது.

பின்னும் உண்மையில் உத்பியின் சம்பவத்திற்கு சரியான அறிவிப்பாளர்கள் இல்லை என்பதால் தான் ஏற்றுக்கொள்ள மறுக்கிறீர்கள் என்றால் அவரால் பாடப்பட்ட பாடலை இன்னும் எதற்காக ரௌழா ஷரீபில் விட்டு வைத்திருக்கிறீர்கள்? தான் திருடி அயல் வீட்டை நம்ப மாட்டான் என்பது உங்களுக்காகவே சொல்லப்பட்டதோ! யஸீதின் அடியாட்கள் பணத்திற்காக இமாம் ஹுஸைனை ஷஹீதாக்கியதைப் போல ஸஊதின் அடியாட்களான நீங்கள் அதே பணத்திற்கு அடிமையாகி ஒரு முழுமையான சமுதாயத்தையே நாசமாக்கலாமா? மேலும் அப்துல் ஹாதி என்ன சொல்கிறார் என்பதைப் பாருங்கள்,...

ولم يفهم منها أحد من السلف والخلف إلا المجيء إليه فى حياته ليستغفر لهم.

**"ஸலபுகளிலும் கலபுகளிலும் யாருமே சூரா அந்நிஸாவின் அவ்வசனம் நபியவர்களது ஜீவியத்தின் போது அவர்களிடம் பாவப் பரிகாரம் தேடுவதற்கேயன்றி வேறு எதற்காகவும் விளங்கிக் கொள்ளப்பட வில்லை என்று சொல்கிறார்."** ***(இது எனக்கு சிரிப்பைத் தான் ஏற்படுத்துகிறது)***

நாம் சுருக்கமாக இவரது சீடர்களிடம் கேட்க விரும்புவது, உங்களுக்கு ஸலபுகள் என்று யாராவது இருக்கிறார்களா? இருந்தால் யார் அவர்கள்? இவ்வாறே கலபுகள் என்று உங்களுக்கு யாராவது இருக்கிறார்களா? இருந்தால் யார் அவர்கள்? இன்னும் இவ்வசனத்தை எடுத்துக்காட்டி இதனை தற்காலத்தில் ஆதாரமாகக் கொள்ள முடியாது. இது கடந்த காலத்திற்குட்பட்ட ஒன்றெனச் சொன்ன பெரியார் யார்? அவருடைய பெயர் என்ன? எந்த நூலில் இவ்வாறு சொல்கிறார்?

குர்ஆன் ஹதீதைப் பின்பற்றுவோர் ஸலபுகளைப் பற்றியோ கலபுகளைப் பற்றியோ பேசக்கூடாது. இன்னும் தம்மை ஸலபுகளென்றும் சொல்லிக்கொள்ளக் கூடாது. இதற்குரிய தகுதியும் உங்களுக்கு இல்லை. அதற்குப் பதிலாக ஷைத்தானிய்யாக்கள் என்று வேண்டுமானால் பெயரிட்டுக் கொள்ளுங்கள். அதுதான் உங்களுக்குப் பொருத்தமாக இருக்கும். இனி ஸியாரத்திற்காக

பயணம் செய்யலாமா? அதோர் பாவமான செயலா என்பதற் குரிய இன்னுமோர் வசனத்தைப் பார்ப்போம்.

ஆம். அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர் களின் பரிசுத்த ரௌழாவை தரிசிப்பதற்காக பயணம் செய்தல் ஆகுமான ஒன்றே என்பதோடு அதைக்கொண்டு பலகோடி நன்மைகளும் கிடைக்கின்றன என்பதற்கு கீழ்காணும் வசனம் ஆதாரமாக அமைந்திருப்பதைப் பார்க்கலாம். தெளிவான சிந்தனை கொண்டு வாசிப்போர் அனைவரும் இவ்விஷயத்தில் அழுத்தமான தொரு நம்பிக்கையை இதன் மூலம் பெற்றுக் கொள்வர் என்பதில் அறவே சந்தேகமில்லை. அவ்வசனமானது,...

سبحان الذي أسرى بعبده ليلا من المسجد الحرام إلى المسجد الأقصى الذي باركنا حوله لنريه من آياتنا إنه هو السميع البصير.

''**மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து நமது அத்தாட்சிகளைக் காண்பிப்ப தற்காக அதைச்சூழவும் அருள் புரியப்பட்ட மஸ்ஜிதுல் அக்ஸா விற்கு தனது அடியாரை இரவில் பயணம் செய்ய வைத்தவன் மிகத் தூய்மையானவனாகும். அவனே சுயமாக அனைத்தையும் செவிமடுப்பவனும், நன்கு பார்ப்பவனுமாகும்.**'' சூரா பனீ இஸ்ரயீல், வசனம்-1.

இவ்வசனம் வள்ளல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களது மிஃராஜுக்குரிய முதல்கட்ட பயணத்தைக் குறித்து பேசுகிறது. அதாவது, மிஃராஜுக்காக முதலில் நபியவர்கள் பைத்துல் முகத்தஸுக்கு அழைத்துச் செல்லப்படுகின்றனர். அதைச்சுற்றி உள்ள பகுதி முழுவதும் பரக்கத்துச் செய்யப்பட்ட இடம் என்பதாகவும் அல்லாஹ்வின் அத்தாட்சிகளைக் காட்டுவதற் காகவே நபியவர்கள் அங்கே அழைத்துச் செல்லப்படுகிறார்கள் என்பதாகவும் திருமறை கூறுகிறது.

ஆகையால் இஸ்ருவுடைய அப்பயணத்தின் போது நபியவர்க ளுக்கு காட்டித்தரப்பட்ட அந்த அத்தாட்சிகள் என்னவாக இருக்கும்? மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவிற்கு செல்லும் வழி யில் நபியவர்கள் அப்படியென்ன அத்தாட்சிகளை கண்டார்கள்? இதோ தான் என்னென்ன அத்தாட்சிகளை கண்டோம் என்பதை நபியவர்களே சொல்கிறார்கள். அவை என்னவென்று பாருங்கள்.

أخبرنا محمد بن علي بن حرب قال حدثنا معاذ بن خالد قال



أخبرنا حماد بن سلمة عن سليمان التميمي عن ثابت عن النبي صلى الله عليه وآله وسلم قال أتيت ليلة أسرى بي على موسى عليه السلام عند الكثيف الأحمر وهو قائم يصلي فى قبره.

*''இஸ்ருவுடைய இரவன்று நான் நபி மூஸா அலைஹிஸ்ஸலாம வர்களின் கப்ருக்கருகில் அழைத்துச் செல்லப்பட்டேன். அப்போது அவர்கள் தமது கப்ரில் தொழுது கொண்டிருந்ததைக் கண்டேன்''* என ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவின்றதாக ஹழ்ரத் அனஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றனர்.

قال إنزل فصل فصليت فقال أتدري أين صليت صليت بطور سيناء حيث كلم الله موسى عليه السلام ثم قال إنزل فصل فصليت فقال أتدري أين صليت صليت ببيت لحم حيث ولد عيسى عليه السلام.

*''ஹழ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாமவர்கள் என்னை (புராக்கி லிருந்து) இறங்கச் சொல்லி தொழுது கொள்ளுமாறு சொல்ல, தொழுது கொண்டேன். அப்போது ஜிப்ரீல் இதென்ன இடம் என்பது தங்களுக்கு நினைவிருக்கிறதா எனக் கேட்டவர், இதுதான் ஹழ்ரத் மூஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் அல்லாஹ்வுடன் உரையாடிய தூர்சீனா மலையின் அடிவாரமாகும் என்று சொன்னதைத் தொடர்ந்து பயணமானோம். பிறகு இன்னோரிடத்திலும் முன்பு போலவே தொழச் சொன்னவர், இதுதான் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம வர்கள் பிறந்த இடமாகும்''* எனக்கூறினர்.

இவ்விரு ஹதீதுகளும் சுனன் நஸாயியில் பதிவாகியுள்ளன. மேற்கண்ட இரு ஹதீதுகளிலும் மூஸா அலைஹிஸ்ஸலாம் தமது கப்ரில் தொழுது கொண்டிருந்ததையும், தூர்சீனா மலையின் அடிவாரத் தையும், ஈஸா அலைஹிஸ்ஸலாம் பிறந்த இடத்தையும் நபியவர்க ளுக்கு காண்பிக்கப்பட்டதோடு அங்கெல்லாம் தொழுது கொள்ளும் படியாகவும் ஏவப்படுகிறார்கள். இதில் இரண்டாம் ஹதீதை பொய்யானது என்கிறார் இப்னு தைமிய்யா. இமாம் பைஹகீ அவர்கள் தலாயிலுன் நுபுவ்வத், பாகம்-2, பக்கம்-357ல் இதனை ஸஹீஹான ஹதீத் என்கிறார். அதன்பின் பைத்துல் முகத்தஸை

சென்றடைகின்றனர். அங்கே நபியவர்களுக்குக் காண்பிக்கப்பட்ட அத்தாட்சி என்ன தெரியுமா?

وقد رأيتني فى جماعة من الأنبياء....فأممتهم.

**"அங்கே எனக்கு அனைத்து நபிமார்களையும் காண்பிக்கப் பட்டது. நான் அவர்களுக்கு இமாமத்துச் செய்தேன் என்கிறார்கள் முஸ்தபா நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்."** இது முஸ்லிம் ஷரீபில் பதிவாகியுள்ளது.

அல்லாஹ்வின் அத்தாட்சிகளை காண்பிப்பதற்காகவே நபியவர்கள் மஸ்ஜிதுல் ஹராமிலிருந்து மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டதாக அருள்மறை சொல்வதாகவும், நபியவர்கள் அந்த அத்தாட்சிகளை எல்லாம் கண்டதாகவும் சொல்கிறீர்களே! அதில் மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களின் கப்ரையும், தூர்சீனா மலையின் அடிவாரத்தையும், ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் பிறந்த இடத்தையும், மஸ்ஜிதுல் அக்ஸாவில் நபிமார்களுக்கு இமாமத்துச் செய்ததையும் தானே சொல்கிறீர்கள்? இதுதான் அந்த அத்தாட்சிகளா? இவற்றை தரிசிப்பதற்காகவா நபியவர்கள் ஜிப்ரீலால் அழைத்துச் செல்லப்பட்டார்கள்? அத்தாட்சிகளை காட்டுவதற்காக அழைத்துச் செல்லப்பட்ட பயணத்தில் இவைகளையும் கண்டிருக்கலாம். மாறாக இதற்காகத் தான் பயணமே செய்தார்களென்று எப்படிச்சொல்ல முடியுமென நீங்கள் சிந்திப்பதை நம்மால் உணர முடிகிறது.

உங்களின் மேற்கண்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் கிடைக்க வேண்டுமாயின் முதலில் அத்தாட்சி என்றால் என்ன? குர்ஆன் அத்தாட்சியென எவைகளைக் குறித்து பேசுகிறது என்பதைத் தெரிந்து கொண்டால் அத்தாட்சி என்பதற்குரிய விளக்கத்தை நீங்கள் விளங்கிக் கொள்ளலாம். ஆகையால் குர்ஆன் சொல்லும் அத்தாட்சிகளை சுருக்கமாக உங்களின் பார்வைக்கு தருகிறோம்.

ولنجعله آية للناس ورحمة منا.

**"ஹழ்ரத் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்களை மக்களுக்கு ஓர் அத்தாட்சியாகவும், நம்முடைய ரஹ்மத்தாகவும் ஆக்கினோம்."** சூரா மர்யம், வசனம்-2. இவ்வசனம் நபி ஈஸாவை அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

وأنظر إلى حمارك ولنجعلك آية.



**"இன்னும் உமது கழுதையைப் பாரும். உம்மை மனிதர்களுக்கு ஓர் அத்தாட்சியாக ஆக்குவதற்காக."** சூரா பகரா, வசனம்-259. இவ்வசனம் நபி உஸைரை அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

أم حسبت أن أصحاب الكهف والرقيم كانوا من آياتنا عجبا.

**"குகைவாசிகளும், சாசனத்துடையோரும் நமது ஆச்சரியமான அத்தாட்சிகளில் நின்றுமுள்ளவர்கள் என்று எண்ணுகிறீர்களா? (அவர்கள் அல்லாஹ்வின் ஆச்சரியமான அத்தாட்சிகளே தான்.)"** சூரா கஹ்பு, வசனம்-9. இவ்வசனம் குகைவாசிகளான வலிமார்களை அல்லாஹ்வின் ஆச்சரியமான அத்தாட்சி எனக் கூறுகிறது.

وجعلناها وإبنها آية للعالمين.

**"நாம் மர்யமையும், அவரது புதல்வரையும் அகிலத்தாருக்கு அத்தாட்சியாக்கி உள்ளோம்."** சூரா அன்பியா, வசனம்-91. இவ்வசனம் நபி ஈஸாவையும் அவரது தாயான மர்யமையும் அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

فيه آيات بينات مقام إبراهيم.

**"ஹரம் ஷரீபில் தெளிவான பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அதில் ஒன்று மகாமே இப்றாஹீமாகும்."** சூரா ஆல இம்ரான், வசனம்-97. இவ்வசனம் ஹரம் ஷரீபை நிர்மாணிப்பதற்காக உபயோகப்படுத்தப்பட்ட ஒரு கல்லை அல்லாஹ்வின் தெளிவான அத்தாட்சி எனக் கூறுகிறது.

وقال لهم نبيهم إن آية ملكه.

**"நபி ஷம்வீல் அலைஹிஸ்ஸலாமவர்கள் தாலூத் அரசரிடம், அவர் அரசர் தானென்பதற்கு அத்தாட்சியானது ஒரு பேழை வருவதாகும் என்று சொன்னார்.** சூரா பகரா, வசனம்-248. இவ்வசனம் நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களுடைய பாதணி, கைத்தடி, தலைப்பாகை போன்ற இன்னும் பல பொருட்களை உள்ளடக்கிய ஒரு பெட்டியை அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

قال رب إجعل لي آية قال آيتك أن لاتكلم الناس ثلاثة أيام إلا رمزا.

"நபி ஸகரிய்யா அலைஹிஸ்ஸலாமவர்கள் அல்லாஹ்விடம் தனக்கொரு அத்தாட்சியை காட்டித் தருமாறு பிரார்த்திக்க, அதற்க வர்கள், மூன்று நாட்கள்வரை பேசாமல் மௌனமாக இருப்பதாகும் என்று கூறினான்." சூரா ஆல இம்ரான், வசனம்-41. இவ்வசனம் மூன்று நாட்கள் பேசாமல் இருப்பதை அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

وقوم نوح لما كذبوا الرسل أغرقناهم وجعلناهم للناس آية.

"நபி நூஹ் அலைஹிஸ்ஸலாமவர்களை அவரது சமூகத்தார் பொய்ப்பித்த போது அவர்களை நாம் நீரில் மூழ்கடித்தோம். இன்னும் அவர்களை நாம் மனிதர்களுக்கு அத்தாட்சியாகவும் ஆக்கினோம்." சூரா புர்கான், வசனம்-37. இவ்வசனம் அல்லாஹ்வின் வேதனையை அத்தாட்சி எனக் கூறுகிறது.

ولقد آتينا موسى تسع آيات بينات.

"திடமாக நாம் நபி மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களுக்கு தெளி வான ஒன்பது அத்தாட்சிகளை வழங்கியுள்ளோம்." சூரா பனீ இஸ்ரு யீல், வசனம்-101. இவ்வசனம் நபியவர்களின் கை, தடி, நாவு, கடல், வெள்ளம், வெட்டுக்கிளி, பேன், தவளை, ரத்தம் ஆகியவை களை அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

هذه ناقة الله لكم آية.

"இந்த நாகதுல்லாஹ் - அல்லாஹ்வின் ஒட்டகமாகிறது உங்க ளுக்கு அத்தாட்சியாகும் என்பதாக நபி ஸாலிஹ் அலைஹிஸ்ஸலா மவர்கள் சொன்னார்கள்." சூரா அல் அஃராப், வசனம்-73. இவ் வசனம் ஒட்டகத்தை அல்லாஹ்வின் அத்தாட்சி எனக் கூறுகிறது.

இன்னும்இவ்வாறு எத்தனையோ வஸ்துக்களை தனது அத்தாட்சி யென அல்லாஹ் சொல்வதை திருமறையில் நாம் பார்க்கலாம். ஆதலால் மேற்கண்டவற்றைக் கொண்டு அத்தாட்சி என்றால் என்ன என்பதை தெளிவாக புரிந்திருப்பீர்களென்று நினைக்கிறோம். எனவே இஸ்ருவுடைய இரவன்று மஸ்ஜிதுல் ஹராமுக்கும் மஸ்ஜிதுல் அக்ஸாவுக்கும் இடையே நபியவர்களுக்கு காண்பிக்கப் பட்ட அத்தாட்சிகள் என்றால் அவை மூஸாவுடைய கப்ரும், தூர்சீனா மலையின் அடிவாரமும், ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் பிறந்த இடமுமாகும் என்று சொன்னால் அது மிகையாகாது. இத்தனை



விளக்கங்களையும் நாம் எடுத்துக் காட்டியபின் இப்போது கப்ருகளை தரிசிப்பதற்காக பயணம் செய்யலாமா? அல்லது அதோர் ஷிர்க்கான காரியமா என்பதை நீங்களே முடிவுசெய்து கொள்ளுங்கள். மேலும் அதே அடிப்படையில் நபிமார் வலிமார் போன்றோர் அவதரித்த இடங்கள், வாழ்ந்த இடங்கள், அவர்கள் அல்லாஹ்வை தியானிப்பதற்காக கல்வத் இருந்த இடங்கள் போன்றவைகளை சென்று தரிசிப்பதோடு அங்கே பரக்கத்திற்காக தொழவும் செய்ய லாம் என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அத்துடன் இவைகள் ஒருபோதும் ஷிர்க்காகவோ பித்அத்தாகவோ ஆகாது என்பதோடு அப்படிச் சொல்வோர் தான் பித்அத்திகளும் வரம்பு கடந்தவர்களுமாகும் என்பதையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

## பயணம் செய்யாதீர்

இப்பிரபஞ்சத்தில் அல்லாஹ்வால் படைக்கப்பட்ட இடங்களில் அவனுக்கு மிகவும் பிரியமான இடம் என்பது மஸ்ஜிதுகளாகும். இவ்வாறே கடைவீதிகள் அவனுக்கு மிகவும் வெறுப்புக்குரிய இடங்களாகும். இதில் அல்லாஹ்வின் இல்லமாகிய புனித கஃபா தான் இப்பூமியில் முதன்முதல் உருவாக்கப்பட்ட இறையில்ல மாகும். இதனை முதன் முதல் ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்கள் தான் நிர்மாணித்தனர். இதற்குப்பின் சுமார் நாற்பது வருடம் கழித்து அல்லாஹ்வின் மற்றொரு இல்லமாகிய மஸ்ஜிதுல் அக்ஸா நிர்மாணிக் கப்பட்டது. இதை ஆதம் அலைஹிஸ்ஸலாமவர்களின் புதல்வர்களில் ஒருவர் கட்டினார். பின்னர் கஃபாவை நபி இப்ருஹீம் அலைஹிஸ் ஸலாமவர்கள் புதுப்பித்துக் கட்டியதைப் போல நபி சுலைமான் அலைஹிஸ்ஸலாமவர்கள் மஸ்ஜிதுல் அக்ஸாவை புதுப்பித்துக் கட்டினர். இவ்வாறு இப்பூமியில் பல இறையில்லங்கள் நிர்மாணிக் கப்பட்டாலும் நபிமார்களால் நிர்மாணிக்கப்பட்ட மஸ்ஜிதுகளில் இறுதியாக நிர்மாணிக்கப்பட்ட பள்ளிவாசல் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிக்க மஸ்ஜிதுன் நபவியாகும். ஆதலால் இம்மூன்று மஸ்ஜிதுகளின் சிறப்புக்களைக் குறித்து மிகத்துல்லியமாக விளக்கிக் காட்டும் வகையில் ஒரே வார்த்தையில் நபியவர்கள் பின்வருமாறு சொல்கிறார்கள்.

عن أبى هريرة رضى الله عنه عن النبى صلى الله عليه وآله وسلم قال: لاتشد الرحال إلا إلى ثلاثة مساجد مسجدى هذا ومسجد الحرام ومسجد الأقصى.



***"மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர பயணம் செய்யக்கூடாது. அவை எனது மஸ்ஜிதும், மஸ்ஜிதுல் ஹராமும், மஸ்ஜிதுல் அக்ஸாவு மாகும்"*** என்று ஒரு இடத்திலும்,...

عن أبى هريرة رضى الله عنه أن رسول الله صلى الله عليه وآله وسلم قال: إنما يسافر إلى ثلاثة مساجد مسجد الكعبة ومسجدي ومسجد إيلياء.

***"மஸ்ஜிதுல் கஃபா, மஸ்ஜிதுன் நபவி, மஸ்ஜிதுல் ஈலியா (அல் அக்ஸா) ஆகிய மூன்று மஸ்ஜிதுகளுக்கு மட்டுமே பயணம் செய்யப்பட வேண்டும்"*** என மற்றொரு முறையும் சொன்னார்கள் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்.

பயணம் செய்வதாயின் இம்மூன்று இடங்களுக்கு மட்டும்தான் பயணம் செய்ய வேண்டுமென நபியவர்கள் கூறுகிறார்களே! அவ்வாறாயின் நமது தேவைகளுக்காக வேறு இடங்களுக்குச் செல்லக்கூடாதா என்னும் கேள்வி எழக்கூடாது என்பதற்காக,...

عن جابر بن عبد الله رضى الله عنهما عن رسول الله صلى الله عليه وآله وسلم أنه قال: إن خير ماركبت الرواحل مسجدي هذا والبيت العتيق.

***"பயணங்களில் மிகச் சிறந்த பயணம் எனது பள்ளிவாசல், பைத்துல் அதீக் போன்றவைகளுக்கு செல்வதேயாகும்"*** எனக்கூறி வேறு இடங்களுக்கும் பயணம் செய்யலாம் என்பதைத் தெளிவு படுத்துகின்றனர் நபியவர்கள்.

இனி பயணம் செய்வதாயின் மூன்று பள்ளிகளுக்கு மட்டும் தான் பயணம் செய்ய வேண்டும் என்னும் ஹதீதை ஆதாரமாக வைத்துக்கொண்டு வேறு எங்குமே பயணம் செய்யக் கூடாதெனச் சொல்வதுதவறாகும். வேறு இடங்களுக்கு பயணம் செய்வதற்கும் இந்த ஹதீதுக்கும் அறவே சம்பந்மில்லை என்பதால் தான் நம்மி டையே உள்ள ஒவ்வொருவரும்,...

பிழைப்பைத் தேடி பல நாடுகளுக்கும் செல்கின்றனர். மேல் படிப்புக்காக பல நாடுகளுக்கு செல்கின்றனர். இன்னும் பல்வேறு காரணங்களுக்காகவும் செல்கின்றனர். இதில் சுற்றுலாவும் ஒன்றாகும்.

இனி மூன்று பள்ளிகளுக்கு மட்டுமே பயணம் செய்ய வேண்டுமெனக் கூறும் ஹதீதை ஒரு உதாரணத்தைக் கொண்டு விளக்குவோம். அதாவது உங்களுடைய தந்தை சொல்கிறார். அலிகார் யுனிவர்சிட்டி, ரஹ்மானிய்யா யுனிவர்சிட்டி, அரபா யுனிவர்சிட்டி ஆகிய மூன்று கல்லூரிகளைத் தவிர வேறு எங்கும் செல்லக்கூடாது என்று சொல்வதாக வைத்துக் கொள்ளுங்கள்.

தந்தையின் இவ்வுபதேசத்தை கேட்கும் தனயன் வீட்டை விட்டு வெளியேறினால் இம்மூன்றில் ஒன்றுக்கே செல்ல வேண்டுமேயன்றி அதற்கு மாறாக நண்பனை சந்திக்கவோ, கடைத்தெருவுக்கோ, அல்லது தொழில் செய்யவோ வேறு எங்கும் செல்லக் கூடாதென பொருள் கொள்ள மாட்டான். அவ்வாறின்றி சிறப்பான கல்வியைப் பெற வேண்டுமானால் இம்மூன்று கல்லூரிகளில் ஒன்றுக்கு செல்ல வேண்டுமென்றுதான் தனது தந்தை தனக்கு உத்திரவிட்டிருப்பதாக நினைப்பான்.

ஆக இந்த உதாரணத்தைப் போன்றே உலகில் எத்தனையோ வகை வகையான வித்தியாசமான அமைப்பில் லட்சக்கணக்கான மஸ்ஜிதுகள் இருக்கின்றன. அவைகளில் எந்தவொரு மஸ்ஜிதுக்கும் பயணம் செய்வதாயின் அது எனது மஸ்ஜித், மஸ்ஜிதுல் ஹராம், மஸ்ஜிதுல் அக்ஸா ஆகிய மூன்றில் ஒன்றுக்கே செல்ல வேண்டுமென்பது தெளிவாகப் புரிகிறது.

இதே கருத்தை பத்ஹுல் பாரி, உம்தத்துல் காரி, கிர்மானி, ஷரஹ் நவவி, மஆலிமுஸ் ஸுனன், போன்ற பல நூல்களில் பதிவான ஹஸன் என்னும் படித்தரத்தை கொண்ட நபிமொழியைக் கொண்டு நாம் விளக்கிக் காட்டியிருப்போம். ஆனால் ஹதீதுகளை தமதிஷ்டப் பிரகாரம் புரட்டி பொய்யாக்குபவர்களும் நம்ப மாட்டோமென மறுக்கின்ற கீழ்த்தரமான கூட்டமொன்றும் நமக்கு மத்தியில் தலையெடுத்து விட்டிருப்பதால் ஹதீதுக்கு பதிலாக உதாரணத்தை முன்வைத்தோம்.

சராசரியாக சிந்திக்கின்ற நமக்குக்கூட மஸ்ஜிதுகளுக்கு பயணம் செய்வதானால் அம்மூன்று மஸ்ஜிதுகளைத் தவிர வேறு மஸ்ஜிதுகளுக்கு பயணம் செய்வதைக் குறித்துத்தான் நபியவர்கள் தடை செய்கிறார்கள் என்பதை புரிந்துகொள்ள முடியும்போது ஹதீதுகளுக்கு விரிவுரை செய்த அப்பெரியார்களின் கருத்து என்னவாக இருக்கும்?

அதை நாம் பார்க்குமுன் "பூமியில் ஒருசில இடங்களைத் தவிர



மற்ற இடங்களனைத்தும் தொழுவதற்கு சாத்தியமானதே" என்பதாகச் சொன்ன நபியவர்களே பயணம் செய்வதானால் மூன்று பள்ளிகளைத் தவிர வேறு எங்கும் பயணம் செய்யக் கூடாதென்று ஏன் சொன்னார்கள் என்பதை முதலில் பார்த்து விடுவோம்.

عن عبد الله بن عباس رضى الله عنهما أنه قال: إن إمرأة إشتكت شكوى فقالت: إن شفاني الله لأخرجنّ فلأصلينّ في بيت المقدس فبرأت ثم تجهزت تريد الخروج فجائت ميمونة زوج النبي صلى الله عليه وآله وسلم تسلم عليها فأخبرتها ذلك فقالت إجلسي وكلي ماصنعت وصلي فى مسجد رسول الله صلى الله عليه وآله وسلم فإنى سمعت رسول الله صلى الله عليه وآله وسلم يقول صلاة فيه أفضل من ألف صلاة فيما سواه من المساجد إلا المسجد الكعبة.

*"(1) ஒரு பெண் தனது நோயை அல்லாஹ் சுகப்படுத்துவானாகில் பைத்துல் முகத்தஸுக்கு சென்று தொழுவேனென நேர்ச்சை செய்திருந்தார். அப்பெண்ணுடைய நோயும் குணமாகி விட்டது. எனவே அவர் பைத்துல் முகத்தஸுக்கு செல்ல ஆயத்தமான போது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் துணைவியரில் ஒருவரான அன்னை மைமூனா ரழியல்லாஹு அன்ஹா அவர்களைச் சென்று சந்தித்து அவர்களுக்கு ஸலாம் சொன்னபின், தமது நோக்கத்தைச் சொல்ல, அதுகேட்ட அன்னையவர்கள்; அவரை அமரச்செய்து உணவு உண்ணுமாறு கூறிவிட்டு அத்தொழுகையை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதப் பள்ளியில் நிறைவேற்றுமாறு கூறினர்."* நூல் : துஹ்பத்துல் அஷ்ராப், ஷரஹ் முஸ்லிம் நவவி.

عن جابر بن عبد الله أن رجلا قال: يارسول الله صلى الله عليه وآله وسلم إني نذرت لله إن فتح الله عليك مكة أن أصلي فى بيت المقدس ركعتين فقال صلّ ههنا ثم عاد عليه فقال صلّ ههنا ثم عاد عليه فقال شأنك إذا.

**"அல்லாஹ்வின் தூதரே! அல்லாஹ் உங்களுக்கு மக்காவை வெற்றியாக்கித் தந்தால் பைத்துல் முகத்தஸில் இரண்டு ரக்அத் தொழுவதாக நேர்ச்சை செய்து கொண்டுள்ளேன் எனக் கூறியபோது, அத்தொழுகையை இங்கேயே தொழுது கொள்ளுங்களென நபியவர்கள் சொன்னார்கள். அவர் திரும்பத் திரும்பக் கேட்கவே நபியவர்கள் கடைசியில் உமது விருப்பப்படி செய்து கொள்ளுமெனக் கூறினர்."**

நூல் : முஸ்னத் அப்திர் ரஸ்ஸாக், ஷரஹ் ஸுன்னா, ஷரஹ் நவவி, பத்ஹுல் பாரி, உம்தத்துல்காரி, இர்ஷாதுஸ் ஸாரி, பத்ஹுல் முல்ஹம்.

மேற்கண்ட இரு ஹதீதுகளின் படி ஒருவர் தமது தேவை பூர்த்தியாக்கப்பட்டால் இம்மூன்று பள்ளிகளில் ஒன்றுக்கு பயணமாகி தொழுவேன் என்றுதான் நேர்ச்சை செய்ய முடியுமே தவிர வேறு பள்ளிகளுக்குச் செல்வதாக நேர்ச்சை செய்ய முடியாதென்பது இதன் பொருளாகும்.

لاإعتكاف إلا فى هذه المساجد الثلاثة مسجد المدينة ومسجد مكة ومسجد إيلياء.

**(2) மஸ்ஜிதுன் நபவி, மஸ்ஜித் மக்கா, மஸ்ஜித் அக்ஸா ஆகிய மூன்றிலும் இஃதிகாப் இருக்கலாமென்று சொன்னார்கள் திங்களொங் கோமான் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்."** நூல் : முஸன்னப் அப்திர் ரஸ்ஸாக், ஸுனன் அல்குப்ரா.

அதிக நன்மைகளைக் கருதி இஃதிகாப் இருக்க விரும்புவோர், அதிக நன்மைகளுக்காக தொழ விரும்புவோர் மேற்கண்ட மூன்று பள்ளிகளில் ஒன்றுக்கே சென்று நிறைவேற்றுவது அவசியமாகும். இதில் பைத்துல் முகத்தஸுக்கு செல்வதாக நேர்ச்சை செய்தவர் அதை அங்கு நிறைவேற்றுவதற்குப் பதிலாக ஏனைய இரண்டு பள்ளிகளிலும் நிறைவேற்ற முடியுமாயினும் மஸ்ஜிதுன் நபவிக்காக நேர்ச்சை செய்பவர் மற்ற இரு இடங்களில் அதை நிறைவேற்றுவாராயின் அவரது நேர்ச்சை நிறைவேறாது. ஏனெனில் மஸ்ஜிதுன் நபவிக்குரிய மகத்துவம் வேறு எந்த இடத்திற்கும் இல்லையென்பதே அதற்குரிய காரணமாகும். இது இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்களின் கருத்தாகும்.

மஸ்ஜிதுன் நபவியில் தொழுவதால் கிடைக்கும் நன்மையை விட அதிகமான நன்மை மஸ்ஜிதுல் ஹராமில் கிடைக்கும் என்பது தெரிந்திருந்தும் இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள்



மஸ்ஜிதுன் நபவிக்காக நேர்ச்சை செய்தவன் வேறு இடத்திற்குச் சென்றால் அவனது நேர்ச்சை நிறைவேறாதென்று சொன்னதற்கு பல காரணங்கள் உள்ளன. அவையாவன,...

இதற்குமுன் மஸ்ஜிதுகளைக் குறித்து சொல்லப்பட்ட ஹதீதுகள் மஸ்ஜிதுகளை பற்றி மட்டுமே பேசுவதால் அதற்கு மாறாக தம்மிஷ்டம் போல் வேறு விஷயங்களுக்கு அதை ஆதாரமாக்குவதை நாம் வண்மையாக கண்டிக்கிறோம். அதனால்தான் புகாரி ஷரீபின் விரிவுரையாளரான அல்லாமா ஐனீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது குருவான அல்லாமா ஸைனுத்தீன் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் சொன்னதாகக் கூறுவதானது,...

إن المراد فيه حكم المساجد فقط وأنه لا يشد الرحل إلى المسجد من المساجد غير هذه الثلاثة فأما قصد غير المساجد من الرحلة فى طلب العلم وفى التجارة والتنزه وزيارة الصالحين والمشاهد وزيارة الإخوان ونحو ذلك وليس داخلا فى النهي.

**"இந்த ஹதீதானது மஸ்ஜிதுகளுக்கு பயணம் செய்வதைக் குறித்து பேசுவது மாத்திரமேயன்றி கல்வி கற்பதற்காகவோ, வியாபாரத்திற்காகவோ, சுற்றுலாவிற்காகவோ, நல்லடியார்களை தரிசிப்பதற்காகவோ, நல்லடியார்களின் புனித ஸ்தலங்களை தரிசிப்பதற்காகவோ, சகோதரர்களை சந்திப்பதற்காகவோ இன்னும் இதுபோன்ற இதர காரணங்களுக்காகவோ பயணம் செய்வதற்கும் இந்த ஹதீதுக்கும் அறவே சம்பந்தமில்லை என்பதாகக் கூறுகின்றனர்."** நூல் : அல் மதீனத்துல் முனவ்வரா, பக்கம்-254.

மேலும் மஸ்ஜித் சம்பந்தமான காரியங்களாயினும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இம்மூன்று மஸ்ஜிதுகளை மட்டும் குறிப்பிட்டுச் சொன்னதன் ரகசியம் என்னவென்று வினவப்பட்டால்,...

عن أبى الدرداء رضى الله عنه قال قال رسول الله صلى الله عليه وآله وسلم الصلاة فى المسجد الحرام بمائة ألف صلاة والصلاة فى مسجدي بألف صلاة والصلاة فى بيت المقدس بخمس مائة صلاة.

**"மஸ்ஜிதுல் ஹராமில் தொழப்படும் ஒரு ரக்அத்திற்கு ஒரு லட்சம் நன்மையும், எனது பள்ளியில் ஆயிரம் ரக்அத்திற்குரிய நன்மையும், மஸ்ஜிதுல் அக்ஸாவில் ஐந்நூறு ரக்அத்திற்குரிய நன்மையும் கிடைக்கும்"** என்ற ஹதீதை பதிலாகச் சொன்னாலும் எல்லா மஸ்ஜிதுகளை விட இம்மூன்று மஸ்ஜிதுகளுக்கு மட்டும் இத்தனை சிறப்புக்கள் எதனால் வந்தது என்ற கேள்வியும் எழுகிறதல்லவா?

இக்கேள்விக்கு பல்வேறு வகையான பதில்கள் இருந்தாலும் இப்படியும் ஒரு பதிலை சொல்லலாம். அதாவது, மூன்று மஸ்ஜிதுகளிலும் வெவ்வேறு வகையான நன்மைகள் கிடைப்பதாக ஹதீதுகள் கூறுவது ஒரு பதிலாகும் என்று சொல்லலாம். அதாவது,...

عن عبد الله عمر بن الخطاب رضى الله عنهما: قال سمعت رسول الله صلى الله عليه وآله وسلم يقول صلاة فى مسجدى هذا أفضل من ألف صلاة فيما سواه إلا المسجد الحرام.

**"மஸ்ஜிதுல் ஹராமைத் தவிர மற்ற பள்ளிகளில் ஆயிரம் ரக்அத்து தொழுவதை விட எனது பள்ளியில் ஒரு ரக்அத் தொழுவது சிறப்பாகும்"** என்பதாகக் கூறும் ஹதீதுக்கு,

(1) மஸ்ஜிதுல் ஹராமில் தொழுவதும், மஸ்ஜிதுன் நபவியில் தொழுவதும் சமமாகும்.

(2) மஸ்ஜிதுல் ஹராமில் தொழுவதை விட மஸ்ஜிதுன் நபவியில் தொழுவது மேலானதாகும்.

(3) மஸ்ஜிதுல் ஹராமில் தொழுவது மஸ்ஜிதுன் நபவியில் தொழுவதை விட சிறப்பாகும்.

(4) மௌனமே சிறந்தது.

இப்படி நான்கு கருத்துக்கள் நிலவுகிறது. இதில் இரண்டாம் கருத்து இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ்வால் சொல்லப்பட்டதாகும். இக்கருத்தை நாம் ஏற்றுக் கொள்வதைப் போல ஏகமனதாகச் சொல்லப்பட்ட மூன்றாவது கருத்தையும் நாம் விட்டுவிட முடியாது. இருப்பினும் ஒருசில ஹதீதுகளை நாம் உங்களின் பார்வைக்கு தருகிறோம். அதைக்கொண்டு உங்களின் முடிவென்னவோ அதுதான் எங்களின் முடிவுமாகும்.



عن أنس بن مالك رضى الله عنه عن النبى صلى الله عليه وآله وسلم قال من صلى فى مسجدى هذا أربعين صلاة لاتفوته صلاة كتبت له برائة من النار ونجاة من العذاب وبريئ من النفاق.

**"எனது பள்ளிவாசலில் நாற்பது நேரத் தொழுகையை நிறைவேற்றுவோர் நரக விடுதலை, கப்ருடைய வேதனை, நயவஞ்சகத்தனம் போன்றவைகளிலிருந்து பாதுகாப்பு வழங்கப்படுகிறார் என்பதாக நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவிலுகின்றனர்."**

நூல்: முஸ்னத் அஹ்மத், பாகம்-4, பக்கம்-401. எண்: 12611. மஜ்மவுஸ் ஸவாயித், பாகம்-4, பக்கம்-4. தப்ரானி அவ்ஸத்.

இந்த ஹதீதுக்குரிய அறிவிப்பாளர் அனைவரும் நம்பிக்கைக்குரியவர்கள் என்பதாக இமாம் ஹைத்தமீ ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர். இன்னும் இந்த ஹதீதில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தமது பள்ளிவாயிலில் தொழுவோருக்கே இச்சன்மானங்கள் எல்லாம் கிடைக்குமென்று கூறுகின்றனர். ஆனால் திர்மிதீ ஷரீபின் கிதாபுஸ் ஸலாத்தி, பாபு மாஜாஅ ஃபீ ஃபழ்லித் தக்பீரத்தில் ஊலா என்னும் பகுதியில்,...

عن أنس بن مالك رضى الله عنه قال: قال رسول الله صلى الله عليه وآله وسلم من صلى لله أربعين يوما فى جماعة يدرك التكبيرة الأولى كتبت له برائتان برائة من النار وبرائة من النفاق.

**"யார் நாற்பது நாட்கள் அல்லாஹ்வுக்காக முதல் தக்பீரைப் பெற்றுக் கொண்டவராக ஜமாஅத்துடன் தொழுகின்றாரோ அவர் நரகம் மற்றும் நயவஞ்சகம் ஆகிய இரண்டிலிருந்தும் உரிமையிடப்படுகிறார் என நபியவர்கள் கூறுகின்றனர் என்பதாகக் கூறப்பட்டுள்ளது."**

ஆதலால் எந்தப் பள்ளியில் தொழுதாலும் அதே சன்மானம் கிடைக்குமெனில் காத்தமுன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பள்ளிக்கு இதில் என்ன விசேஷமிருக்கிறதென்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இதோ நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பள்ளிக்கு என்ன விசேஷமிருக்கிறது என்பதைப் பாருங்கள்.

அ- மற்ற பள்ளிகளில் நாற்பது நாட்களாகும். ஆனால் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பள்ளியில் நாற்பது நேரமாகும். அதாவது எட்டு நாட்களாகும்.

ஆ- மற்ற பள்ளிகளில் முதல் தக்பீருடன் நாற்பது நாட்கள்வரை ஜமாஅத்துடன் தொழ வேண்டும். ஆனால் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பள்ளியில் ஜமாஅத்தோடு தொழ வேண்டுமென்று சொல்லப்படவில்லை.

இ- மற்ற பள்ளிகளில் முதல் தக்பீருடன் நாற்பது நாட்கள் ஜமாஅத்தாக தொழுதாலும் இரு சன்மானம் மட்டுமே வழங்கப் படுகிறது. ஆனால் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பள்ளியில் நாற்பது நேரத் தொழுகையை எப்படித் தொழுதாலும் சரி. இரு சன்மானமல்ல. மாறாக மூன்று சன்மானம் வழங்கப்படுகிறது. ஆதலால் நம்முடைய நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் முபாரக்கான பள்ளியே சிறப்புக்குரியதாகும். இது மட்டுமா?

عن أبى هريرة رضى الله عنه قال:سمعت رسول الله صلى الله عليه وآله وسلم يقول:من جاء مسجدي هذا يعنى مسجد المدينة لم يأته إلا لخير يعلمه أو يتعلمه فهو بمنزلة المجاهد فى سبيل الله

*"யார் எனது பள்ளிவாசலுக்கு நல்லதைக் கற்பதற்காக அல்லது கற்றுக் கொடுப்பதற்காக வருகின்றாரோ அவர் அல்லாஹ்வின் பாதையில் ஜிஹாத் செய்பவருக்குரிய அந்தஸ்த்தில் இருக்கிறார்."*

நூல் : முஸ்னத் அஹ்மத், பாகம்-3, பக்கம்-499. எண் : 9409. இப்னு மாஜா, முஸன்னப் இப்னு அபீ ஷைபா, முஸ்னத் அபீ யஃலா, முஸ்தத்ரக், ஸஹீஹ் இப்னு ஹிப்பான்.

عن أبى هريرة رضى الله عنه عن النبى صلى الله عليه وآله وسلم قال من حين يخرج أحدكم من بيته إلى مسجدي فرجل تكتب حسنة وأخرى تمحو سيئة.

*"தமது வீட்டிலிருந்து எனது பள்ளிக்கு வருபவரின் ஒரு காலடிக்கு ஒரு நன்மை வழங்கப்படுவதோடு அடுத்த காலடிக்கு ஒருபாவமும் அழிக்கப்படுகிறது என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்."*



நூல் : முஸ்னத் அஹ்மத், பாகம்-3, பக்கம்-535. எண் : 9572. ஸுனன் நஸாயீ, முஸ்தத்ரக்.

இந்த ஹதீதை ஸஹீஹானதென இமாம் தஹபியும் ஏற்றுக் கொள்கிறார். இருப்பினும் இச்சிறப்பு மற்ற பள்ளிகளுக்கும் உரியது தான் என்ற போதிலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மஸ்ஜிதுக்கே இது மிகவும் பொருத்தமானதாகும்.

عن سائب بن يزيد رضى الله عنه قال كنت قائما فى المسجد فحصبني رجل فنظرت فإذا عمر بن الخطاب رضى الله عنه فقال إذهب فأتني بهذين فجئته بهما قال من أنتما أو من أين أنتما قالا من أهل الطائف قال لو كنتما من أهل البلد لأوجعتكما ترفعان أصواتكما فى مسجد رسول الله صلى الله عليه وآله وسلم

*"நான் (ஸாயிப் பின் யஸீத் நபியுடைய) மஸ்ஜிதில் நின்று கொண்டிருக்கும் போது என்னை ஒருவர் தட்ட யாரெனப் பார்க்க, அவர்கள் கலீபா ஸெய்யிதுனா உமர் ரழியல்லாஹு அன்ஹு வாகும். அப்போது அவர்கள் என்னிடம் அவ்விருவரையும் அழைத்து வருமாறு சொல்ல, நான் அவர்களை அழைத்து வரவே, யார் நீங்கள்? எங்கிருப்போர் என்று வினவ, அதற்கவர்கள்; தாங்கள் தாயிபைச் சேர்ந்தவர்கள் என்று சொல்ல, அதற்கு கலீபா அவர்கள்; நீங்கள் உள்ளூர்வாசிகளாக இருந்திருப்பின் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மஸ்ஜிதில் குரலை உயர்த்தியதற்காக உங்களை தண்டித்திருப்பேன் எனக் கண்டித்தனர் என்பதாக ஹழ்ரத் ஸாயிப் பின் யஸீத் ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர்."*

நூல் : புகாரி ஷரீப், கிதாபுஸ் ஸலாத், பாபு ரஃப்யிஸ் ஸௌத்தி பில் மஸ்ஜித்.

لاينبغى رفع الصوت على النبى صلى الله عليه وآله وسلم لا حيا ولا ميتا.

*"நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஜீவித்திருக்கும் போதும்சரி. மறைந்த பின்னரும் சரி. அவர்கள் முன் சப்தமாக பேசக்கூடாதென்று ஸெய்யிதுனா ஸித்தீகுல் அக்பர்*

ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர்.''

நூல் : வபாவுல் வபா, அஸ்ஸியாரந் நபவிய்யா, பக்கம்-73.

أن عائشة رضى الله عنها كانت إذا وتد الوتد أو ضرب المسمار فى بعض الدور المطيفة بالمسجد النبى صلى الله عليه وآله وسلم ترسل إليهم أن لاتؤذوا رسول الله صلى الله عليه وآله وسلم.

**''ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மஸ்ஜிதைச் சுற்றியிருந்தோர் (தமது வீடுகளில் அல்லது வியாபார ஸ்தலங் களில்) ஆணி அடிக்கும் சப்தத்தைக் கேட்டால் அல்லது முளைய டிக்கும் சப்தத்தை கேட்டால் கூட நபியவர்களுக்கு துன்பம் கொடுக்க வேண்டாமென சொல்லியனுப்புகின்றவர்களாக அன்னை ஸெய்யிததுனா ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் காணப் பட்டார்கள்.''**

புனித மக்காவில் தவாபு செய்து கொண்டிருக்கும் போதுகூட சப்தமாக தல்பிய்யாவை ஓதும் நாங்கள் புனித மதீனாவில் தேவை யின்றி மட்டுமல்ல. அவசியத்தின் நிமித்தம் கூட உயர்ந்த தொனியில் பேசாதிருக்குமாறு உத்திரவிடப்பட்டுள்ளோம். இச்சிறப்பு இவ்வுல கிலுள்ள எந்தப் பள்ளிக்குமே கிடையாது. இது மட்டுமா?

عن عبد الله بن زيد المازني رضى الله عنه أن رسول الله صلى الله عليه وآله وسلم قال مابين بيتي ومنبري روضة من رياض الجنة.

**''எனது வீட்டுக்கும் எனது மிம்பருக்கும் இடைப்பட்ட இடம் சுவர்க்கத்து பூங்காக்களில் ஒன்றாகும் என்பதாக திங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்.''**

நூல் : புகாரி ஷரீப், கிதாபு ஃபழ்லிஸ் ஸலாத்தி ஃபீ மஃஸ்ஜிதி மக்கா வல் மதீனா. பாபு ஃபழ்லி மா பைனல் கப்ரி வல் மிம்பரி, முஸ்லிம் ஷரீப் கிதாபுல் ஹஜ், பாபு மா பைனல் கப்ரி வல்மிம்பரி.

عن أبى هريرة رضى الله عنه عن النبى صلى الله عليه وآله وسلم قال مابين بيتي ومنبري روضة من رياض الجنة ومنبرى على حوضي

**''எனது வீட்டுக்கும் எனது மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சுவர்க்கப் பூங்காவாகும். எனது மிம்பரானது ஹௌளுல் கௌஸர்**



**மீதுள்ளது என்பதாகவும் ஏந்தல் நபியவர்கள் கூறுகின்றனர்.''** நூல் : புகாரி ஷரீப், முஸ்லிம் ஷரீப்.

வீட்டுக்கும் மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சுவர்க்கப் பூங்கா வென நபியவர்கள் சொன்னதுபோல, எனது கப்ருக்கும் மிம்ப ருக்கும் இடைப்பட்ட பகுதி சுவர்க்கப் பூங்காவென்றும், எனது அறைக்கும் மிம்பருக்கும் இடைப்பட்ட பகுதி சுவர்க்கப் பூங்கா வெனச் சொன்னதாகவும் ஹதீதுகள் பதிவாகியுள்ளதை காணலாம்.

எப்படிச் சொன்னாலும் சரி. நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வீடுதான் அறையாகும். அந்த அறைதான் கப்ருமாகும் என்பது நமக்குத் தெரிந்ததே. இது இப்பூமியில் எந்த வொரு இடத்திற்கும் வழங்கப்படாத ஒரு உன்னதமான சிறப்பாகும்.

இனி நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் குறிப் பிட்ட ஓர் இடத்தை சுவர்க்கப் பூங்கா எனச் சொன்னதற்கு,...

அ- அல்லாஹ்வின் பேருபகாரம் இறங்கும் விஷயத்தில் இந்த இடம் சுவர்க்கத்திற்கு ஒப்பாக பேசப்பட்டுள்ளதாக சிலரும்,

ஆ- இந்த இடத்தில் வணங்குவதானது சுவர்க்கம் செல்வதற்கு ஒரு காரணமாக அமைவதால் (மஜாஸ்) ரீதியில் பேசப்பட்டதாக வேறு சிலரும்,

இ- ஹஜ்ருல் அஸ்வத், நைல்நதி, புராத் நதி போன்றவை சுவர்க் கத்திலிருந்து கொண்டு வரப்பட்டதைப் போல இந்த இடமும் உண்மையிலேயே சுவர்க்கம் தான் என்று சிலரும்,

ஈ- இந்த இடம் நாளை மறுமையில் சுவர்க்கத்திற்கு திருப்பப்படும் என்பதால் இவ்வாறு சொல்லப்பட்டதாக சிலரும் கூறுகின்றனர்.

எப்படி இருப்பினும் நாம் சொல்ல விரும்புவது யாதெனில், நிச்சயமாக அந்த இடம் (இ) வில் சொல்லப்பட்டதைப் போல சுவர்க்கமே தான். நாளை மறுமையில் சுவர்க்கத்திற்கு மீண்டுவிடும் என்பதேயாகும். வல்லாஹு வரஸூலுஹு அஃலம்.

அடுத்து எனது மிம்பரானது ஹௌளின்' மீதுள்ளதெனச் சொல்லப்பட்டதற்குரிய விளக்கமானது, நாளை மறுமையில் அந்த மிம்பர் ஹௌளின் மீது நிறுத்தப்படும். அத்துடன் நாயகம் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அம்மிம்பரில் தமது முபாரக் கான திருப்பாதங்களை வைத்ததால் அதற்குக் கிடைத்த சன்மான

மாகும் இது.இதுவும் நாளை மறுமையில் அதே அமைப்பில் நிலை நிறுத்தப்படும் என்பதே உண்மையாகும். அத்துடன் தனது பாதத்தை சுமந்த மிம்பருக்கு நபிகள் நாதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களால் வழங்கப்பட்ட இன்னொரு மகத்துவத் தையும் பாருங்கள்.

عن جابر بن عبد الله رضى الله عنهما أن رسول الله صلى الله عليه وآله وسلم قال من حلف على منبرى بيمين آثمة تبوأ مقعده من النار.

**"யார் எனது மிம்பரின் முன் பொய் சத்தியம் செய்கிறாரோ அவர் நரகத்தில் தமக்கென ஓரிடத்தை ஒதுக்கிக் கொண்டவராவார் என்பதாக முஸ்ஸம்மில் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்."**

இதனை இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் முஅத்தா கிதாபுல் அக்ழியாஃ பாபு மாஜாஅ ஃபில் ஹின்தி அலா மிம்பரின் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்பதிலும், இமாம் ஷாபி அல் உம்மிலும், முஸ்னத் இமாம் ஷாபியிலும், இமாம் ஹாக்கிம் அவர்கள் தமது அல் முஸ்தத்ரக் பாகம்-4, பக்கம்-330லும் பதிவு செய்துள்ளதோடு ஸஹீஹானதென்று சொல்வதை இமாம் தஹபி ரஹிமஹுல்லாஹ் அவர்களும் ஸஹீஹ் என்கிறார்கள். இன்னும் இப்னு ஹிப்பான், பாகம்-10, பக்கம்-210லும் இந்த ஹதீத் பதிவு செய்யப்பட்டுள்ளது. மேலும் இது தொடர்பான ஹதீத் சுனன் அபீதாவூத், சுனன் நஸாயீ, முஸ்னத் அஹ்மத், சுனன் இப்னி மாஜா, முஸன்னப் இப்னு அபீ ஷைபா, துஹ்பத்தில் அஷ்ராப் போன்றவற்றிலும் வெவ்வேறு விதமாகப் பதிவாகியுள்ளது.

عن أبى أمامة بن سهل بن حنيف رضى الله عنهما عن أبيه قال قال النبى صلى الله عليه وآله وسلم من خرج على طهر لايريد الا مسجد قباء ليصلي فيه كان بمنزلة عمرة ومن خرج على طهر لايريد إلا مسجدي هذا يريد مسجد المدينة ليصلي فيه كان بمنزلة حجة.

**"யார் சுத்தத்தோடு குபாவுடைய மஸ்ஜிதில் தொழும் எண்ணத் தில் மட்டும் வெளியாகுவாரோ அவர் உம்ராவை நிறைவு செய்த**



**வரைப் போலவும், எனது பள்ளியை நாடிச் செல்பவர் ஹஜ்ஜின் பிரதிபலனையும் பெற்றவராகிறார் என்பதாக பாராளும் பயகம்பர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறுகின்றனர்."**

நூல் : தாரீகுல் கபீர், பாகம்-8, பக்கம்-379.

இந்த ஹதீதை அறிவித்தவர்களில் யூசுப் பின் தஹ்மான் என்பார் இடம் பெறுகிறார். இவரது தகவலை இமாம் புகாரி பதிவு செய்ததோடு இவரைப்பற்றி எந்தக் குறையும் கூறவில்லை. இவ்வாறே இப்னு ஹிப்பான் அவர்கள் தமது துகாத்திலும், இப்னு அத்தீ அவர்கள் அல் காமிலிலும், இமாம் உகைலி அவர்கள் அழ்ழுஅபாவிலும் பதிவு செய்துள்ளார்கள். அத்துடன் இந்த ஹதீதை வேறுபல அறிவிப்பாளர்களும் அறிவிப்பதால் இது ஹஸன் என்னும் தரத்திற்குரிய ஹதீதாகும்.

இவ்வாறு இன்னும் எத்தனையோ சிறப்புக்குரிய ஹதீதுகளை ஆதாரமாக எடுத்துக்காட்ட முடியும். ஆதலால் இப்படிப்பட்ட சிறப்புக்கள் இப்பூமிலுள்ள வேறு எந்த மஸ்ஜிதுக்கும் வழங்கப் படாததால் ஸுன்னத் வல் ஜமாஅத்தினர் மஸ்ஜிதுன் நபவியை மேன்மைபடுத்தி பேசுகின்றனர். இன்னும் இத்தகைய மகத்துவம் மற்ற இரு இடங்களுக்கும் இருப்பதால் அதற்குரிய சிறப்புக்களைப் பெற்றுக்கொள்ள அங்குதான் செல்ல வேண்டும். அதற்காக பயணம் செய்ய வேண்டுமானாலும் செய்யலாம். அந்த சிறப்புக்களை உலகிலுள்ள வேறு பள்ளிவாசல்களிலும் பெற்றுக்கொள்ள முடியுமெனக் கருதி பயணம் செய்யக் கூடாது என்பதுதான் மூன்று மஸ்ஜிது களை குறித்த ஹதீதுக்குரிய கருத்தாகும். எனவே மூன்று மஸ்ஜிதுகள் பற்றிய ஹதீத் மஸ்ஜிதுகளை மட்டும் குறிக்கின்ற ஒன்றேயன்றி வேறு காரணங்களுக்காக அல்ல என்பதாக முன்னால் நாம் சொன்னதை மீண்டும் உங்களின் நினைவுக்குக் கொண்டு வருவதோடு, அருள் கூர்ந்து இந்த ஹதீதை ஒட்டு மொத்தமாக ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தரிசிப்பதற்காக பயணம் செய்தல் என்னும் பிரச்சினையோடு தொடர்புபடுத்த வேண்டாமென பணிவுடன் கேட்டுக் கொள்கிறோம்.

## எனது கப்ரை பெருநாளாக ஆக்க வேண்டாம்

ரஸூலே அக்ரம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தரிசிப்பதற்காக என்ற ஒரே எண்ணத்தில் பயணம் செய்வதற்கும், இதற்கு முன்னால் சொல்லப்பட்ட மூன்று மஸ்ஜிதுகள் பற்றிய ஹதீதுக்கும் அறவே தொடர்பில்லை என படித்துப் படித்து சொன்ன

பிறகும் வேண்டுமென்றே அந்த ஹதீதோடு தொடர்புபடுத்தி பயணம் செய்யக் கூடாதெனச் சொல்வதை போல அடுத்து வரும் ஹதீதையும் ஸியாரத்துச் செய்வதற்கென பயணம் செய்தல் கூடா தென்பதற்கு பயன்படுத்துவது மிகுந்த மனவேதனையை தருகிறது.

இந்த ஹதீத்சுனன் அபீதாவூத்கிதாபுல் மனாஸிக், பாபு ஸியாரத்தில் குபூரி, முஸ்னத் அஹ்மத், பாகம்-3, பக்கம்-365ல் ஹழ்ரத் ஸெய் யிதுனா அபூஹுரைரா ரழியல்லாஹு அன்ஹுவின் வாயிலாக பின்வருமாறு பதிவாகியுள்ளது. அதாவது,...

قال رسول الله صلى الله عليه وآله وسلم لاتجعلوا بيوتكم قبورا ولاتجعلوا قبري عيدا وصلوا عليّ فإن صلاتكم تبلغني حيثما كنتم

***"உங்களின் இல்லங்களை கப்ரஸ்தானாக ஆக்கி விடாதீர்கள். இன்னும் எனது கப்ரை பெருநாளாகவும் ஆக்கி விடாதீர்கள். என்மீது ஸலவாத்து சொல்லுங்கள். நீங்கள் எங்கிருந்து ஸலவாத்து சொன்னாலும் அது என்னை வந்தடையும் என்பதாக ஏந்தல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறினர்."***

ஒரு ஹதீதை அறிவிக்கும் அறிவிப்பாளர்களில் ஒருவரை, ஒரு பெரியார் ழயீபானவர் என்று சொல்லிவிட்டாலே அதை உடனே ழயீபென அழுத்தமாகச் சொல்லும் பழங்குடி வழக்கத்தை சார்ந்தோரிடம் இந்த ஹதீதை அறிவித்தவர்களில் ஒருவரான அப்துல்லாஹ் பின் நாபிஃ என்பாரை இமாம் அஹ்மதும், அபூ ஹாத்திம் அர்ராஸி அவர்களும் ழயீபானவர் என்றும், அதேநேரம் இப்னு முயீன் அவர்கள் ஸிகத்தானவர் என்றும், அபூ ஸுர்ஆ அவர்கள் லா பஃஸ பிஹி என்றும் இன்னும் இதை ஏற்றுக் கொள்வதற்கு பல் வேறு அத்தாட்சிகள் இருப்பதாகவும் கூறுகின்றனர்.

சகோதரர்களே! எப்போதும் நாம் அழுத்தமாகச் சொல்லும் காரணங்களை அல்லவா இவர்கள் தமக்குத் தோதான நேரத்தில் கொண்டு வருகின்றனர். இது எந்த வகையில் நியாயம்?

பின்னும் இதுவரை இந்நூலில் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்ட 'ஸியாரத்துச் செய்தவனுக்கு எனது ஷபாஅத் நிச்சயமாகி விட்டது' என்ற ஹதீதை அறிவித்தோரில் மூஸா பின் ஹிலால், ஸாலிமுல் ஜுஹனீ போன்றோரை சிலர் குறை கூறினாலும் வேறுசிலர் அவர்களை பரிசுத்தப்படுத்தியுள்ளதையும், அதற்கு வேறுபல அத்தாட்சிகள் இருப்பதையும் நாம் எடுத்துக் காட்டினோம். அதை இவர்கள்



ஏற்றுக் கொள்வதாக இல்லையாதலால் எங்களுக்கு நபியவர்களின் ஷபாஅத்துத் தேவையில்லை என்ற கருத்தையே இவர்கள் மறை முகமாக உறுதிப்படுத்துகின்றனர். இல்லையென்றால் ஸியாரத்தை ஆதரிப்பதாக சொல்லும் இவர்கள் அதற்காக பயணம் செய்வதை கூடாதென்று மறுக்க மாட்டார்கள்.

அடுத்து இந்த ஹதீதில் நபியவர்களே தமது கப்ரை பெருநாளாக ஆக்கி விடாதீர்கள் எனக் கூறியிருப்பதால் தான் நாங்கள் கூட்டங் கூட்டமாக ஸியாரத்துச் செய்யும் எண்ணத்தில் செல்வோரைத் தடுக்கிறோம் என்கின்றனர். நாம் இவர்களிடம் கேட்கும் ஒரேயொரு கேள்விக்கு மட்டும் இவர்கள் பதில் சொல்லட்டும். அதாவது,...

உங்களுடைய வீட்டை கப்ரஸ்தானாக ஆக்கி விடாதீர்கள் என்று சொன்ன ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களே தமது வீட்டில் தன்னுடைய கப்ரை ஏன் அமைத்துக் கொண்டார்கள்? பதில் சொல்லட்டும் பார்ப்போம். இனி இந்த ஹதீதுக்கு பெரியார்கள் தரும் விளக்கத்தை பார்த்து அதன்பின் எதிர்தரப்பாரின் கருத்தைப் பற்றிய ஒரு முடிவுக்கு வாருங்கள்.

உங்கள் இல்லங்களை இறந்தவர்கள் வசிக்கும் கப்ருகளாக ஆக்கி விடாதீர்கள். நீங்கள் உங்களது மண்ணறைகளிலிருந்து மற்றவர்களுக்கு உதவி ஏதும் செய்ய முடியாது. ஆதலால் நீங்கள் உங்களது இல்லங்களை மற்றவர்களுக்கு உதவியும் உபகாரமும் செய்யும் வண்ணம் அமைத்துக் கொள்ளுங்கள். இன்னும் இது உங்களுக்குத் தானேயன்றி எனக்கல்ல. ஏனெனில் என்னால் உங்களுக்கு இருஉலகிலும் பிரயோஜனமுண்டு. அது மட்டுமல்ல. என்னை உங்களோடு ஒப்பிட்டுப் பார்க்காதது போல எனது கப்ரையும் வருடத்திற்கு இரண்டு முறை வந்து செல்லும் பெருநாளைப் போன்றும் ஆக்கி விடாதீர்கள். ஏனெனில் அப்பெரு நாட்கள் வரும்போது தான் நீங்கள் உங்களது சொந்தங்களையும் பந்தங்களையும் சந்திக்கிறீர்கள். அப்படி இல்லாமல் உங்களுக்கு சந்தர்ப்பம் வாய்க்கும் போதெல்லாம் என்னை வந்து தரிசித்துக் கொண்டேயிருங்கள். இன்னும் நான் உங்களால் சொல்லப்படும் ஸலவாத்துக்களை எனது அருகில் வந்து சொன்னால் தான் நான் தெரிந்து கொள்கிறேன் என்றும் நினைக்காதீர்கள்.

மேலும் என்னிடம் வருவோர் அவ்வருகையை ஒரு வணக்கமாகக் கருதி நல்ல அமல்கள் செய்திட வேண்டுமேயல்லாது வேதக்காரர்களைப் போல உங்களது வருகையை ஒரு களியாட்டமாக ஆக்கி விடாதீர்கள். அத்துடன் நாம் அல்லாஹ்வுடைய ரஸூலுக்கு

முன்னுல் ஆஜராகியுள்ளோம். அவர்கள் நமது கண்களுக்கு புலப்படா விட்டாலும் அவர்கள் நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கிறுர்கள் என்னும் திடமான நம்பிக்கையோடு சப்தமிட்டு அழாமல், முகத்தில் அடித்துக் கொள்ளாமல், தன்னை மறந்த நிலையில் ஆவேசத்தில் செய்யப்படும் எனக்கு விருப்பமில்லாத காரியத்தை செய்யாதீர்கள். எந்தவொரு நிலையிலும் உங்களின் மதியை இழந்து விடாதீர்கள் என்றுதான் விளக்கமளிக்கின்றனர்.

ஆக சுருங்கக் கூறின் இந்த ஹதீத் அதிகமதிகம் ஸியாரத்துச் செய்வதைத்தான் தூண்டுகிறதேயல்லாமல் அதற்காக பயணம் செய்வதை ஒரு பாவமான காரியமென்று சொல்லவில்லை. மாறுக இந்த வஞ்சகர்கள் தான் தமது சுய விருப்புக்காக இப்படியொரு விளக்கத்தை உருவாக்கிக் கூறுகின்றனர். இன்னும் இது இப்னு தைமிய்யா எனும் ஒரு தனி நபரின் கீழ்த்தரமான செயலில் விளைந்த விபரீதமாகும். எல்லாம் வல்ல அல்லாஹ் இவர்களின் தீங்குகளி லிருந்து நம்மைப் பாதுகாப்பானுக என பாதுகாவல் தேடியவர் களாக இது சம்பந்தமான இன்னெரு ஹதீதையும் இப்போது பார்ப்போம்.

## எனது கப்ரை வணக்கஸ்தலமாக ஆக்கி விடாதீர்

இந்த நபிமொழியும் இதற்கு முன் சொல்லப்பட்ட மூன்று பள்ளிகள் தொடர்பான ஹதீதும் எனது கப்ரை பெருநாளாக ஆக்கி விடாதீர்கள் என்னும் ஹதீதும் வேண்டுமென்றே காழ்ப்புணர்வின் காரணமாக ஸியாரத்திற்காக பயணம் செய்வதைத் தடுப்பதற்காக கங்கணம் கட்டிக்கொண்டு ஆதாரப்படுத்தப்பட்டதைப்போல இதையும் ஆதாரமாகக் காட்டுகின்றனர்.

இன்னும் இந்த ஹதீத் முஸ்னத் அஹ்மத், பாகம்-3, பக்கம்-54. எண் : 7352. முஅத்தா இமாம் மாலிக், கிதாபுஸ் ஸலாத், பாபு ஜாமியிஸ் ஸலாத்தி, பாகம்-1, பக்கம்-351ல் முர்ஸலான வழியிலும் பதிவாகியுள்ளது. அதாவது,...

اللهم لاتجعل قبري وثنا لعن الله قوما إتخذوا قبور أنبيائهم مساجد

*"யா அல்லாஹ்! எனது கப்ரை பூஜிக்கப்படும் இடமாக ஆக்கி விடாதே. இன்னும் நபிமார்களின் கப்ருகளை மஸ்ஜிதுகளாக்கிய சமுதாயத்தின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக எனப்*



**பிரார்த்தித்தார்கள் நமது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல் லமவர்கள்."** இது முஸ்னத் அஹ்மதில் பதிவாகியுள்ள சொற்றொடர் களாகும்.

இன்னும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர் களின் சமுதாயத்தினர் மற்ற நபிமார்களின் சமுதாயத்தினரைப் போல கப்ருகளை வணங்குகின்றவர்களாகி விடுவார்களோ என எதற்காக பயந்தார்களோ அதையே சுன்னத் வல் ஜமாஅத்தினர் செய்து கொண்டுள்ளனர். ஆகையால் தான் ஸியாரத்திற்காக பயணம் செய்வதை தடுக்கிறேம் என்கின்றனர் எதிர்தரப்பார். வஹ்ஹாபிஸம் ஒழிக! ஒழிக! ஒழிக!

இப்போது அறிஞர் பெருமக்கள் தருகின்ற விளக்கத்தைப் பாருங்கள். நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பொன்மொழிகளுக்கு இந்த நன்மக்கள் தருகின்ற விளக்கத்தோடு அவ்வஞ்சகர்களின் விளக்கத்தையும் ஒரு சராசரியான சிந்தனை கொண்டே ஒப்பிட்டுப் பாருங்கள். எது உண்மை என்பது உங்க ளுக்குத் தானுகவே விளங்கும்.

புகாரி ஷரீபின் கிதாபுஸ் ஸலாத்தி பாபுஸ் ஸலாத்தி ஃபில் பீயத்தி - தேவாலயங்களில் தொழுதல் என்னும் பாடத்தை எடுங்கள். அதில் ஸெய்யிதுனு உமருடையவும், ஸெய்யிதுனு இப்னு அப்பா ஸுடையவும் தகவல் நமக்கு இப்படிச் சொல்லித் தருகிறது. அதாவது,...

"நாம் உங்களுடைய தேவாலயங்களில் உருவச் சிலைகள் இருப் பதால் அங்கே நுழைய மாட்டோம். அதாவது அங்கே உருவச் சிலைகளை நீங்கள் வைத்துக்கொண்டு அதற்கு ஸஜ்தா செய்வதால் அங்கே நுழையவோ தொழவோ மாட்டோம்" என ஸெய்யிதுனு உமரும், உருவச் சிலைகள் இல்லையென்றுல் அங்கே தொழுதிருப் பார்களா எனில் உருவச் சிலைகள் இல்லாத தேவாலயங்களில் ஹழ்ரத் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் தொழுதிருக்கிறுர்கள். அதற்கடுத்து பின்வரும் ஹதீதுகளும் பதிவாகி யுள்ளது. அதாவது,...

أولئك قوم إذا مات فيهم العبد الصالح أو الرجل الصالح بنوا على قبره مسجدا وصورا فيه تلك الصور أولئك شرار الخلق عند الله.

***"யூதர்களும் நஸாராக்களும் தமது தோழர்களிலுள்ள ஒரு நல்லடியார் (அவர் அவர்களுக்கு அனுப்பப்பட்ட நபியாகவோ, அல்லது அந்நபியை விசுவாசித்த நல்லடியாராகவும் இருக்கலாம்) இறந்து விட்டால் அவரது கப்ரை வணக்கஸ்தலமாக ஆக்குவதுடன் அவரது உருவத்தை சிலையாகவும் வடித்து அங்கே வைத்துக் கொள்வர். இவர்கள் தான் அல்லாஹ்விடம் மிகமோசமான படைப்புக்களாகும்."*** இன்னும்,...

لعنة الله على اليهود والنصارى إتخذوا قبور أنبيائهم مساجد.

*"தமது நபிமார்களின் மண்ணறைகளை வணக்கஸ்தலமாக ஆக்கிக்கொண்ட யூதர்களையும் நஸாராக்களையும் அல்லாஹ் சபிப்பானாக."* இன்னும்,...

قاتل الله اليهود إتخذوا قبور أنبيائهم مساجد.

***"தமது நபிமார்களின் மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கிக்கொண்ட யுதர்களை அல்லாஹ் நாசமாக்குவானாக"*** என்றெல்லாம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பிரார்த்தனை புரிந்துள்ளார்கள்.

இந்நபிமொழிகளில் யூதர்களும் நஸாராக்களும் தங்களின் நபிமார்களை அல்லாஹ்வுடைய புதல்வர்களென்றும், உறவினர்களென்றும் கருதினர். அதனால்தான் அவர்கள் மறைந்த பின் அவர்களது மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கியது மட்டுமல்லாமல் அவர்களுக்கென ஒரு உருவத்தையும் சிலையாக வடித்து அச்சிலையை வணங்கி வந்தனர். இதனை நபியவர்கள் மிக வண்மையாக கண்டித்தார்கள். அப்படிப்பட்ட கப்ருகளை எல்லாம் சமப்படுத்துமாறு கட்டளையும் இட்டார்கள்.

அத்துடன் இந்த நிலை தனது சமுதாயத்திலும் ஏற்பட்டு விடக்கூடாதென ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் விரும்பினார்கள். அவ்விருப்பத்தை பூர்த்திசெய்து தருமாறு அல்லாஹ்விடம்,..

***"யூதர்களும் நஸாராக்களும் தமது நபிமார்களின் கப்ருகளை வணக்கஸ்தலமாக ஆக்கிக் கொண்டதைப் போல யா அல்லாஹ்! எனது கப்ரையும் ஆக்கிவிடாதே என்பதாக பிரார்த்திக்கிறார்கள்."***

இப்போது நீங்களே சொல்லுங்கள். நபிமார்களின் பிரார்த்தனை



இறைவனால் அங்கீகரிக்கப்படுமா இல்லையா என்பதிலே உங்களில் யாருக்காவது சந்தேகமுண்டா? இவ்வாறான சந்தேகம் முஃமின் களது உள்ளத்தில் எழலாமா?

மேலும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு கப்ரு ஷரீப் மற்ற நபிமார்களின் கப்ருகளைப் போலவோ, நபியவர்களின் சமுதாயத்தினர் மற்ற நபிமார்களின் சமுதாயத்தினர்களைப் போலவோ இல்லை என்பதில் நபியவர்கள் எவ்வளவு நம்பிக்கைக் கொண்டிருந்தார்கள் என்பதை அடுத்து வரும் ஹதீத் தெளிவுபடுத்துவதைப் பாருங்கள்.

إني والله ماأخاف عليكم أن تشركوا بعدى.

***"திடனாக அல்லாஹ்வின் மீதாணையாக எனக்குப்பின் நீங்கள் ஷிர்க் செய்வீர்கள் என்பதைக் குறித்து நான் அஞ்சவில்லை என்கிறார்கள் நாயகத் திருமேனி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்."*** இதுவும் புகாரி முஸ்லிமில் பதிவாகியுள்ள ஹதீதுதான்.

எனவே நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஒவ்வொரு வாக்கும் அமுத வாக்காகும். கண்டிப்பாக எனது சமுதாயத்தினர் எனக்குப்பின் ஷிர்க் செய்யவே மாட்டார்கள் எனக் கூறியது மட்டுமல்லாமல் அல்லாஹ்வின் மீது சத்தியமும் செய்து கூறுகின்றனர். அத்துடன் அந்த நம்பிக்கைக்கு பின்வருமாறும் வலுவூட்டுகின்றனர்.

யூதர்களும் நஸாராக்களும் தமது நபிமார்களின் மண்ணறைகளை வணக்கஸ்தலங்களாக ஆக்கி அதற்கு ஸுஜூதும் செய்து வந்தனர். ஆனால் நான் எனது கப்ரை வணக்கஸ்தலத்திற்குள்ளேயே அமைத்துக் கொண்டாலும் கூட எனது சமுதாயத்தினர் முந்திய சமுதாயத்தினரைப் போல எனது கப்ரை வணக்கஸ்தலமாக ஆக்க மாட்டார்கள் என்னும் திடமான நம்பிக்கையில் தம்மை மஸ்ஜிதுக்குள்ளேயே நல்லடக்கம் செய்யுமாறு உத்திரவிட்டார்கள். அதை இன்றும் நாம் கண்கூடாகப் பார்த்துக் கொண்டிருக்கிறோம்.

இதுமட்டுமா? இன்னொரு இடத்திற்குச் சென்று அல்லாஹ்வை வணங்குவதைக் கொண்டு அவனது நெருக்கத்தையும் திருப்தியையும் பெற விரும்புவோர் எனது பள்ளிக்கும் வரவேண்டும். எனது பள்ளியைப் போன்று இப்பூமியிலுள்ள எந்தப் பள்ளியும் இல்லையாதலால் எனது பள்ளிக்கு வருவதை அல்லது என்னை

வந்து தரிசிப்பதை ஒரு சடங்காக ஆக்கி விடாமல் உங்களுக்கு இயன்ற போதெல்லாம் என்னை வந்து சந்தியுங்கள் என்றும் உற்சாகமூட்டுகிறார்கள்.

ஆனால் என்னசொல்ல? அகக்குருடர்கள் சிலர் கப்ருகளில் ஷிர்க் செய்யப்படுவதாகவும், கப்ருகளை வணங்கப்படுவதாகவும், ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் கப்ருக்கு அருகே பல ஷிர்க்குகள் நிகழ்வதாகவும் தானாகவே எண்ணிக்கொண்டு அவைகளிலிருந்து இச்சமுதாயத்தை பாதுகாப்பதற்காகவே ஸியாரத்துச்செய்ய பயணம்செய்வதையும் கப்ருகள் மீது குப்பாக்கள் கட்டுவதையும் நாங்கள் எதிர்க்கிறோம் என்கின்றனர். யார் இவர்கள்? நமக்கும் இவர்களுக்கும் என்ன தொடர்பு?

நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் எனது சமுதாயத்தினர் எனக்குப்பின் ஷிர்க் செய்யவே மாட்டார்கள் எனக்கூறிய பிறகும் கப்ரை முத்தமிடுவதை ஷிர்க்கென்று இவர்கள் எப்படிக் கூறுகின்றனர்? இதுமட்டுமா? கப்ரில் பூ போடுவதை, போர்வை போர்த்துவதை, எண்ணெ ஊற்றுவதை எல்லாம் ஷிர்க் ஷிர்க்கென்று ஒப்பாரி வைக்கிறார்களே! இதன் மூலம் இவ்வாறு செய்பவர்களை எல்லாம் யூதர்களுக்கும் நஸாராக்களுக்கும் ஒப்பிட்டுப் பேசுகிறார்களே! இந்த அதிகாரத்தை இவர்களுக்கு தந்தவர்கள் யார்? நபியவர்களே தராத ஒரு அதிகாரத்தை இவர்கள் கண்டிப்பாக நபியிடமிருந்து பெற்றிருக்கவே முடியாதெனில் இதை யூதர்களிடமிருந்தும் நஸாராக்களிடமிருந்தும் தான் இவர்கள் பெற்றிருக்க வேண்டும். ஆகையால் இவர்கள் நம்மைச் சார்ந்தவர்க ளல்ல. பின்னும் இப்படிப்பட்ட காரியங்களை நாயகம் ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லமவர்களோ அவர்தம் தோழர் பெருமக் களோ செய்யவில்லையெனக் கூறப்பட்டாலும் இவைகளெல்லாம் ஷிர்க்கென்றோ அல்லது செய்யக் கூடாதென்றோ எங்கே எப்போது சொன்னார்கள்?

குர்ஆனிலும் ஹதீதிலுமுள்ள வாக்கியங்களுக்கு இதுதான் கருத் தென்று நமது பெரியோர்களில் யாராலும் சொல்லப்படாத ஒரு புதியதொரு விளக்கத்தை யார் சொன்னாலும் அவர்கள் கொடிய வர்கள் என்பது மட்டுமல்ல. மாறாக தஜ்ஜாலின் சிநேகிதர்கள் என்பதை நீங்கள் புரிந்து கொள்ளத் தவறாதீர்கள். இத்தனை எச்சரிக் கைக்குப் பிறகும் அவர்களுடன் உறவு கொள்வோமாயின் இது அவர்களின் பலவீனமேயன்றி வேறென்னவென்று சொல்ல முடி யும்? அல்லாஹ்வே சகலவற்றையும் சுயமாக நன்கு அறிந்தவன்.



"நிச்சயமாக உங்களுடைய நாட்களில் வெள்ளிக்கிழமை சிறந்த நாளாகும். அந்த நாளில்தான் ஹழ்ரத் ஸெய்யிதுனா ஆதம் அலைஹிஸ் ஸலாமவர்கள் படைக்கப்பட்டார்கள். இன்னும் அந்த நாளில்தான் சூர் ஊதப்படுவதும், மறுமைநாள் உண்டாவதும் நிகழும். ஆதலால் அந்த நாளில் என்மீது அதிகமதிகம் ஸலவாத்து சொல்லுங்கள். திடனாக உங்களால் சொல்லப்படும் ஸலவாத்தானது எனக்குக் காட்டப்படுகிறது என்பதாக அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் கூறியபோது, அல்லாஹ்வுடைய ரஸூலே! நீங்கள் (நவூதுபில்லாஹ்) மண்ணோடு மண்ணாகி மக்கிப் போன பின் எங்களுடைய ஸலவாத்து உங்களுக்கு எப்படிக் காட்டப்படும்? என்றொருவர் கேட்க, அதற்கு நபியவர்கள்; திடனாக அல்லாஹ் நபிமார்களின் தேகங்களை சாப்பிடுவதை மண்ணுக்கு ஹராமாக்கி விட்டான் என்று கூறினர்."

பார்க்க: ஸுனன் இப்னுமாஜா, 2-290, எண்: 1636, 1637. ஸுனன் நஸாயி, 3-101, எண்: 1373. ஸுனன் அபீதாவூத், 3-260, எண்: 1043. ஸுனன் தாரமி, எண்: 1580. ஸஹீஹ் இப்னு ஹிப்பான், 3-190, எண்: 910. முஸ்னத் அஹ்மத், 5-542, எண்: 16262. ஸுனன் பைஹகீ, தப்ரானி, முஸ்தத்ரக், 1-413.

இந்த ஹதீதை இமாம் ஹாகிம் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இமாம் புகாரி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் நிபந்தனைக்கேற்ப ஸஹீஹான ஹதீதெனக் குறிப்பிட்டுள்ளதை இமாம் தஹபியும் ஏற்றுக் கொள்கின்றனர்.

ஹதீதுக்கலையில் தேர்ச்சிபெற்ற மூத்த அறிஞர்களென போற்றப் படும் அறிஞர்களெல்லாம் பதிவு செய்துள்ள இந்த ஹதீதை ஆதார மாகக் கொண்டுதான்,...

"எனது மறைவுக்குப் பின் யார் என்னை தரிசிக்கிறாரோ அவர் என்னை உயிரோடுள்ள காலத்தில் சந்தித்தவரைப் போலாவார். அத்துடன் யார் என்னை தரிசித்தாரோ அவருக்கு நான் நாளை மறுமை யில் சாட்சியாகவும் ஷபாஅத்துச் செய்பவனாகவும் இருப்பேன்"

என்னும் ஜர்ஹ் செய்யப்பட்ட அறிவிப்பாளர்களால் அறிவிக்கப் பட்ட இந்த நபிமொழியையும், நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஜீவியத்தோடு இருப்பதால் ஹஜ்ஜுக்காக செல்வோர் மக்கா சென்று நபியுல்லாஹ் அவர்களை தரிசிக்காது நாடு திரும்புபவனை பார்த்து அவன் நபியவர்களை வெறுப்பவன் என்று மௌலவி அல்ஹாஜ் ஸில்மி அஸ்ஹரி அவர்களால் எடுத்துக்

காட்டப்பட்ட ஹதீதை ஏற்றுக்கொள்வதில் என்ன ஆட்சேபனை இருக்க முடியும்? இதற்கு இவர்கள் பதில் தருவார்களா?

ஹஜ்ஜுக்காக செல்பவன் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை தரிசிக்காமல் நாடு திரும்புபவன் நபியவர்களை வெறுப்பவனாகும் என்னும் ஹதீதை அறிவிப்பாளர்களை காரணம் காட்டி அந்த ஹதீதை பொய்யாக்க முனைபவர்கள் நபியவர்கள் ஜீவியத்தோடு இருக்கிறார்கள் என்பதையும் அப்பட்டமாகப் பொய்யாக்குகின்றனர். இக்கருத்தை மறுப்போர் எதார்த்தத்தில் குர்ஆனையும் ஹதீதையும் தான் மறுக்கின்றனர். இனி குர்ஆன் ஹதீதை மறுப்பவர்கள் யார் தெரியுமா?

இனிய ஹாஜிகளே!

அல்லாஹ்வின் பேருபகாரத்தை கொண்டு இஸ்லாத்தின் இறுதிக் கடமையான புனிதமிகு ஹஜ்ஜை நிறைவேற்ற புண்ணிய பூமிக்கு ஆஜராகி உள்ளீர்கள். அடுத்து வரும் ஆண்டுகளில் இவ்வாய்ப்பு கிடைக்குமா என்பதை சொல்லமுடியாவிட்டாலும் மீண்டும் மீண்டும் அதற்கான வாய்ப்பை தருமாறு அல்லாஹ்விடம் பிரார்த்திப்போமாக. ஹஜ்ஜுக்காக செல்வோர் அதற்குரிய கடமைகள் முடிந்தபின் புனிதமிக்க முபாரக்கான மதீனா முனவ்வராவுக்காக பயணம் செய்யும்போது, உங்களின் வழிகாட்டி உங்களிடம், அங்கே தொழுவதற்காகத்தான் பயணம் செய்கிறோம் என்றுதான் நிய்யத்து வைக்க வேண்டுமேயல்லாது ஸியாரத்திற்காக நிய்யத்து வைக்கக் கூடாதென்று சொல்வாராயின் அவர் ஒரு மார்க்கத் திருடன் என்பதைப் புரிந்து கொண்டு நீங்கள் ஸியாரத்திற்காக பயணம் செய்கிறேனென நிய்யத்துச் செய்யுங்கள்.

புனிதமிகு மதீனா முனவ்வராவுக்கு போய் சேர்ந்ததும் அங்கே அதிகமாக ஸலவாத்தை ஓதுங்கள். மதீனா முனவ்வராவின் மஸ்ஜிதான ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் இல்லத்திற்கு எப்போது சென்றாலும் மிகவும் மரியாதையோடு அங்கே நடந்து கொள்ளுங்கள். பணிவோடும் உள்ளச்சத்தோடும் அங்கே நுழையும் போது நபியவர்கள் நம்மை எப்போதும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்னும் திடமான எண்ணத்தை மனதில் இருத்திக் கொண்டவர்களாக நுழையுங்கள்.

பின்னர் சர்வ பிரபஞ்சங்களுக்கும் அருட்கொடையான ஸர்காரே தோ ஆலம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் குடி கொண்டிருக்கும் புனிதமிக்க ரௌழா ஷரீபுக்கு முன் நின்று அஸ்ஸலாமு



அலைக்கும் யா ஸெய்யிதீ யா ரஸூலல்லாஹ்! எனத் தனக்கு தெரிந்த வார்த்தையில் எத்தனைமுறை வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். பின்னர் ஹழ்ரத் ஸெய்யிதுனா ஸித்தீகுல் அக்பர், ஸெய்யிதுனா உமர்பாரூக் ரழியல்லாஹு அன்ஹுமா ஆகிய இருவருக்கும் ஸலாம் சொல்லிக் கொள்ளுங்கள். அதன்பின் உங்களின் குடும்பத்தார், உற்றார், உறவினர், மற்றும் வஸிய்யத்துச் செய்தோர் சார்பாகவும் ஸலாம் சொல்லிக் கொள்ளுங்கள்.

உங்களின் பயணம் முதல் பயணமாக இருக்குமாயின் உங்களுடைய ஜமாஅத்தோடு நுழைந்தாலும் மேற்கண்ட விஷயங்களை நிறைவேற்றுவதோடு மிகவும் அடக்கமாகவும், ஒடுக்கமாகவும் எக்காரணத்தைக் கொண்டும் உங்களின் சப்தத்தை உயர்த்தாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அதன்பின் இயன்றவரை தொழுது கொள்ளுங்கள். இன்னும் ரௌழா ஷரீபின் அருகில் அமையப் பெற்றுள்ள ஜன்னத்துல் பகீஃ சென்று அங்கே வாழ்ந்து கொண்டிருப்போருக்கும் ஸலாம் சொல்லிக் கொள்ளுங்கள்.

இன்று மதீனா முனவ்வராவில் பணிவிடைக்காரர்களெல்லாம் வழிகாட்டிகளாகி விட்டனர். ரௌழாவை முன்னோக்கி கைகளை உயர்த்தி பிரார்த்திக்க முற்பட்டாலும் அதைத் தடுப்பதற்காக இரவு பகலாக கூலிப்படைகள் அதற்காக ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். ஆதலால் உங்களது தொழுகையில் அதிலும் ஸுஜூதில் உங்களுக்காகவும், உற்றார் உறவினருக்காகவும், ஊர் மக்களுக்காகவும், நாட்டுக்காகவும், அனைத்து முஃமினான முஸ்லிமான ஆண் பெண்களுக்காகவும் அந்த நபியின் பொருட்டால் என்பதைவிட, அந்த உத்தமத் தூதர் ஈருலக ரட்சகர் அருளின் முழுவடிவம் நமது உயிர்களின் நாடியும் ஆதாரமுமான அகில உலகின் வேந்தர் அருமை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் நேரடியாகவே (அரபிமொழி தெரியாதோர் வாயை அசைக்காமல் மனதால்) கேட்டுக் கொள்ளுங்கள். அல்லாஹ்வும் அவனது ரஸூலுமே அனைத்தையும் நன்கு அறிந்தவர்கள்.

யா அல்லாஹ்! உனது ஹபீபுடைய பொருட்டால் இச்சிறிய சேவையை ஏற்றுக் கொள்வாயாக. இதைக்கொண்டு அனைவரும் பயன்பெற தௌபீக் செய்வாயாக. அல்லாஹ்வின் இனிய வேந்தரே! இரஸூலே! நாயகமே! உங்களின் புனிதப் பாதம் பட்ட அப்புனித மண்ணை நுகர்வதற்கும் முத்தமிடுவதற்கும் அருள் புரிவீர்களாக. உங்களின் மகத்துவத்தையும் மகோன்னதமான நிலையையும் மாண்பார்ந்த சிறப்பையும் இயன்றவரை எங்களால்

எங்களின் சமுதாய மக்களிடையே கொண்டுசென்று சேர்ப்பதற்கு சரி சொல்வீர்களாக. ஆமீன் ஆமீன் யாரப்பல் ஆலமீன்.

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
யாரப்பி ஸல்லி அலைஹி வஸல்லிம்.